உ

ஸ்ரீ ராமஜெயம்.



ஸ்ரீ ஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன ஹனுமத் ஸமேத
ஸ்ரீ ராமச்சந்திராய பரப் பிரம்மணே நம:

பார்கவ ஸம்ஹிதையான

# "ஸ்ரீ ஸீதாராமீயம்"

என்கிற

## ஸ்ரீமத்வால்மீகி ராமாயண ஸாரஸங்கிரஹம்.


திருப்பூர் கமலானந்தா பிரஸ்ஸில்
பதிப்பிக்கப்பட்டது.

1939.


இதன் விலை] [ [redacted]
5.00

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| i | 12 | பிரகாசிக | பிரகாசக |
| iv | 12 | அம்மாப்பேட்டை | சிதம்பரம் |
| vii | 9 | | பிர்ம்மஸ்ரீ C.S. முத்துஸாமி அய்யர் என்று சேர்க்கவும் |
| vii | 11 | முத்துஸாமி அய்யர் | S. N. வெங்கடேச அய்யர், S.R. ஸேதுராமய்யர் |
| viii | 18 | பட்டிஸ்ரீ | பட்டஸ்ரீ |
| 3 | 21 | மானிஷாதா | மானிஷாத |
| 4 | 20 | அதால் | ஆதலால் |
| 4 | 30 | சத்ருக்னன்மூலம் | அந்தகானமான |
| 6 | 22 | பிர்ம்மனிடம் | இந்திரனிடம் |
| 7 | 30 | கோசலை | கௌஸலை என்று எங்கும் வைத்துக்கொள்ளவும் |
| 11 | 26 | எனது | என்று |
| 13 | 26 | சொன்னார்கள் | சொன்னார் |
| 23 | 18 | ராமா | இப்படிவரும் இடங்களில் ராம என்றுபடிக்கவும் |
| 27 | 23 | அவர்களை | அவரை |
| 28 | 8 | அப்பாவும் | அம்மாவும் |
| 29 | 15 | சீதா | சீதே |
| 36 | 36 | கோசலை | கௌஸல்யே |
| 39 | 21 | அவர்கள் | அவர் |
| 40 | 11 | நி | நீ |
| 41 | 32 | செப்ய | செய்ய |
| 43 | 11 | எதிராள் | எதிராளி |
| 44 | 22 | மறைந்தன் | மறைந்தார்கள் |
| 53 | 10 | அவச்யமானால் | நான் |
| 55 | 21 | வரப்போனேன் | வரப்போனேன் |
| 55 | 36 | முறிக்கவேண்டுமென்று அதைபிடிக்க | முறிக்க உடனே அகல்தியாது வில்லால் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 56 | 14 | நாடகங்களில் | கிரந்தங்களில் |
| 57 | 26 | கேடுவரும்பின்னே | மதிகெட்டுவரும்முன்னே |
| | | என்ற வாக்கியப்படி— | இந்தவரிகிடையா |
| 59 | 22 | சொன்னஉம்மு<br>டைய நாக்கை | சொன்ன உம்மை |
| 64 | 2 | நினைத்தால் நான்<br>மோக்ஷத்தை அடைவேன் | எப்பொழுதும் நினை<br>துக்கொள்ளு |
| 64 | 11 | கேட்டது | கேட்டான் |
| 71 | 10 | பிராதாவுமான | பிராதாஎன்ற வியாஜமுன் |
| ,, | 12 | ஸுக்ரீவன்முதலில் | ஸுக்ரீவன் அகஸ்தியர்சொ<br>ன்னகதையை முதலி |
| ,, | 18 | ஜனித்து | ஜனிக்க |
| 72 | 31 | சென்றுவிட்டனர் | சென்றபிறகு |
| 74 | 19 | ராக்ஷசர்கள் —எண்ணுடன் | இதுகிடையாது |
| 77 | 13 | தான் இக்கூட்டை | தான் துந்துபியை |
| ,, | 23 | இந்தமரம் | ஒவ்வொருமரமும் |
| ,, | 24 | இந்தமரத்தை | இதில் ஒருமரத்தை |
| 82 | 10 | ராமபாணம் | உமதுபாணம் |
| 83 | 2 | சிதேவியுடன் | சசிதேவியுடன் |
| 92 | 16 | தாங்கி | தங்கி |
| 97 | 6 | வேதாந்தங்கள் | வேதாங்கங்கள் |
| 111 | 26 | பௌருஷத்தை | பொருஷத்தை எங்குமிப் |
| 120 | 34 | பிராக்கட்டில் உள்ள வரி இல்லை | |
| 132 | 19 | கத்தியை | சக்தியை |
| 142 | 28 | பூர்த்தியாகிவிட்டதால் | பூர்த்தியாகிறதால் |
| 148 | 8 | கேட்கப்பட்டால் | கேட்டதால் |
| 156 | 3 | புத்தி எங்கெந்த | புத்திஎதெதில் எங்கெந் |
| 197 | 19 | ன்தாராம | ஸீதாராம |

உ

ஸ்ரீராமஜெயம்.

# நமது ஆப்தர்களான ஸ்னேகிதர்களுக்கு ஓர் விக்ஞாபனம்.

---

..ன்பர்களே!

இப்பொழுது அச்சடித்திருக்கிற இப்புஸ்தகத்தில் அனேகம் ..ழைத்திருத்தம் செய்யப்பட்டிருப்பது கண்டு இவர் போடும் ..ஸ்தகத்தில் இப்படி இருக்காதே, இது ஏதோ காரணமென்றே ..ங்கள் எண்ணலாம் அது வாஸ்தவமே. நாம் ஊரில் இல்லாத ..பாது இப்புஸ்தகம் அச்சடிக்கப்பட்டதாலும் ஒருஸமயத்திலும் ..ன் நேரிட புரூப்பார்க்க முடியாமல் போய்விட்டதினாலும் எல் ..ரம் அச்சானபிறகே நான் பார்க்கும்படி நேரிட்டதாலும் இப்படி ..ற்பட்டது. அடுத்த இரண்டாவது எடிஷனில் இவ்விதம் இல் ..ாமல் இருக்கும் என்றும் ஞாபகப்படுத்துகிறோம். தவிர இன் ..ாம் மூன்று மாதத்திற்குள் ஸ்ரீமத் வால்மீகி முனிஹ்ருதய தத்வ ..லாரபிரகாசிகை என்ற ஸ்ரீமத் வால்மீகி ராமாயண ஸித்தாந்தம் ..ான்ற புஸ்தகம் வெளிவருவதால் அதில் ஒவ்வொரு இடத்திலும் ஆதாரச்லோகங்களுடன் ஸகலத்தையும் ஸித்தாந்தம் செய்து இருக்கிறோம். ஆதலால் நமது மித்ரர்கள் ஸகலரையும் மற்றவர்க ..ளும் நாம் பிரசுரிக்கும் ஸர்வ புஸ்தகங்களுக்கும் ஆதரவாய் இருக் ..கும்படி தெரிவித்துக்கொள்ளுகிறோம். பேப்பர் விலை ஜாஸ்தியா ..யிருப்பதால் இப்புஸ்தகம் (12) அணு வீதம் விற்கும்படி ஏற்பட்டு விட்டது. இக்கிரந்தத்திலும் ஸித்தாந்த புஸ்தகத்திலும் கவிஹ் ருதயம் வெளியாவதால் ஸ்ரீமத் ராமாயணத்தில் அபிமானமுள்ள ஸகலரும் இவ்விரண்டையும் படித்தால் கவிஹ்ருதயத்தைத் தெரிந் துகொள்வதுடன் ராமாயண மஹிமையால் ஸ்ரீராமானுக்ரஹத் தை அடையலாம் என்றும் ஞாபகப்படுத்துகிறோம்.

மேலும் பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகள் ஆராய்ச்சித் திறமையைசில
கித்து இருக்கும் மற்றும் சில பெரியோர்களுடையவும் இதில்
சேர்க்க விட்டுப்போயிருக்கும் பலர் நாமதேயங்களும் அடுத்
எடிஷனில் வெளிவரும் என்றும் ஞாபகப்படுத்துகிறோம்.

இந்த ஊரில் இருந்து இக்கிரந்தத்தை வெளிப்படுத்துவதற்கு
ஒவ்வொரு காரியத்திலும் மிகவும் அனுகூலமாயிருந்துவரும் காட
டன்மார்க்கெட் கமிட்டி ஸெக்ரிடரி மகா-ா-ா-ஸ்ரீ கச்சபேஸ்வ
அய்யர் அவர்களுக்கும் இக்காரியத்தைச் செய்ய முன்பணம் கெ
டுத்து உதவிசெய்து இக்கிரந்தத்தை அச்சுப்போட ஆரம்பித்
வைத்த மகா-ா-ா-ஸ்ரீ ஜி. வி. ஸுப்ரமணிய அய்யர் பார்டனர் சி
பரம் செட்டியார் அண்டு ஸன்ஸ் அவர்களுக்கும் வக்கீல்குமாஸ்,
மகா-ா-ா-ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அய்யர் ஓடக்காடு அவர்களுக்
எஸ். எஸ். எஸ். மண்டி கிளார்க்கு மகா-ா-ா-ஸ்ரீ என். ன
தீஸ்வர அய்யர் அவர்களுக்கும் மற்றவிதத்தில் உபகாரமாயிருந்
மற்றவர்களுக்கும் இக்கிரந்தத்தை அச்சிடுவதில் அபிமான
கொண்டு அச்சுப்போட்டுக்கொடுத்த கமலாநந்தா பிரஸ் புரொப்
ரைட்டர் மகா-ா-ா-ஸ்ரீ எஸ். பிச்சையா பிள்ளை அவர்களுக்கு
நமது மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகிறோம்.

இப்படிக்கு,

சிறுகுடி பிர்ம்மஸ்ரீ ராமாயணம்

**ஸீதாராம சாஸ்திரிகள்.**

ஓம்:

ஸ்ரீ ராமஜெயம்.

ஸ்ரீ ஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன ஹனுமத் ஸமேத
ஸ்ரீ ராமச்சந்திராய பரப் பிரம்மணே நம:

பார்க்கவ ஸம்ஹிதையான "ஸ்ரீ ஸீதாராமீயம்"

என்கிற

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயண ஸாரஸங்கிரஹம்.

---

சிறுகுடி பிர்ம்மஸ்ரீ ராமாயணம் சாம்பசிவ சாஸ்திரிகள் அவர்கள்
புத்திரரான, பண்டித ஸ்ரீ ராமகதாமிர்தவர்ஷக ஸ்ரீ ராமாயண
விமர்சகாசார்ய ஸ்ரீவால்மீகிமுனிஹிருதய தத்வஸாரப்ர
காசிக ஸ்ரீ ராமாயண சிரோமணி ஸ்ரீமத் வால்மீகி
ராமாயண பிரவசன சக்கரவர்த்தி சிறுகுடி

**பிர்ம்மஸ்ரீ ராமாயணம் ஸீதாராம சாஸ்திரிகள்**

அவர்களால் இயற்றப்பட்டது.

---

திருப்பூர் கமலானந்தா பிரஸ்ஸில் அச்சிடப்பட்டது.

---

# முகவுரை.

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணமானது பிரசேதஸான் வருணபக வானுடைய பத்தாவது பிள்ளை வால்மீகியினால் செய்யப்பட்டது. ஸர்வ லோகங்களும் க்ஷேமத்தை அடைவதற்காக உலகத்தில் எங்கும் பிரகடனம் ஆகும்பொருட்டு இக்கிரந்தத்தை இவர் ஸ்ரீ ராமனுக்கு இரட்டைக் குழந்தைகளாகப் பிறந்த குச லவர்களுக்கு உபதேசிக்க, அவர்கள் இதை ஸ்ரீ ராம சன்னிதானத்தில் கானம் செய்தார்கள். இது சாக்ஷாத் பிர்மத்தின் சரிதமாதலால் சகல பாபத்தையும் பரிகாரம் செய்யவல்லது. இது வேதமாதலால் நான்கு புருஷார்த்தங்களையும் கொடுக்கக்கூடியது. ஸ்ரீ ராமன் தன்னை அண்டின யாவருக்கும் ஏற்கனவே ஸாந்தானிக லோகத்தைக் கொடுத்திருக்கிறார். ஆதலால் இது இகத்தில் சகல போகங்களை அளித்து, பரத்தில் முக்தியையும் அளிக்கும். அனுபவத்தில் இக்கிரந்தத்தை வாசித்த அநேகம் பக்தர்கள் புத்திரப்பிராப்தி அடைந்திருக்கிறார்கள். ஆதலால் இது அனுக்கிரக கிரந்தம் என்பது உண்மையே. அனுபவ கிரந்தத்தை அனுபவத்தால் தான் தெரிந்துகொள்ள முடியுமாதலால், இக்கலியிலும் அநேகர் அந்த பகவானிடத்தில் பக்தியுடனிருந்து பகவத் பாதாரவிந்தத்தையும் அடைந்திருக்கிறார்கள். இக்கிரந்தத்தைப் பாராயணம் செய்தால் உடனே மழை பெய்வது பிரத்தியக்ஷப் பிரமாணம். ஆதலால் பகவத் பக்தியுள்ள சகலரும் பக்த சம்ரக்ஷண நிமித்தம் பூலோகத்தில் அவதரித்து, அண்டினவர்களை சம்ரக்ஷித்தும், சத்தியத்தைக் காப்பாற்றியும் விளங்கின பகவானிடத்தில் பக்தியைச் செலுத்தி, அவருடைய கலியாண குணங்களான அவருடைய இக்கதையை வாசித்து ஸ்ரீ சீதா ராமர்களுடைய கிருபைக்கு பாத்திரபூதர்களாகும்படி கேட்டுக்கொள்கிறோம்.

இப்படிக்கு,

சிறுகுடி பிர்ம்மஸ்ரீ ராமாயணம்

**சீதாராம சாஸ்திரிகள்.**

ஸ்ரீராமஜெயம்.

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் மானது நாரதரால் வால்மீகிக்கு அனுக்கிரகம் செய்யப்பட்டதால், அந்த அனுக்கிரகத்தாலும், பிரம்மதேவர் கிருபையாலும், நடந்த ராமகதை, அப்படி அப்படியே வால்மீகிக்குத் தெரிய அவர் அதை 24000 சுலோகங்களாகச் செய்தார். அப்படி பிரம்மதேவர் அனுக்கிரகத்தால் செய்யப்பட்ட அக்கதை சர்வ பாபத்தைப்போக்கிப் புண்ணியத்தை அளித்து, பக்தர்களிஷ்டத்தை பூர்த்திசெய்கிறது. அனுக்கிரக கிரந்தத்தை அனுக்கிரகத்தால்தான் அடைய முடியும். இக்கதையில் காணப்படும் ராகவ குணங்களுக்கு மாத்திரை குறைவில்லாமல் அதைப் பிரவசனம் செய்யும்பொருட்டு பிதாவான குருவின்மூலம் சிறுகுடி பிர்ம்மஸ்ரீ ராமாயணம் சாம்பசிவ சாஸ்திரிகள் குமாரரான சீதாராம சாஸ்திரிகள் அத்யயனம் செய்ய, பூர்வவாசனையாலும், ராமானுக்கிரகத்தாலும் அவர் செய்த ஆராய்ச்சிகள் சிறப்புற்றிருக்க, அதை கண்ட குருவும் சந்தோஷித்து, 'இதை உலகத்தில் பிரகடனம் செய்யலாம்' என்று ஆஞ்யாபித்தார். ஸ்ரீராம கல்யாண குணங்களை உலகத்தில் பிரகடனம் செய்வது ஸ்வதர்மமாதலாலும், இக்கிரந்தம் அதற்காகவே ஏற்பட்டதாலும், அது பலவிடங்களில் பிரகடனம் செய்யப்பட்ட காலங்களில் கீழ்வரும் பெரியோர்களால் இவர் ஆராய்ச்சியின் தன்மை சிலாகிக்கப்பட்டிருக்கிறது.

சென்னை:— மைலாப்பூர் பிர்ம்மஸ்ரீ Sir P. S. சிவஸ்வாமி அய்யர் K. C. S. I., C. I. E., ஸமஸ்கிருத கலாசாலை உபாத்தியாயர்களான பிர்ம்மஸ்ரீ லக்ஷ்மண சாஸ்திரிகள், பிர்ம்மஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகள், பிரசிடென்ஸி காலேஜ் அத்யாபகரான பிர்ம்மஸ்ரீ K. S. பாலசுப்பிரமணிய அய்யர் M. A., L. T., மந்தவெளி ரிடையர்ட் டிப்டி கலெக்டர் பிர்ம்மஸ்ரீ ஆற்காடு ஸ்வாமிநாதய்யர், பச்சையப்பன் கலாசாலை ரிடையர்ட் இங்கிலீஷ் புரபஸர் பிர்ம்மஸ்ரீ S. K. யக்ஞநாராயணய்யர் M. A., பச்சையப்பன் கலாசாலை புரபஸர் மகாதேவய்யர் M. A., பண்டித பூஷண வித்வான் உ. வே. குமாரதாத்தாசாரியார், டீச்சர்ஸ் காலேஜ் புரபஸர் பிர்ம்மஸ்ரீ வீரராகவய்யர் M. A., L. T., P. S. ஹைஸ்கூல் பிர்ம்மஸ்ரீ ஸ்ரீனிவாச தீக்ஷிதர் B. A., மாம்பலம் ராமகிருஷ்ண மிஷன் ஸ்கூல் ஹெட்மாஸ்டர் உ. வே. வேதாந்த தேசிக அய்யங்கார், பண்டிதர்களான ஸாஹித்ய சிரோமணி பிர்ம்மஸ்ரீ K. S. ராமகிருஷ்ண சாஸ்திரி, வியாகர்ண

சிரோமணி பிர்ம்மஸ்ரீ கணேசசாஸ்திரி, மைலாப்பூர் அட்வகேட் பிர்ம்மஸ்ரீ A. சுவாமிநாதய்யர், ஜார்ஜ் டவுன் அட்வகேட் உ. வே. M. S. வரதாச்சாரியார், திருவல்லிக்கேணி ஹிந்து ஹைஸ்கூல் ரிடையர்ட் ஹெட்மாஸ்டர் பிர்ம்மஸ்ரீ சுப்பிரமணிய அய்யர், தினமணி ரிபோர்டர் பிர்ம்மஸ்ரீ வாஞ்சிநாதய்யர், மைலாப்பூர் அட்வகேட் பிர்ம்மஸ்ரீ P. N. அப்புசாமி அய்யர்.

விழுப்புரம்:— வக்கீல் பிர்ம்மஸ்ரீ P. S. வெங்கடேசய்யர், வக்கீல் உ. வே. V. S. வெங்கடாச்சாரியார்.

சிதம்பரம்:— மஹாமஹோபாத்யாய பிர்ம்மஸ்ரீ தண்டபாணி தீக்ஷிதர், வக்கீல் பிர்ம்மஸ்ரீ ஜகதீச அய்யர், அண்ணாமலை யூனிவர்சிடி பிரபஸர் பிர்ம்மஸ்ரீ V. G. ராமகிருஷ்ண அய்யர்.

அம்மாபேட்டை:— பிர்ம்மஸ்ரீ சபாபதி அய்யர், புதுக்கோட்டை யக்ஞ தீக்ஷிதர்.

சீர்காழி:— டெபுடி இன்ஸ்பெக்டர்,

மாயவரம்:— வக்கீல்கள் பிர்ம்மஸ்ரீ D. ரங்கநாதய்யர், R. N. ராஜகோபால அய்யர்.

கும்பகோணம்:— மஹாமஹோபாத்யாய அபிநவ பட்டாபிராம தர்க்க சாஸ்திராலங்கார வித்யாபூஷண உ. வே. R. V. கிருஷ்ணமாச்சாரியார், லேட் புரபஸர் பிர்ம்மஸ்ரீ சுந்தரராமய்யர், அவர் புத்திரரான மாஜி ஜில்லா ஜட்ஜ் பிர்ம்மஸ்ரீ K. S. ராமசாமி சாஸ்திரிகள், வக்கீல்கள் பிர்ம்மஸ்ரீ C. N. குருசாமி சர்மா, பிர்ம்மஸ்ரீ R. சுப்பிரமணிய அய்யர், பிர்ம்மஸ்ரீ T. S. குப்புஸ்வாமி அய்யர், பிர்ம்மஸ்ரீ T. R. அனந்தராமய்யர், பிர்ம்மஸ்ரீ N. கிருஷ்ணமூர்த்தி அய்யர், பாங்கு சேதுராமய்யர்.

தஞ்சாவூர்:— K. H. ஸ்கூல் ரிடையர்ட் First assistant பிர்ம்மஸ்ரீ M. மகாலிங்க சாஸ்திரிகள், K. H. ஸ்கூல் ரிடையர்ட் ஸம்ஸ்கிருத பண்டிதர் பிர்ம்மஸ்ரீ S. சுப்பிரமணிய சாஸ்திரிகள், K. H. ஸ்கூல் ஹெட்மாஸ்டர் பிர்ம்மஸ்ரீ சுந்தரம் அய்யர், உ. வே. ராமானுஜம் அய்யங்கார், ட்ரெயினிங் ஸ்கூல் ரிடையர்ட் ஹெட்மாஸ்டர் பிர்ம்மஸ்ரீ சுந்தரம் அய்யர், வக்கீல்கள் பிர்ம்மஸ்ரீ P. ராமஸ்வாமி அய்யர், பிர்ம்மஸ்ரீ ராதாகிருஷ்ணய்யர் உ. வே. வரதாசாரியார்,

உ. வே. E. வரத அய்யங்கார், உ. வே. K. R. ராஜகோபாலாச்சாரியார், ஜாயிண்ட் சப்ரிஜிஸ்திரார், உ. வே. V. சக்கரவர்த்தி ஆச்சாரியார், உ. வே. ஸர்ரம் ரங்காச்சாரியார், ஸரஸ்வதி மஹால் பிரதான வித்வான் சிரோமணி உ. வே. R. ரங்காச்சாரியார், தில்லஸ்தானம் ரிடையர்ட் ஹெட்கிளார்க் உ. வே. T. R. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்.

திருவையாறு:— ஸம்ஸ்கிருத கலாசாலை பிரின்சிபால் வித்யாரத்ன டாக்டர் பிர்ம்மஸ்ரீ P. S. சுப்பிரமணிய சாஸ்திரி M. A. Ph. D., L. T., கவர்ன்மெண்டு வக்கீல் பிர்ம்மஸ்ரீ V. சுப்பிரமணிய அய்யர், வக்கீல் உ. வே. ஸ்ரீனிவாச ராகவ அய்யங்கார், முன்சீப் உ. வே. R. T. கிருஷ்ணமாச்சாரியார்.

திருச்சி:— ரிடையர்ட் எஜுகேஷனல் ஆபீசர் பிரம்மஸ்ரீ K. V. சுப்பய்யர் M.A., L. T., M. R. A. S., நேஷனல் காலேஜ் பிரின்சிபால் உ. வே. சாரநாத அய்யங்கார், அதே காலேஜ் ஸம்ஸ்கிருத பிரபஸர் பிர்ம்மஸ்ரீ ராமவாசுதேவ சர்மா, M.A., B. L., அதே காலேஜ் உ. வே. M. G. வரதாச்சாரியார், ஆண்டார் வீதி வக்கீல்கள் பிர்ம்மஸ்ரீ N. ராமநாதய்யர், பிர்ம்மஸ்ரீ ராமராவ், திருச்சி நேஷனல் காலேஜ் ஸ்தாபகரும், கொஞ்சகாலம் மதுரை ஸம்ஸ்கிருத கலாசாலை பிரின்சிபாலாயிருந்தவருமான பிர்ம்மஸ்ரீ P. G. சுந்தரேச சாஸ்திரிகள் B. A., மிலிடரி அக்கவுண்டண்ட் பிர்ம்மஸ்ரீ K. V. சுந்தரம் அய்யர்.

துறையூர்:— வக்கீல்கள் பிர்ம்மஸ்ரீ சிவராமகிருஷ்ணய்யர், பிர்ம்மஸ்ரீ லக்ஷ்மணய்யர், பிர்ம்மஸ்ரீ கோபாலய்யர், உ. வே. லக்ஷ்மண அய்யங்கார்.

மதுரை:— அட்வகேட் பிர்ம்மஸ்ரீ ராவ்ஸாஹப் N. நடேச அய்யர், அட்வகேட் பிர்ம்மஸ்ரீ V. கிருஷ்ணஸ்வாமி அய்யர், வக்கீல் பிர்ம்மஸ்ரீ M. நாராயணஸ்வாமி அய்யர், தேவஸ்தானம் காலேஜ் பிரின்சிபால் பிர்ம்மஸ்ரீ V. சுப்பிரமணிய அய்யர் B.A., L.T., ஷை காலேஜ் சிரோமணி பிரம்மஸ்ரீ M. வெங்கடகிருஷ்ண சாஸ்திரிகள், ரிடையர்ட் போலீஸ் டிபுடி சூபரிண்டெண்டெண்ட் பிர்ம்மஸ்ரீ M. S. ராமஸ்வாமி அய்யர் B.A., M. R. A.S., ஸ்கூல் ஸம்ஸ்கிருத பண்டிதர் வியாகர்ண சிரோமணி பிர்ம்மஸ்ரீ கணேச சாஸ்திரிகள், ஸாஹித்ய சிரோமணி பிர்ம்மஸ்ரீ ராமகிருஷ்ண சாஸ்திரிகள்,

வக்கீல் பிர்ம்மஸ்ரீ V. வைத்தியநாதய்யர், பிர்ம்மஸ்ரீ ராகவ கனபாடிகள்.

கருப்பட்டி:— பிர்ம்மஸ்ரீ சுப்புவெங்கடரமணய்யர்.

திருவேடகம்:— பாடசாலை உபாத்தியாயர்.

தேவக்கோட்டை:— அட்வகேட் பிர்ம்மஸ்ரீ D. S. ராஜகோபால அய்யர், அட்வகேட் பிர்ம்மஸ்ரீ R. அருணசல அய்யர், வக்கீல்கள் பிர்ம்மஸ்ரீ N. S. சுப்பிரமணிய அய்யர், பிர்ம்மஸ்ரீ P. V. மகாதேவய்யர், பிர்ம்மஸ்ரீ S. கிருஷ்ணய்யர், பிர்ம்மஸ்ரீ E. S. சுப்பிரமணிய அய்யர், பிர்ம்மஸ்ரீ P. ராமஸ்வாமி அய்யர், பிர்ம்மஸ்ரீ S. R. கோவிந்த அய்யர்.

கந்தர்வகோட்டை:— பண்டித சாமிநாத சாஸ்திரிகள்.

ராமநாதபுரம்:— ராஜா ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர் உ. வே. T.S. வீரராகவாச்சாரியார், M. A., L. T., டிரெயினிங் ஸ்கூல் ஹெட்மாஸ்டர் பிர்ம்மஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யர் B. A., L. T.,

பரமக்குடி:— வக்கீல்கள் உ. வே. துரை, உ. வே. S. ஸ்ரீனிவாச அய்யங்கார், உ. வே. N. S. சௌம்யநாராயண அய்யங்கார், பிர்ம்மஸ்ரீ M.S. வெங்கடராமய்யர், சப்ரிஜிஸ்திரார் ஆபீஸ் ஹெட்கிளார்க், உ. வே. K. ஸ்ரீனிவாச அய்யங்கார்.

கோவில்பட்டி:— வக்கீல்கள் பிர்ம்மஸ்ரீ K. R. ராமகிருஷ்ணய்யர், பிர்ம்மஸ்ரீ K. கோவிந்தய்யர், ஒரிசொல் பிர்ம்மஸ்ரீ சங்கரநாராயணய்யர்.

தூத்துக்குடி:— கவர்ன்மெண்டு வக்கீல் பிர்ம்மஸ்ரீ N. நாராயணஸ்வாமி அய்யர், ஸபார்டினேட் ஜட்ஜ் பிர்ம்மஸ்ரீ L. S. பார்த்தசாரதி அய்யர்.

சேலம்:— வக்கீல் பிர்ம்மஸ்ரீ N. ராமமூர்த்தி அய்யர்.

ஈரோடு:— வக்கீல்கள் பிர்ம்மஸ்ரீ ஸ்ரீகண்டய்யர், பிர்ம்மஸ்ரீ K. V. சுப்பரத்னம் அய்யர், பிர்ம்மஸ்ரீ கணபதி சுப்பிரமணிய அய்யர், பிர்ம்மஸ்ரீ N. சுந்தரேசய்யர், பிர்ம்மஸ்ரீ E. R. சுப்பிரமணிய அய்யர்.

திருப்பூர்:— நஞ்சப்பா ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர் பிர்ம்மஸ்ரீ K. S. கிருஷ்ணமூர்த்தி அய்யர், B. A., L. T., காட்டன் மார்க்கெட் செக்ரடரி பிர்ம்மஸ்ரீ S. S. கச்சப்பேஸ்வர அய்யர்.

கோயமுத்தூர்:— ரிடையர்ட் செஷன்ஸ் ஜட்ஜ் பிர்ம்மஸ்ரீ R. S. சங்கரய்யர், ரிடையர்ட் போலீஸ் டெபுடி சூபரிண்டெண்டெண்ட் உ. வே. S. V. சீனிவாசர்சாரியார், B. A., விவசாயகலா சாலை ரிடையர்ட் வைஸ் பிரின்சிபால் ராவ்ஸாஹிப் உ. வே. S. V. ராஜகோபாலாசாரியார், அட்வகேட் பிர்ம்மஸ்ரீ கல்யாண சுந்தரம் அய்யர்.

சிங்காநல்லூர்:— பிர்ம்மஸ்ரீ ஸஹஸ்ரநாம அய்யர், வக்கீல் பிர்ம்மஸ்ரீ முத்துஸ்வாமி அய்யர்.

பாலக்காடு:— தாரக்காடு அட்வகேட் பிர்ம்மஸ்ரீ V. V. சுப்பிரமணிய அய்யர், வக்கீல் பிர்ம்மஸ்ரீ N. R. கிருஷ்ணய்யர், பாலக்காடு காலேஜ் பிரபஸர் பிர்ம்மஸ்ரீ C. V. நாராயணய்யர், திருச்சூர் பூங்குன்னம் பாலராம் மில்ஸ் பிர்ம்மஸ்ரீ பாலராமஅய்யர்.

எர்ணாகுளம்:— ரிடையர்ட் சீப் ஜட்ஜ் பிர்ம்மஸ்ரீ N. R. ஸஹஸ்ரநாமய்யர், ரிடையர்ட் சீப் ஜட்ஜ் ஸ்ரீமான் கரும்பட்ட அச்சுத மேனன்.

கள்ளிக்கோட்டை:— டாக்டர் பிர்ம்மஸ்ரீ N.S. வெங்கடாசல அய்யர்.

முசிரி:— பிர்ம்மஸ்ரீ கோபாலபட்டாச்சார்.

புதுக்கோட்டை:— ஸ்டேட் வக்கீல் உ. வே. R. சீனிவாசாசாரியார், ஸ்டேட் இஞ்ஜினீயர் பிர்ம்மஸ்ரீ ரங்கஸ்வாமி அய்யர், வக்கீல்கள் பிர்ம்மஸ்ரீ வெங்கடராம சர்மா, பிர்ம்மஸ்ரீ மகாலிங்க அய்யர், உ. வே. ராஜகோபால அய்யங்கார்.

சிவகங்கை:— ஹஸூர் சிரஸ்ததார் பிர்ம்மஸ்ரீ ராமசுப்பய்யர், கோர்ட் வக்கீல் பிர்ம்மஸ்ரீ C. V. நாகேஸ்வரய்யர், பிர்ம்மஸ்ரீ O. A. சீனிவாசய்யர், பத்தமடை அட்வகேட் பிர்ம்மஸ்ரீ P. R. நரசிம்மய்யர், திருப்பத்தூர் (Ramnad District) யூனியன் ஆபீஸ் உ. வே. சீனிவாச அய்யங்கார், வாணியம்பாடி திருப்பத்தூர்

போஸ்டல் இன்ஸ்பெக்டர் பிர்ம்மஸ்ரீ சுந்தரம் அய்யர், வக்கீல்கள் பிர்ம்மஸ்ரீ T. S. வெங்கடேச அய்யர், பிர்ம்மஸ்ரீ B. ராகவேந்திராச்சார், வேலூர் போஸ்டல் இன்ஸ்பெக்டர் பிர்ம்மஸ்ரீ ராஜகோபாலய்யர், அரியலூர் வக்கீல் உ. வே. N. R. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், நெரூர் பிர்ம்மஸ்ரீ N. K. ராமஸ்வாமி சாஸ்திரிகள், ஆவுடையார் கோவில் பிர்ம்மஸ்ரீ ஆத்மநாதய்யர், பொள்ளாச்சி வக்கீல் பிர்ம்மஸ்ரீ A. நடேசய்யர், சிதம்பரத்திலிருந்த வியாகர்ண சிரோமணி பிர்ம்மஸ்ரீ G. R. ராமசுப்பிரமணிய சாஸ்திரி, ஸாஹித்ய சிரோமணி பிர்ம்மஸ்ரீ R. ராமகிருஷ்ண சாஸ்திரி, நாகப்பட்டணம் வக்கீல்கள் பிர்ம்மஸ்ரீ K. வேதம் அய்யர், பிர்ம்மஸ்ரீ T. S. ராஜகோபாலய்யர், பிர்ம்மஸ்ரீ N. சாம்பசிவ அய்யர், பிர்ம்மஸ்ரீ சிவராமய்யர்.

மேலும் மகாதானபுரத்திலிருந்து, பிறகு சித்தியடைந்த பரமஹம்ஸரான ஸ்ரீ ராமானந்த சரஸ்வதிஸ்வாமிகள் இதை சிரவணம் செய்து மகிழ்ந்து இதைச் சீக்கிரம் வெளியிட அனுக்கிரகம் செய்தார்.

பிதாவாயும், குருவாயும், மகா வித்வானாகவும் விளங்குகிறவரும், பிரம்மஸ்ரீ பட்டி ஸ்ரீ நாராயண சாஸ்திரிகள் அவர்களுக்கு சிஷ்யராய் விளங்குபவரும், ஸ்ரீ ராமாயணத்தை வருஷத்திற்கு ஒரு பட்டாபிஷேகமாக 52 பட்டாபிஷேக பரியந்தம் செய்தவருமான சிறுகுடி பிரம்மஸ்ரீ ராமாயணம் சாம்பசிவ சாஸ்திரிகளுக்கு புத்திரரான சீதாராம சாஸ்திரிகளுடைய ஆராய்ச்சியை மேலே சொன்ன எல்லோரும் நேரில் கேட்டு அனுபவித்து இருப்பதாலும் இப்புத்தகமானது ஸ்ரீ ராகவ கல்யாண குணங்களை மாத்திரையும் குறைவில்லாமல் ஸ்தாபிப்பதாலும் இது சகலராலும் அங்கீகரிக்கத் தகுந்தது என்று பிரகடனம் செய்யப்படுகிறது.

இப்படிக்கு,
சீதாராம சாஸ்திரிகள்.

ஓம்.
ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயண ஸாரஸங்கிரஹம்.

## பாலகாண்டம்.

தபஸ்வியான வால்மீகி பகவான், தபஸ், அத்யயனம் முதலிய வைகளிற் சிறந்தவரான நாரதரைப் பார்த்து "இப்பொழுது இவ்வுலகத்தில் உத்தம குணமுள்ளவன் யார்? தர்மத்தை அறிந்தவன் யார்? ஒருவர் செய்த உபகாரத்தை மறக்காதவன் யார்? சத்திய நெறி தவறாதவன் யார்? திருடமான விரதமுடையவன் யார்? ஆரோக்கியமான சரீரம் உடையவன் யார்? சகல பூதங்களிடம் ஹிதபரனாயிருப்பவன் யார்? படித்தவன் யார்? எந்தக் காரியத்திலும் சமர்த்தன் யார்? தன்னை யறியக்கூடியவன் யார்? கோபத்தை ஜெயித்தவன் யார்? உத்தமகாந்தியுடன் கூடினவன் யார்? அஸூயை இல்லாதவன் யார்? பார்க்கப் பார்க்க இன்னும் பார்க்க வேண்டுமென்று ஆசை கொடுக்கக்கூடியவன் யார்? எவன் யுத்தத்தில் கோபங்கொண்டால் தேவதைகளும் பயப்படுவார்கள்? இப்படிப்பட்டவனை அறிய எனக்கு மிகவும் ஆவலாயிருக்கிறது. இப்படிப்பட்ட மனுஷ்யனை (ராகவன் தன்னை பரமாத்மா என்று அறியாமல் மனுஷ்யனாகவே பாவித்துக்கொள்ள வேண்டுமென்பது அவதாரத்தின் லக்ஷியம். பதினோராயிரம் வருஷம் முடிந்த மறுநாள், தான் புண்ணியலோகம் செல்லும் சமயத்தில்தான் ராமன் தன்னை பரமாத்மா வென்றறிந்தார். இக்கிரந்தம் ராமபட்டாபிஷேகமானதுமே எழுதப்பட்டு அவரிருக்கும்போது அவரெதிரிலேயே கானம் செய்யப்பட்டதால், ராமன் தன்னை பரமாத்மா வென்று அறியாமல் மனுஷ்யனாகவே எண்ணிக்கொண்டதாக ஸ்திரமாகிறது. ஆதலால் வால்மீகி ராமனைப் பரமாத்மா வென்று அறிந்தும் இங்கே 'மனுஷ்யன்' என்றார். இதன் விவரத்தை இந்தப் புத்தகத்தை எழுதிய சீதாராம சாஸ்திரிகளால் எழுதப்பட்ட மற்றொரு புத்தகமான சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்) நீர்

அறிவதற்கு சமர்த்தராயிருப்பதால் எனக்குச் சொல்லும்'' என்று கேட்டார்.

அதைக்கேட்ட, மூன்று லோகங்களையும் அறிந்த நாரதர், "உம்மால் சொல்லப்பட்ட குணங்களை உடையவன் அபூர்வமாயிருந்தாலும், அப்படிப்பட்ட மனுஷ்யனை நான் அறிந்து சொல்கிறேன்'' என்று சொல்லி, தன் ஞானத்தால் அறிந்துகொண்டு, "வால்மீகியே சொல்கிறேன். இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தவன். ராமன் என்ற பெயர் உள்ளவன். அவனுக்கு நீ சொன்ன குணங்கள் உண்டு'' என்று சொல்லி, நடந்ததும், நடந்துகொண்டிருக்கிறதும், நடக்கப்போகிறதுமான ஸ்ரீ ராம கதையை ஸங்கிரமமாய் நூறு சுலோகங்களில் சொல்லிவிட்டு, வால்மீகியால் பூஜிக்கப்பட்டு தேவலோகமடைந்தார். (இந்த முதல் ஸர்க்கம் குருசிஷ்ய பாவத்துடன் கூடியதல்ல. இதை சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்).

பிறகு வால்மீகி மாத்யானிக ஸ்நானத்திற்காகத் தன் சிஷ்யரான பரத்வாஜரோடு (இவர் ராமாதி, பரதாதிகளுக்கு உணவளித்த பரத்வாஜர் அல்ல) தமஸாநதிக்குச் செல்லும்பொழுது தனக்கு நாரதர் சொன்ன நூறு சுலோகங்களையும் மனதில் ஞாபகப்படுத்திக்கொண்டார். நதியில் தீர்த்தம் தெளிவாயிருப்பதைத் தன் சிஷ்யரிடம் குறிப்பிட்டு, அவரிடமிருந்து ஸ்நான வஸ்திரத்தை வாங்கிக்கொண்டு, ஸ்நானத்திற்கு சௌகரியமான இடத்தைத்தேடி சஞ்சரித்துக்கொண்டிருந்தார்.

அப்பொழுது பிர்மா தன் மாயையால் ஆணும் பெண்ணுமான இரண்டு க்ரௌஞ்ச பக்ஷிகளையும் ஒரு வேடனையும் சிருஷ்டித்து வால்மீகி பார்த்துக்கொண்டிருக்கும்போது வேடன் ஆண்பக்ஷியை அடிக்கும்படி செய்தார். அதனால் ஆண்பக்ஷி இறந்துவிட பெண் பக்ஷி கதறிற்று. அதைக் கண்ணாரக்கண்ட வால்மீகி அப்பக்ஷி விஷயத்தில் உண்டான கருணையால் எதிரில் நின்ற வேடனைப் பார்த்து ஒரு சுலோகத்தைச் சொன்னார். பிறகு "நான் சொன்னது என்ன? நான் வேடனைச் சபித்ததுபோல் தோன்றுகிறதே! இது உண்மையா? என் வாக்கில் இப்படி வரலாகுமா? சோகத்தில் வந்த இது சோகமாய் ஆகாமல் சுலோகமாய் ஆகட்டும்'' என்று சொல்லித் தன் வாக்கில் வந்ததற்கு இன்னதுதான் அர்த்தம் என்று தெரியாமல் கவலைப்பட்டுக்கொண்டு, மாத்யானிக ஸ்நான

அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, தன் ஆசிரமத்தையடைந்து அதே துக்கத்துடன் இருந்தார். அப்பொழுது பிரமன் அவர் கவலையை நீக்க அவர் எதிரில் தோன்றி, "உமது வாக்கில் வந்த சுலோகம் என் ஆக்ஞையால் வந்தது. நீர் கவலைப்படவேண்டாம் நீர் சொன்னதில் தவறுதலே கிடையாது. அதற்கு அர்த்தம் என்னவென்றால்:— 'ராவணன், மந்தோதரி என்று பெயர் உள்ள இரண்டு பக்ஷிகளில் ராவணனுகிற ஆண்பக்ஷியைக்கொன்ற லக்ஷ்மியாகிற சீதையைப் பத்தினியாக உடைய வேடரூபமாய் இருக்கும் ஏ, ராமா! நீர் துஷ்டனைக் கொன்றபடியால் நீடித்த காலம் க்ஷேமமாய் இருப்பீர்' என்பதே. இது ஆசீர்வாத வாக்கியமே தவிர வேறல்ல. இக்கதை எப்படி எப்படி நடந்ததோ அப்படியப்படியே உமக்கு சகலமும் தெரியுமாதலால், நீர் கதையைச் செய்யும்" என்று சொல்லி மறைந்தார்.

பிரம்மதேவர் அனுக்கிரகத்தால் வால்மீகி சகலத்தையும் நடந்தபடி அப்படியே யோகத்தால் கண்டு 24000 சுலோகங்களாகவும், 500 சர்க்கங்களாகவும், ஏழு காண்டங்களாகவும் செய்து (இதில் செய்த சுலோகங்கள் 24536ம், சர்க்கங்கள் 658ம், காண்டங்கள் ஏழும் என்று சித்தாந்தம். ராமாயணம் காவியம் அல்ல. இதற்கு வியங்கிய, த்வனி, யுக்தி, விசேஷார்த்தங்கள் கிடையாது. காவியம் என்ற பதத்திற்கு கதை என்றுதான் அர்த்தம். எல்லா சுலோகத்திற்கும் ஒரே அர்த்தம். மானிஷாதா என்ற சுலோகமும் அப்படியே. ராமாயணம் வேதம். உத்தரகாண்டம், பாலகாண்டம் இரண்டும் வால்மீகியே செய்தது. இவைகளைச்சித்தாந்த புஸ்தகத்தில் பார்க்கவும்— தவிர பிரக்ஷிப்த அதிக பாடங்கள் என்று பல பெரியோர்களாலும் போடப்பட்டாலும், அவை பிரக்ஷிப்த அதிக பாடங்கள் அல்லவென்று சித்தாந்தம்) இவைகளை எப்படி உலகத்தில் பிரகடனம் செய்வது என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்.

இப்படி பத்தாயிரம் வருஷங்கள் ஆகிவிட, ஸ்ரீராமன் சீதையுடன் பத்தாயிரம் வருஷங்கள் சகல போகங்களையும் அனுபவித்த பிறகு சீதை நிமித்தமாக ஸ்ரீராமனுக்கு உலகத்தில் அபவாதம் உண்டாக, (இவ்விஷயத்தை சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்) அவளை ஸ்ரீராமன் லக்ஷ்மணன் மூலமாக வால்மீகி ஆசிரம சமீபத்தில் தியாகம் செய்தார். அவளைக்கண்டு வால்மீகி தன் ஆசிரமத்

திற்கு அழைத்துச்சென்றார். இரண்டு மாதத்திற்கெல்லாம் அவள் இரட்டைக் குழந்தைகளைப் பெற்றாள். அவர்கள் சரியான வயது அடைந்ததும் வால்மீகி அவர்களுக்கு உபநயனம் செய்து, வித்தியாப்பியாசங்களைக் கற்றுக்கொடுத்தார்.

வால்மீகி பிறகு ஒருநாள் தான் செய்த கிரந்தமான ஸ்ரீ ராம கதையை எவ்விதம் வெளிப்படுத்துவது என்று யோசித்துக் கொண்டிருக்கும்போது குழந்தைகள் வந்து அவரை வணங்க, அவர் அவர்களை ஸ்வீகரித்துக்கொண்டு, இக்கதையை அவர்களுக்குச் சொல்லிக்கொடுத்தார். பிர்ம்மமே ஸ்ரீ ராமனாதலால், அது அவ்யக்தமாதலால், அக்ஷரமாதலால், ஆகாசமாதலால் அது, சம்ரக்ஷணத்திற்காக ஸகுண ரூபமான விஷ்ணு ரூபத்துடன் விளங்க, அந்த ரூபத்தை தேவதைகள் பிரார்த்திக்க, அங்கப் பிரார்த்தனைக்காக பிர்ம்மதேவனுடைய சிருஷ்டிக் கிரமத்தில் கட்டுப்பட்டு ஸ்ரீ ராமன் என்ற பெயருடன் அவதரித்து விளங்கிவரும் ஸ்ரீராம பிர்ம்மத்தின் கதை அந்த ஸ்ரீமத் ராமாயண மாதலால், அது வேதமே தவிற காவிய இதிகாசங்கள் அல்ல (இதை சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்) . ஆதலால், இது ராம பிர்ம்மத்தின் கதையாதலால், பிர்ம்மத்தினுடைய கலியாண குணங்களுடன் கூடின தேதவிற வேறு வேதாந்தாதி அர்த்தங்கள் கிடையாது (இதையும் சித்தாந்த புத்தகத்தில் பார்த்துக்கொள்ளவும்) ஆதால் இதில் ஒரு சுலோகத்தின் ஒரு பாதத்தைச் சொன்னாலும் பாபத்தைப் போக்கக்கூடியது.

இவ்விதம், சிறப்புற்றிருக்கும் ஸ்ரீமத் ராமாயணமாகிற வேதத்தை அவர்களுக்குச் சொல்லிக்கொடுத்து, அதை எங்கும் கானம் செய்யும்படி ஆஞ்யாபித்தார். அப்படியே அவர்களும் ஸ்வரத்துடன் கூடின அக்கிரந்தத்தை தாளத்துடனும், லயத்துடனும் தம்பூர் சுருதியில் கானம் செய்துகொண்டுவர, ஸ்ரீராமன் யாகம் செய்வது கேட்டு, "அங்கு சென்று கானம் செய்யுங்கள்" என்று வால்மீகி சொன்னார். குழந்தைகள் அங்கும் சென்று வீதிகளில் கானம்செய்துகொண்டுசெல்ல, சத்ருக்னன் மூலம் கதாவிருத்தாந்தத்தைக் கேட்டு, ஸ்ரீ ராமன் குழந்தைகளைக் கூப்பிட்டு கானம் செய்யச்சொல்ல, 12 வயதுள்ள அவர்களும் கடைசிபரியந்தம் ஸ்ரீ ராமனைத் தெரிந்துகொள்ளாமலே (முதல் ஸர்க்கம் முதல் வால்மீகியே செய்தார். சப்த காண்டங்களையும் அவரே

செய்தார்— இதை சித்தாந்த புத்தகத்தில் பார்க்க) தினம் 20 ஸர்க்கங்களாக 27 தினங்களில் கானம் செய்து, பிறகு உத்தர காண்டத்தை பூர்வபாகம், உத்தரபாகம் என இரண்டு பாகங்களா கப் பிரித்துக்கொண்டு, அவைகளையும் தினம் 20 ஸர்க்கங்களாகவே கானம்செய்து உத்தரபாகத்தைக் கானம் செய்ய ஆரம்பித்தபோது ஸ்ரீ ராமனைப் பிதா என்றறிந்து, கானம் செய்து முடித்தார்கள். இப்படிக் குழந்தைகள் கானம்செய்த கதையை பதினாயிரம் வயது டைய பிதா முதலிய சகலரும் கேட்டார்கள்.

முன்காலத்தில் இந்த பூமியானது பிரஜாபதியை முன்னிட் டுக்கொண்டு அநேக ராஜாக்களுடன் விளங்கியது. இக்ஷ்வாகு வம்சத்தில் உண்டான ஸ்ரீ ராமாயணம் என்ற பெயரை யுடைய இதை நாங்கள் கானம் செய்கிறோம். இது தர்மகாமார்த்தத்துடன் கூடினது. (இது சத்தியத்தையும், தர்மத்தையும் பிரதானமாகக் கொண்டது. சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்). அருவை இல்லா மல் கேட்கத்தகுந்தது. சரயூ என்ற நதிக்கரையில் கோசலம் என்ற ஒரு தேசம் சகல சம்பத்துடன் விளங்கிவந்தது. அதில் 14 யோசனை நீளமும் 3 யோசனை அகலமு முள்ள அயோத்தி என்ற ஒரு அழகிய பட்டணம் உண்டு. அதற்கு ஸத்யம் என்ற மற்றொரு பெயரும் உண்டு. அது சகல யந்திராதிகளுடன் கூடினது. அநேகம் வீரர்களுடனும், பல பெரியோர்களுடனும், சகலஜாதி வர்க்கங்களுடனும் கூடினது. அது மனுவினால் நிர் மாணம் செய்யப்பட்டது. அதில் அநேகர் பரம்பரையாய்ப் பரிபாலித்துக் கடைசியில் தசரதர் என்ற ஒரு அரசன் ஆண்டுவந் தார். அவர் திருஷ்டி, ஜயந்தன், விஜயன், சுத்தார்த்தன், அர்த்த சாதகன், அசோகன், மந்திரபாலன், சுமந்திரன் என்று எட்டு மந் திரிகளுடனும், வசிஷ்டர், வாமதேவர் முதலிய ஆசாரியர்களுட னும் அயோத்தியில் இருந்துகொண்டு நீதிதவறாமல் பிரஜைகளைப் பரிபாலித்துக்கொண்டிருந்தார். இப்படி அறுபதினாயிரம் வரு ஷங்கள் இருந்தும் குழந்தைகள் இல்லாததால், கவலையடைந்து, வசிஷ்டாதி பெரியோர்களை அழைத்து, "பிள்ளையில்லாததால் நான் மிகவும் வருத்தப்படுகிறேன். நீங்கள் எனக்கு யாகத்தைச் செய்வித்துக் குழந்தையை நான் அடையும்படி செய்யவேண்டும்" என்று பிரார்த்திக்க, அவர்களும் அதை அங்கீகரித்து, "நாங்கள் உமக்கு யாகத்தைச் செய்விப்போம். உமக்கு நான்கு குழந்தை கள் பிறக்கப்போகிறார்கள்" என்று ஆசீர்வதித்துச் சென்றனர்.

பிறகு தசரதன் அந்தப்புரத்தை யடைந்து கௌசல்யாதி மூன்று பத்தினிகளையும் பார்த்து, "நான் பிள்ளைக்காக யாகம் செய்யப்போகிறேன். அதற்காக தீக்ஷை அடையப்போகிறேன். நீங்களும் என்னுடன் நியமமாய் இருங்கள்" என்று சொல்ல, அவர்களும் சந்தோஷமடைய, அவர்களுடன் தனித்திருக்கும் போது, மந்திரியான சுமந்திரன் வந்து, தேவலோகத்தில் சனத்குமாரரால் சொல்லப்பட்டதான தசரதருக்குப் பிள்ளை பிறக்கப் போகிற கதையை அவருக்கு வெளிப்படுத்தினன். மேலும், 'தசரதன் ரோமபாதன் பெற்ற பெண்ணான சாந்தையின் (இந்த சாந்தை யார் பெண் என்ற விருத்தாந்தத்தை சித்தாந்த புத்தகத்தில் பார்க்க) பர்த்தாவான ரிஷியசிருங்கரை அழைத்துவந்து யாகம்செய்து புத்திரப்பிராப்தி யடையப்போகிறான்' என்றதையும் கேட்ட தசரதன் வசிஷ்டர் அனுமதிபெற்று, ரிஷியசிருங்கரையும் அழைத்துவந்து, மகாயாகமான அசுவமேத யாகத்தைச் செய்து, பிறகு புத்திரகாமேஷ்டி யாகம் செய்யும்போது, அதில் ஹவிர்ப்பாகம் வாங்கவந்த தேவதைகள் ஆகாச வீதியில் இருந்துகொண்டு, ராவண வதத்திற்காகப் பிரம்மாவைப் பிரார்த்தித்தனர். பிரம்மதேவன் அவர்களைப் பார்த்து, "ஏ, தேவதைகளே! அவனுக்கு மனுஷ்யனால்தான் வதமே தவிற மற்றவிதத்தில் வதம் இல்லை" என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது, "சமயம் வரும்போது நானாகவந்து தரிசனம் கொடுத்து ரக்ஷிக்கிறேன்" என்று ஏற்கனவே பிரம்மனிடம் சொல்லியிருக்கும் விஷ்ணு, அவர்களுக்கு தரிசனம் கொடுத்தார். உடனே தேவதைகள் அவரைப் பார்த்து, "ஏ, பிரபோ! தேவதா சத்துருக்களுடைய வதத்திற்காக, உம்மையே நான்கு பாகங்களாகச் செய்துகொண்டு நீர் பூலோகத்தில் ஜனித்து, உம்மை நீர் அறியாமலே இருந்து ராவணாதிகளைக்கொல்லவேண்டும்" என்றுகேட்க (ராமன் புண்ணியலோகம் செல்லும் பரியந்தம் தன்னை விஷ்ணுவாக அறியவில்லையென்பதை சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்) அவரும் அதை அங்கீகரித்து, "நான் ராவணனை அவன் பிள்ளைகளோடும், தாயாதிகளோடும், அவனுக்கு மித்திரனாக விளங்கிவரும் வாலியோடும் கொல்கிறேன்" என்று சபதம் செய்து, தன்னை நான்கு பாகங்களாகச் செய்துகொண்டு மறைந்தார். பிறகு பிரம்மதேவன் தேவதைகளைப்பார்த்து, "பூலோகத்தில் ஜனிக்கப்போகும் பகவானுக்கு சகாயமாய் உங்களுக்கு என்னென்ன பலமோ அவைகளுடன்

வானரர்களை உண்டுபண்ணுங்கள்'' என்று ஆக்ஞாபிக்க (இப்படிபிரம்மா சொன்னது பகவான் தான் பூமியில் அவதரிப்பதாகச் சொன்ன பிறகா அல்லது முன்னமேயா என்ற விவரத்தை யறிய சித்தாந்த புத்தகத்தைப் பார்க்கவும்) தேவதைகளும் வானர்களை உண்டு பண்ணினார்கள். தேவேந்திரன் வாலியையும், சூரியன் சுக்ரீவனையும், அக்னிபகவான் நீலனையும், வாயுபகவான் ஹனுமானையும், அசுவினிதேவதைகள் மைந்த, த்விவிதர்களையும், இப்படியே ஒவ்வொரு தேவதையும் தன் தன் அம்சத்தில் வானரர்களை உண்டு பண்ணினார்கள். அவர்கள் அனைவரும் ராவணனை வதிப்பதில் இச்சைகொண்டிருந்தனர். அவர்களுக்கு வாலி அரசனாக இருந்து வந்தான். (வாலி ராமனுடன் சேர்ந்து ராவணனைக் கொல்லப் பிறந்திருந்தும், அதை விட்டுவிட்டு ராவணனுடன் 'நீயும் நானும் அண்ணன் தம்பி' என்று சிநேகம் செய்துகொண்டு தேவதைகளுக்கும், ராமனுக்கும், தன் பிதாவுக்கும் விரோதியாய் ஏற்பட்டதற்காகவே பின்னால் ராமன் வாலிவதம் செய்தார் என்று கவி வர்ணிக்கிறார்). இப்படியிருக்க, தசரதன் செய்துவரும் யாகத்தில், ரித்விக்காக விளங்கிய ரிஷ்யசிருங்கர் அதர்வண வேதத்தில் சொல்லப்பட்ட ரிக்கை உச்சரித்துக்கொண்டு அக்னியில் ஆகுதிகொடுக்க, அப்பொழுது அக்னிகுண்டத்திலிருந்து ஓர் பூதமானது (வந்தது பூதமேதவிற விஷ்ணுவுமல்ல, அக்னிபகவானுமல்ல. இதை சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்) தன்கையில் வெள்ளிமயமான மூடியுடன் கூடிய தங்கமயமான பாத்திரத்தில் நிறைய அன்னங் கலந்த கெட்டியான பாயசத்தை எடுத்துக்கொண்டுவந்து "பிரம்ம தேவ சம்பந்தமான மனுஷ்யன் என்று என்னை எண்ணிக்கொள்ளும். நீர்செய்த யாகத்தால் தேவதைகள் திருப்தியடைந்து, தேவ நிர்ணயமான இப்பாயசத்தை அனுப்பியிருப்பதால், நீர் இதை உமது சமமான பத்தினிகள் மூவருக்கும் கொடுப்பீரேயானால், நீர் உத்தம புத்திரர்களை யடைவீர்'' என்று தெரிவித்துப் பாயசத்தைக் கொடுத்து மறைந்தது.

உடனே தசரதன் கோசலைக்கு மொத்தத்தில் பாதி பாயசத்தையும், சுமித்திரைக்கு கால்பாகத்தையும், கைகேயிக்கு அரைக்கால் பாகத்தையும் கொடுத்து, பிறகு யோசித்து, மீதியிருக்கும் அரைக்கால் பாகத்தையும் மறுபடி சுமித்திரைக்குக் கொடுத்தார் (மீதியிருப்பதை யாருக்குக் கொடுப்போம் என்று ஸ்மரித்தார். சுமித்திரைக்கு என்றமட்டில் பட்டது. இதுதவிற வேறுயோசனை

கிடையாது). மூவரும் அதை ஏககாலத்தில் சந்தோஷமாய்ப் பானம்செய்து அதனலே பூர்ணகர்ப்பமடைந்தார்கள் (பாயச பாகவிஷயத்தில் வியாக்கியானங்கள் மூலத்திற்கு விரோதமாய் இருக்கின்றன. சமாதானத்தை சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்). பன்னிரண்டு மாதங்கள் ஆனபிறகு கோசலை, சித்திரை மாதத்தில் நவமி திதியில் புனர்பூச நக்ஷத்திரத்தில் ஐந்து கிரகங்கள் உச்சமாயிருக்க (ஜோதிஷம் முதலிய எந்த சாஸ்திரத்திற்கும் ராமாயணம் கட்டுப்படாது. இதை சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்), விஷ்ணுவின் பாதிபாகமுடைய குழந்தையைப் பெற்ருள். பூசநக்ஷத்திரத்தில் மீனராசியில் கைகேயி விஷ்ணுவின் அரைக்கால்பாகத்தை யுடைய குழந்தையைப் பெற்ருள். (இவ்விஷயத்தில் வியாக்கியானங்கள் சரியல்ல. சித்தாந்த புத்தகத்தைப்பார்க்கவும்). ஆயில்ய நக்ஷத்திரத்தில் கடகராசியில் விஷ்ணுவின் கால், அரைக்கால் பாகங்களுடன் கூடிய இரண்டு குழந்தைகளை சுமித்திரை பெற்ருள். (லக்ஷ்மணன், பரதன், சத்ருக்னன் முதலியவர்கள் ஆதிசேஷன், சங்கு, சக்கரம் அல்ல என்ற விஷயத்தையும் நான்கு குழந்தைகளும் நீலமேகஸ்யாமள வர்ணமேதவிற லக்ஷமணனும் சத்ருக்னனும் தங்கவர்ணம் அல்ல என்ற விஷயத்தையும் சித்தாந்த புத்தகத்தைப் பார்த்து தெரிந்துகொள்ளவும்). நான்கு குழந்தைகளும் நீலமேகஸ்யாமள வர்ணத்துடன் அழகாயிருப்பது கண்டு தசரதன் மிகவும் சந்தோஷித்து சகல தானதிகளையும் செய்து முடித்தார்.

பிறகு பதினேராவது நாள் வசிஷ்டர், மூத்த பிள்ளையான கோசலையின் பிள்ளைக்கு ராமன் என்றும், அடுத்தபடி பிறந்த கைகேயின் பிள்ளைக்கு பரதன் என்றும், சுமத்திரைக்குப்பிறந்த பிள்ளைகளில் மூத்தவனுக்கு லக்ஷமணன்என்றும், இளையவனுக்கு சத்ருக்னன் என்றும் பெயர் வைத்தார். குழந்தைகள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து உரியகாலத்தில் வசிஷ்டரிடம் சகல வித்தைகளையும் கற்றுக் கொண்டனர். அவர்களுக்கு பன்னிரெண்டு வயதானபொழுது மணமுடிக்கக் கருதினர் தசரதர். அந்த வேளையில் விசுவாமித்திரர் அங்குவந்தார். தசரதர் அவரைப் பூஜித்து, அவர் வந்த காரணத்தைக்கேட்க, "நான் சித்தாஸ்ரமத்தில் யாகம் செய்கிறேன். ராவணனல் ஏவப்பட்டு மாரீசன், சுபாகு என்பவர்கள் அங்குவந்து என் யாகத்தை

அழிக்கிறார்கள். அந்த யாக சம்ரக்ஷணத்திற்காக உமது பிள்ளை ஸ்ரீ ராமனை அனுப்பவேண்டும்" என்றார். அதுகேட்ட தசரதர், தன் பிள்ளை ராமன் மகாவிஷ்ணுவென அறிந்திருந்தும், துக்கம் சகலத்தையும் அழித்துவிடுமாதலால், அப்பொழுதுண்டான துக்கத்தால் ராமனைப்பிரிய விரும்பாமல் மனமுடைந்தவராய், "இக்குழந்தை (கொஞ்சம் குறைய 16 வயது அதாவது 12 வயது இதையும் சித்தாந்த புத்தகத்தில் பார்க்க) சிறுபிள்ளை. தர்மிஷ்டனும், மூத்தவனுமுள்ள அவனை நான் அனுப்பமாட்டேன்" என்று சொல்ல, விசுவாமித்திரர் கோபித்துக்கொண்டு வெளியே புறப்பட்டார். அப்பொழுது வசிஷ்டர் தசரதனைப் பார்த்து, "ராஜனே, தர்மத்தையும், சத்தியத்தையும் விடக்கூடாது. தவிரவும் அவர் உமது பிள்ளையின் க்ஷேமத்தின் பொருட்டே அவனைக்கேட்கிறார். அவரிடம் சிறந்த அஸ்திரங்கள் இருக்கின்றன. அவரால் உமது பிள்ளை காப்பாற்றப்படுவான். நீர் அவனையனுப்பலாம்" என்றுசொல்ல, அரசரும் அதை அங்கீகரித்து, ராமனைக் கூப்பிட, லக்ஷ்மணனும் கூடவர, கோசலையும் அவ்விருவரையும் ஆசீர்வதிக்க, தசரதரும் சந்தோஷித்து ராமனைப் பார்த்து, "இதுவரையில் எப்படி என்சொல்லைத் தட்டாமல் கேட்டாயோ அப்படியே விசுவாமித்திரர் என்னசொன்னாலும் அதைப் பிதாவின் வார்த்தையெனக்கொண்டு தட்டாமல் கேட்கவேண்டும்" என்று சொல்லி அவர்களை ஆசீர்வதித்து ரிஷியிடம் ஒப்பித்தார்.

விசுவாமித்திரரும் அவர்களைப் பெற்றுக்கொண்டு செல்லும்போது, ஸ்ரீ ராகவனுக்கு பலா, அதிபலா என்ற இரண்டு மந்திரங்களை உபதேசித்து, "இந்த மந்திரங்கள் எவனுக்கு உபதேசமாயிருக்கிறதோ அவனை யாருமே ஜயிக்கமுடியாது. தவிரவும் உன்னைவிட பலசாலி இந்த மூன்று உலகங்களிலும் யாருமே கிடையாது," என்றுசொல்லி மறுபடி செல்லும்பொழுது இருட்டிவிட இரவில் குழந்தைகள் தூங்கினார்கள். காலையில் ரிஷியானவர் தூங்கின குழந்தைகளை எழுப்பி அழைத்துக்கொண்டு செல்லும்போது வழியில் இருந்த பல இடங்களின் விசேஷத்தைச்சொல்லி, மன்மதன் பரமசிவனால் எரிந்த விருத்தாந்தத்தையும் விவரமாய்ச் சொல்லிக்கொண்டு தாடகை இருக்கும் வனத்தை அடைந்தார். உடனே அவர் ராமனைப்பார்த்து, "துஷ்டையும், பெரியோர்களை சாப்பிடுகிறவளும், யாகாதிகளை அழிப்பவளுமான தாடகை இங்கு தானிருக்கிறாள். அவளைக்கொல்" என்று தெரிவிக்க, ராமன்

பேசாமலே இருந்தார், அதுகண்ட விசுவாமித்திரர், "ராமா, சாஸ்திரப்படி, குற்றம் செய்தவர் யாராயிருந்தாலும் தண்டிக்கலாம். பெரியோர்களில், இந்திரன் பூமியை அழிக்க இச்சித்த மந்தரையைக் கொன்றிருக்கிறான். விஷ்ணு பிருகுபத்தினியைக் கொன்றிருக்கிறார். ஆதலால் நீ தாடகையைக் கொல்லலாம்" என்று சொல்ல, ராமன், "மஹாரிஷியே, பிதாவின் ஆக்ஞையால் தங்கள் வார்த்தையைக் கேட்கிறேன், அப்பா வார்த்தையால் இத்தாடகா வதம் உத்தமம். ஆதலால் நான் அவளைக் கொல்கிறேன்" (இங்கு குருவார்த்தையல்ல—சித்தாந்த புத்தகத்தைப் பார்க்கவும்) என்று சொல்லி வில்லை நாணேற்றிவிட, அச்சப்தம் கேட்டு, தாடகை ராமனை எதிர்த்து ஓடிவந்தாள். லக்ஷ்மணன் அவளது காது மூக்கை அறுத்துவிட, அவள் உடனே ஆகாயத்தில் மறைந்துகொண்டு மாயாயுத்தம் செய்ய, 'மறைந்துகொண்டு சண்டை போடுபவர்களைக் கொல்லக்கூடாது' என்றதர்மத்தை அனுசரித்து ராமன் சப்தவேதியைக் காட்டி அந்த சாமானிய மாயையிலிருந்து அவளை வெளியே வரும்படி செய்தார். உடனே அவள் எதிர்த்து ஓடிவர, ஓரே பாணத்தால் அவளை அடித்துவிட்டார். அவள் விழுந்ததும், தேவதைகள் வாக்கியத்தை அனுசரித்து விசுவாமித்திரர் சகல அஸ்திரங்களையும் ராமனுக்குக் கற்றுக்கொடுக்க, ராமனும் அவைகளையெல்லாம் லக்ஷ்மணனுக்கு உபதேசித்தார். பிறகு அவ்விடத்தை விட்டு எல்லோரும் சித்தாஸ்ரமத்தையடைந்தனர்.

விசுவாமித்திரர் அங்கு தன் யாகத்தை ஆரம்பிக்க, ராமலக்ஷ்மணர்கள் அதை அதி ஜாக்கிரதையாக காவல் செய்துவரும் காலத்தில், யாகத்தின் ஆறுவதுநாள் மாரீசனும், சுபாகுவும் இரத்த பாத்திரங்களை எடுத்துக்கொண்டு ஆகாயவழியாய் வந்து, மேகமத்தியில் இருந்துகொண்டு, ஜ்வலித்துக்கொண்டிருக்கும் அக்னியை அணைக்கும் நிமித்தம் இரத்தத்தை ஊற்றினகாலத்தில், ராமன் லக்ஷ்மணனைப் பார்த்து, "லக்ஷ்மணா பார். நான் இப்பொழுது இவர்களை அடிக்கிறேன்" என்றுசொல்லி, மாரீசனை மானவம் என்ற அஸ்திரத்தால் அடித்து சமுத்திரத்தில் முழுகும்படி செய்தார். ஆக்னேயாஸ்திரத்தால் சுபாகுவை எரித்துவிட்டு, (மாரீசனும் சுபாகுவும் சேர்ந்து மட்டும் இருந்தார்களே தவிற, இவர்கள் சகோதரர்கள் அல்ல – சித்தாந்த புத்தகத்தைப் பார்க்கவும்) மீதிநின்ற சேனைகளை வாயவ்யாஸ்திரத்தால் அடித்து

யாகத்தை ரக்ஷித்தார். பிறகு மகரிஷிகள் விசுவாமித்திரரை முன்னிட்டுக்கொண்டு, ராமனைப் பார்த்து, 'ஏ, ராமா! சமீபத்தில் மிதிலையென்ற ஒரு பட்டணம் இருக்கிறது. அதை ஜனகன் என்ற ஒரு அரசன் ஆள்கிருன். அவன் ஒரு யாகம் செய்யப் போகிருன். நாங்கள் அங்கு போகிரும். நீயும் வந்தால் அதைப் பார்க்கலாம். தவிறவும் அவனிடம் யாராலும் நாணேற்றமுடியாத ஒரு வில் இருக்கிறது. அதையும் பார்க்கலாம்'' என்று சொன்ஞர்கள். விசுவாமித்திரரும், ''ராமா, நாம் அங்கு போவோம்'' என்று சொல்ல சகலரும் புறப்பட்டனர். வழியில் காணப்பட்ட சகல இடங்களையும் விசுவாமித்திரர் ராமனுக்குக் காட்டி, அவைகளின் விசேஷங்களையும் சொல்லிக்கொண்டு மிதிலாபட்டணத்தின் உபவனத்தை அடைந்தார். அங்கு ஒரு பழைய ஆசிரமத்தைக் கண்ட ராகவன் ''இது யாருடையது?'' என்று கேட்க, ''ஏ, ராகவா! இது கௌதமருடையது. இதில் கௌதமர் அகல்யை யோடு இருந்தார். ஒருநாள் அவர் ஸ்நானத்திற்குச் சென்றிருந்த போது ஆயிரம் கண்களை ஏற்கனவே வெகுகாலமாக உடைய இந்திரன் (இதை சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்) கௌதமர் வேஷத்துடன் அங்குவந்து, அகல்யையைப் பார்த்து, 'அகல்யே, நான் இந்திரன். உன்னையடைய வந்திருக்கிறேன். காமிகள் காலத்தை கவனிக்கமாட்டார்கள்' என்று சொல்ல, விபரீத சித்தமுள்ள அவளும், 'தேவராஜன் கிடைத்துவிட்டான்' என்கிற குதூகலத்தால் அவனையடைந்து காமசுகத்தை யனுபவித்தபிறகு அவனைப்பார்த்து, 'உம்மால் நான் திருப்தியடைந்தேன். நீர் உம்மையும் என்னையும் ரக்ஷித்துக்கொண்டு சென்றுவாரும்' என்று சொன்னுள். அதைக் கேட்ட இந்திரன் 'சந்தோஷித்தேன்' என்று தெரிவித்து ஆசிரமத்தைவிட்டு வெளிவரும்போது கௌதமர் ஸ்நானம் செய்துவிட்டு நனைந்த வஸ்திரத்துடனும், கையில் தர்ப்பத்துடனும், தூக்கிக்கட்டப்பட்ட ஜடாபாரத்துடனும் உள்ளேவந்தார். அவர், தன் ரூபத்துடன் வந்திருக்கும் இந்திரனைக் கோபித்து, 'ஏ, துஷ்டா! இதுமுதல் நீ உன் அங்கங்களை இழக்கக் கடவாய். மேலும் நீ தேவபோகத்துடன் இருந்தும், அதைவிட்டு இந்த பூலோகத்தில் உள்ள ஒரு பெண்ணை நாடிவந்ததால், இந்த பூலோகத்தில் சத்துருவின் கையால் கட்டுப்படக்கடவாய்' என்று சபித்து, மேலும் 'இதுமுதல் உனக்கு ஆட்டின் அங்கம் உண்டாகட்டும். தவிறவும் இதுமுதல் ஒவ்வொரு இந்திரனுக்கும் பரதாராபஹாரணமான இந்த விபரீத சித்தம் உண்டாகட்டும்'

என்றும் சபித்து, உள்ளே சென்று அகல்யையைப் பார்த்துக் கோபித்து, 'துஷ்டே, நீ என்னிடத்தில் சதானந்தர் முதலிய பல குழந்தைகளைப் பெற்றிருந்தும், வந்தவனை நீ தெரிந்திருந்தும் அவனையடைந்தபடியால், நீ ஒரு பூதத்திற்கும் தெரியாமல் இருக்க வேண்டும். குற்றத்திற்கு தண்டனை அனுபவிக்கிற நிமித்தம் நீ இதே ஆசிரமத்தில் காற்றை உட்கொண்டு சாம்பலில் கிடக்க வேண்டும் உனக்கு உன் சரீரம் தெரியவேண்டும். எப்பொழுது இராகவன் இங்கு வருவாரோ, அப்பொழுது நீ அவரைப் பார்ப்பாய். அவரைத் தரிசித்த பிறகு நீ அவரைப்பூஜித்து, பரிசுத்தமடைந்து, என்னையடையக்கடவாய்' என்று தெரிவித்துப் போய் விட்டார். அகல்யையிடம் காமத்தை இச்சித்து வரவில்லையானாலும் (சித்தாந்த புத்தகத்தைப் பார்க்க) கௌதமர் தபசை அழிப்பதான தேவகாரியத்தைச் செய்யவந்த இந்திரன், அவர் பத்தினியையடைந்து, அவரிடம் சாபம்பெற்று, அவரது தபசைக் கிரஹித்துக்கொண்டு, தானும் ஆட்டின் அங்கத்தையடைந்து தேவலோகம் போனான். ஏ, ராமா! நீர் இப்பொழுது உள்ளே வரவேண்டும்'' என்று விசுவாமித்திரர் சொன்னார். அவ்விதம் ராமன் உள்ளே சென்றதும், தர்மவிக்கிரகமான அவனைக்கண்டதும் அகல்யை, பாபபரிஹாரம் அடைந்தவளாய் எல்லோருக்கும் தெரியும்படியானாள். உடனே அவள் ஸ்ரீ ராகவனைப் பூஜித்துவிட்டுத் தன் பர்த்தாவை யடைந்தாள். பிறகு ராகவாதிகள் கௌதமரால் பூஜிக்கப்பட்டு மிதிலையை அடைந்தனர்.

அப்படி அங்கு வந்த மூவரையும் ஜனகர் உபசரித்து, விசுவாமித்திரரைப் பார்த்து, "சகலத்திலும் ஒருவர்க்கொருவர் ஒன்றாக இருக்கும் இவர்கள் யார்? எந்த தேசம்? யாது காரணத்தால் இவர்கள் பாதசாரியாய் இங்குவந்தார்கள்?'' என்று கேட்டார்.

அதற்கு விசுவாமித்திரர், "இவர்கள் தசரதராஜ குமாரர்கள். எனது யாகசம்ரக்ஷணத்திற்காக என்னால் அழைத்துவரப்பட்டவர்கள். இவர்கள்என்யாகத்தை ரக்ஷித்தார்கள். இங்குவரும் வழியில் அகல்யைக்குச் சாபவிமோசனம் செய்தார்கள்'' என்று சொல்லக் கேட்ட சதானந்தர் விசுவாமித்திரரைப்பார்த்து, "என்மாதாவின் சாபத்தை இவர் போக்கினரா! என் பிதாவை என் மாதா அடைந்தாரா?'' என்றுகேட்க, முனிவரும் "உமது மாதாவை உமது பிதா அடைந்தார்'' என்று சொன்னார். அதுகேட்டு சதானந்தர்

சந்தோஷித்து ராகவனைப்பார்த்து, "ஏ, ராமா! நீர் யாருடன் வந்திருக்கிறீரோ அவர் சாமானியமானவர் அல்ல" என்று சொல்லி, விசுவாமித்திரர் பிராம்மணீயத்தை யடைந்த வரலாற்றைச் சொல்ல, அதைக்கேட்டு எல்லோரும் சந்தோஷித்தார்கள். பிறகு விசுவாமித்திரர் ஜனகனைப் பார்த்து, "உம்மிடம் இருக்கும் வில்லைப் பார்க்கவந்தவர் இந்த ராகவன்" என்று தெரிவிக்க, ஜனகன், "இந்த வில்லை மனுஷ்யர்களால் எடுக்கமுடியுமா?" என்று சொல்லி, அதைக் கொண்டுவரச்சொல்ல, சிலர் போய் அதை யாக சாலையில் கொண்டுவந்து வைத்தார்கள். உடனே ஜனகன் அந்த விஷயத்தை முனிவருக்குச்சொல்ல, அவர் ராகவனைப் பார்த்து, "வில்லைப்பாரும்" என்று சொன்னார். ராகவன் அதைப் பார்த்து "நான் இதை ஆரோபணம் செய்கிறேன்" என்று சொல்ல, முனிவர், "வில்லை எடுக்கலாம்" என்றார். விசுவாமித்திரர் அனுக்கிரகத்தால் ராகவன் அதை எடுத்து நாணேற்றும்போது, ஏற்கெனவே ஒடிந்திருந்ததால், வளைக்கும்போது அது ஒடிந்துவிட, ஜனகன் அதனால் சந்தோஷித்து, விசுவாமித்திரரைப் பார்த்து, "நான் இப்பொழுதே என் பெண்ணை இவருக்குக் கொடுக்கிறேன்" என்று சொன்னார். அதுகேட்ட ராகவன் "நான் உமது பெண்ணுக்கு ஆசைப்பட்டு வில்லெடுக்கவில்லை. வேண்டுமானால் அந்த விஷயத்தை என் பிதாவுக்குத் தெரிவித்துக்கொள்ளும்" என்று தெரிவித்தார். அதுகேட்டு ஜனகர் விசுவாமித்திரர் அபிப்பிராயப்படி தசரத மகாராஜனுக்குப் பத்திரிக்கை அனுப்பி அவரை வரவழைத்தார். பிறகு ஜனகர் தசரதரிடம் "உமது புத்திரன் என்னிடம் இருந்த வில்லை நாணேற்றிவிட்டபடியால், நான் என்பெண் சீதையை அவனுக்குக் கொடுக்கிறேன். ஊர்மிளையை லக்ஷ்மணனுக்குக் கொடுக்கிறேன்" என்று சொன்னார்கள். அது கேட்ட விசுவாமித்திரர் "நீ சொன்னது சரியே. மேலும் தசரதனுக்கு இன்னும் இரண்டு பிள்ளைகள் இருக்கிறார்கள், உமது தம்பி குசத்வஜனுக்கும் இரண்டு பெண்களிருக்கிறார்களே அவர்களில் மூத்தவளான மாண்டவியைப் பரதனுக்கும், இளையவளான சுருதகீர்த்தியை சத்ருக்னனுக்கும் தத்தம் செய்யலாம். இது மிகவும் உத்தமமான சம்பந்தம்" என்று தெரிவித்தார். அதற்கு எல்லோரும் சம்மதித்தார்கள். உத்தர பல்குனி நக்ஷத்திரத்தில் விவாகம் செய்வதாய் நிச்சயித்து இருவரும் தங்கள் வம்சாவளியைச் சொல்லிக்கொள்ள இருவரும் சூரியவம்சம் என்று சந்தோஷித்தார்கள். முகூர்த்த தினத்தில் குழந்தைகள் எல்லோருக்கும் அலங்காரம்

செய்தார்கள். குறிப்பிட்ட முகூர்த்தத்தில் ஜனகன் ஸ்ரீராகவனுக்கு ஸீதையையும், லக்ஷ்மணனுக்கு ஊர்மிளையையும், பரதனுக்கு மாண்டவியையும், சத்ருக்னனுக்கு சுருதகீர்த்தியையும் கன்னிகாதானம் செய்துகொடுக்க, அந்தக் குழந்தைகளும் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட பெண்களைப்பெற்றுக்கொண்டு சந்தோஷமடைந்தார்கள். அங்கு கொஞ்சகாலம் தங்கி, பிறகு எல்லோரும் ஜனகரிடம் விடைபெற்றுக்கொண்டு அயோத்திக்குப் புறப்பட்டனர்.

இப்படி தசரதன் தன் குழந்தைகளுடனும், நாட்டுப்பெண்களுடனும் சந்தோஷமாய் அயோத்தியை நாடிச்சென்றபோது வழியில் பக்ஷிகள் பயங்கரமாய் சப்தம் செய்தன. மிருகங்கள் பிரதக்ஷணமாய்ச் சென்றன. எங்கும் இருள் சூழ்ந்தது. அதுகண்ட சகல சேனைகளும், மற்றவர்களும் பயந்தனர். தசரதர் வசிஷ்டரைப்பார்த்து, "ஏன் இப்படி இருக்கிறது?" என்று கேட்க, அவர், "நீர் பயப்படவேண்டாம். பக்ஷிகள் சப்திப்பதை கவனித்தால் ஆபத்துவரும் என்பது நிச்சயம். ஆனால் மிருகங்கள் பிரதக்ஷணமாய்ச் செல்வதைக் கவனித்தால் ஆபத்து விலகிவிடும் என்றும் தெரிகிறது" என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது அந்த இருளின் மத்தியில் ஒரு கையில் பிடிக்கப்பட்ட விஷ்ணுசம்பந்தமான வில்லுடனும், மற்றொரு கையில் விளங்கும் பிரம்மாஸ்திரத்துடனும், தோளில் சாத்தப்பட்டு விளங்கும் கோடாலியான ஆயுதத்துடனும் வரும் பரசுராமனைக் கண்டு ரிஷிகள், "பரசுராமரே, வாரும்" என்று அர்க்கியபாத்ய ஆசமனியங்களால் உபசரித்தனர். அவைகளைப் பெற்றுக்கொண்ட பரசுராமன் தசரதன் சமீபமாய் வர, அவரும் அவரை அஞ்சலிபந்தம் செய்து, நீர் என் குழந்தைகளைக்கொன்றுவிடாமல் காக்கவேண்டும். நிரம்ப வயதான பிறகு பெற்ற குழந்தைகள். காப்பாற்றவேண்டும்" என்று பயத்தால் ஏற்பட்ட துக்கத்துடன் தெரிவித்தார். அவர் வார்த்தைகளை அலக்ஷ்யம் செய்துகொண்டு பரசுராமன் ராகவன் இருப்பிடத்தையடைந்து, "ஏ, ராமா! நீர் வில்லை ஒடித்த சப்தம்கேட்டு உமது பராக்கிரமத்தை அறியவே நாம் வந்தோம். நாம் இதோ கொண்டு வந்திருக்கும் இந்த வில் நீர் ஏற்கனவே ஒடித்ததைக்காட்டிலும் கெட்டியானது. க்ஷத்தரிய தர்மத்தை முன்னிட்டு நீர் இந்த வில்லை வாங்கி நாணேற்றுவீரானால், உமது பலத்தைத் தெரிந்துகொண்டு பிறகு உம்முடன் நாம் சண்டைக்கு வருவோம். நீர்

ஒடித்ததில் ஏற்கனவே விஷ்ணு ஹுங்காரத்தால் ஒடிந்தது. ஒடியாததான இந்த வில்லை நாணேற்றும்" (விஷ்ணுவும் சிவனும் சண்டைபோட்ட கதை உண்டு. இதை சித்தாந்த புத்தகத்தில் பார்த்துக்கொள்ளவும்) என்று தெரிவித்தார். அது கேட்ட ராகவன், "ஏ, பரசுராமரே! நான் உமது விருத்தாந்தத்தைக் கேட்டிருக்கிறேன். உமக்கு என்னுடைய தேஜஸ் தெரியாது. என் பராக்கிரமத்தைப் பாரும்" என்று சொல்லி, அவரிடமிருந்து வில்லை வாங்கும்போது அவருடைய ஸர்வதேஜஸ்ஸையும், ஸர்வ வீர்யத்தையும் கிரஹித்துக்கொண்டு, வில்லை நாணேற்றி, பிரம்மாஸ்திரத்தைப்பூட்டி நின்றார். அப்பொழுது உலகமுழுவதும் பிரமித்தது. பரசுராமன் ராகவனைப்பார்த்து "நீர் இந்த வில்லை நாணேற்றிவிட்டதால், நான் உம்மை நாராயணனுய்த் தெரிந்து கொண்டேன். மூன்று லோகத்தும் நாதனை உம்மால் நான் அவமானப்பட்டது அவமானமல்ல" என்று சொல்லி அவரை ஸ்தோத்திரம் செய்தார்.

அதுகேட்டு ராகவன், "நீர் பிராம்மணராதலாலும், விசுவாமித்திரருக்குப் பந்துவாதலாலும் உம்மை நான் கொல்லாமல் விடுகிறேன். ஆனல் உம்மைக்குறித்து இந்தவில்லில் பூட்டப்பட்டிருக்கும் பாணத்திற்கு உம்மிடத்திலுள்ள வஸ்துக்களில் ஏதாவதொன்று இலக்காகவேண்டும். ஆதலால் நீர் சம்பாதித்திருக்கும் உலோகங்களையாவது அல்லது நடப்பதற்கு உமக்குக் காலில் இருக்கும் சக்தியையாவது இரண்டில் ஒன்றைக் கொடுக்க வேண்டும்" என்று சொன்னர். "நான் நடப்பதற்கு என்காலில் சக்திவேண்டும். ஆதலால் நீர் அதை விட்டுவிட்டு நான் சம்பாதித்த உலோகங்களை உமது அஸ்திரத்திற்கு ஆகாரமாகக்கொள்ளும்" என்று பரசுராமன் பதில்சொல்ல, ராகவன் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகிக்க, அது அவரால் சம்பாதிக்கப்பட்ட சகல லோகங்களையும் கிரகித்துக்கொண்டு வந்தது. பிறகு பரசுராமன் ராகவனை நமஸ்கரித்துவிட்டுச் சென்ருர். ராகவன் தன் கையிலிருந்த வில்லை, அஸ்திரத்துடன் வருணனிடம் கொடுத்துவிட்டு, கவலையுடன் பிரமித்து நின்றுகொண்டிருந்த பிதாவைச் சேவித்தார். அவர் மிகவும் சந்தோஷித்து, எல்லோருடனும் அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டு அயோத்தியை அடைந்தார்.

தசரதர் அரண்மனையில் தன் பிள்ளைகள் தங்கள் மனைவிகளுடன் தனித்திருப்பதற்காக ஒவ்வொருவருக்கும் தனித்தனி இடங்களை ஏற்படுத்திக்கொடுத்தார். பனிரண்டு வயதுள்ள அப் பிள்ளைகள் ஆறுவயதுள்ள தங்கள் மனைவிகளுடன் ஏகாந்தமாய் இருந்துகொண்டு சகல போகங்களை அனுபவித்து வந்தார்கள் (இதை சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்). இப்படியிருக்க, ஒரு நாள் தசரதர் பரதனைப் பார்த்து, "பரதா! உனது பாட்டனார் உன்னைப் பார்க்கவேண்டுமாம், அதற்காக உன்னை அழைத்துப் போக உன் மாமன் வந்திருக்கிறார். ஆகையால் நீ அவருடன் சென்று, அங்கு கொஞ்சகாலம் தங்கியிருந்து, பிறகு வா" என்று தெரிவிக்க, அவனும் தன் தம்பி சத்ருக்னனை அழைத்துக்கொண்டு, மாதா, பிதா, தமயன் முதலியவர்களை நமஸ்கரித்து, சகலரிடமும் அனுமதி பெற்றுக்கொண்டு தன் மாமனுடன் கேகய நாட்டையடைந்து சந்தோஷமாய் வாழ்ந்துவந்தான். ஸ்ரீராமன் லக்ஷ்மணனுடன் பிதா, மாதா முதலியவர்களுக்குப் பணிவிடை செய்து வந்தார்.

'வைகுண்டத்தில் ஸ்ரீதேவியுடன் விளங்கின விஷ்ணுவைப் போல் ஸ்ரீராமன் சீதையுடன் அயோத்தியில் விளங்கினார்' என்று வால்மீகி பாலகாண்டத்தை முடித்து அயோத்தியா காண்டத்தை ஆரம்பிக்கிறார்.

பாலகாண்டம் முற்றிற்று.

---

ஓம்.

ஸ்ரீராமஜெயம்.

# அயோத்தியா காண்டம்.

இராவணவதத்திற்காகப் பிரார்த்திக்கப்பட்ட சாக்ஷாத் பகவான் பூலோகத்தில் தசரதருக்குப் புத்திரராய் அவதரித்து, அயோத்தியில் சற்குண சம்பன்னராய் விளங்கிவந்தார். இப்படி தசரதபுத்திரர்களுக்குக் கலியாணமாகிப் பன்னிரண்டு வருஷங்களுக்குப் பிறகு ஒருநாள் தசரதன் தன் மூத்தகுமாரனை ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்று எண்ணினார். அப்பொழுது ஆகாயத்தில் சில அபசகுனங்கள் உண்டாயின. அரசன் அவைகளையும் தெரிந்துகொண்டு, தன் பிரஜைகளையும், மந்திரிகளையும், குலகுருவான வசிஷ்டரையும் வரவழைத்து, "நான் இதுகால பரியந்தம் இந்த ராஜ்யத்தை உத்தம தர்மத்துடன் பரிபாலித்து வந்தேன். இப்பொழுது நான் கிழவனாகிவிட்டபடியால் எனக்கு பலம் இல்லை. ஆகையால் நல்ல பாலியனாயுள்ள ராமனுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென நினைக்கிறேன். உங்கள் அபிப்பிராயம் என்ன? என்று கேட்டார். அவர்கள் மிகவும் சந்தோஷித்து, "அப்படியே செய்யலாம்" என்று ஏகோபித்துச் சொன்னார்கள். மறுநாள் பூசநக்ஷத்திரத்தில் பட்டாபிஷேகம் செய்ய நிச்சயம் செய்யப்பட்டது. பிரஜைகள் களிப்புடன் பட்டணத்தை அலங்கரிக்க ஆரம்பித்தனர். தசரதன் இராமனை வரவழைத்து, பட்டாபிஷேக விஷயத்தைத் தெரிவித்து அனுப்பினார்.

தசரதன் மறுபடியும் சில உற்பாதங்களைக் கண்டு ராமனைக் கூப்பிட்டு, "உன் தம்பி பரதன் தன் பாட்டனைப் பார்க்கப்போய் வெகுகாலமாகியும் இன்னும் வரவில்லை. அவன் தர்மாத்மா. உன்னை அதிகமாக நேசித்து உன்னை அனுசரித்து நடப்பவன். ஆனால் அவன் தாயான கைகேயி பணத்தாசை பிடித்தவள். அவள் ஒருசமயம் தன் பிள்ளையைக் கெடுத்தாலும் கெடுப்பாள். ஆகையால் அவன் வருவதற்குள் உனக்கு உரியதான இந்த இராஜ்யத்தைப் பெற்றுக்கொள்" என்று தெரிவித்தார்.

சத்தியஸ்தாபன நிமித்தத்தில் ராஜ்யம் கைகேயிக்கு சுல்கம் என்று அவள் கலியாண காலத்தில் தசரதன் பிரதிக்ஞை செய்யாததால், அவர் ராமனைப் பார்த்து, 'ராஜ்யத்தைப் பெற்றுக்கொள்' என்றபோது ராமனும் பேசாமல் கேட்டுக்கொண்டிருந்தார். வால்மீகியால் சத்தியசந்தன் என்று ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் தசரதர் பின்னுல், கைகேயியைப் பார்த்து, "உன்பிள்ளை பரதன் இந்த இராஜ்யத்தை இச்சிப்பானேயாகில், ராமன் காடுபோன விஷயத்தில் திருப்தியடைவானேயாகில், நான் இறந்தபின் எனக்குக் கர்மங்களைச் செய்யக்கூடாது" என்று சொல்வதாலும், வசிஷ்டரும், "தகப்பனுரால் கொடுக்கப்படாத ராஜ்யத்தைப் பரிபாலிக்க பரதன் அருகனல்ல" என்பதாலும், கோசலைக்கும் இந்த சுல்க விஷயம் ஒன்றும் தெரியாததாலும், கூனி கைகேயியைக் கலைத்த காலத்தில் சுல்கவிஷயத்தைச் சொல்லாமல், வரத்தைக்கேள் என்றதாலும், 'மூத்தபிள்ளைக்கே பட்டம்' என்கிற குலதர்மத்தை மீறி, 'கைகேயிக்குப் பிறக்கும் பிள்ளைக்குப் பட்டம் கொடுக்க வேண்டும்' என்று அதர்மமாய் தர்மிஷ்டனை கேகயாராஜன் கேட்கமாட்டானுதலாலும், சுல்கவிஷயம் உண்மையல்ல என்பது நிச்சயம். தவிறவும் சுல்கவிஷயம் உண்மையாளுல், அது கைகேயியிக்குத் தெரிந்திருக்கும். அப்படித் தெரிந்தால் அவள் சுல்கப்படியே அரசாட்சியைக் கேட்டிருக்கலாம். ஆனுல் அவள் வரத்தைத்தான் கேட்டாள். அதுபோலவே கேகய ராஜனும், பரதன் தன் ஊரில் 12 வருஷகால பரியந்தம் தங்கிப் பிறகு தூதர்களால் அவசரமாய் அழைத்துச்செல்லப்பட்டபொழுது அவனிடம் இந்த சுல்கவிஷயத்தைச் சொல்லி, அவன் பிதா மிகவும் வயதானவராதலால், அவரிடமிருந்து அரசாட்சியைப் பெற்றுக்கொள்ளும்படி சொல்லியனுப்பியிருப்பார். ஆனுல் அவர் அப்படிஒன்றும் சொல்லி அனுப்பவில்லை. கைகேயி கலியாணகாலத்தில் ராஜ்யத்தை சுல்கம் வைத்தது உண்மையாளுல்,நடந்ததை அப்படியப்படியேகண்டுஎழுதும்வால்மீகிசுல்கம்வைத்தவிருத்தாந்தத்தையும்சொல்லியிருப்பார். அவரும் அப்படிச் சொல்லவில்லை. சுல்கவிஷயம் உண்மையென்று ராமன் எண்ணியிருந்தால், பிதா தன்னிடத்தில் 'ராஜ்யத்தைப் பெற்றுக்கொள்' என்றபோது 'கைகேயிக்குச் சுல்கம் வைக்கப்பட்டதை மறந்து தாங்கள் இப்படி எனக்கு ராஜ்யத்தைக் கொடுப்பது தர்மமல்லவே' என்று ஞாபகப்படுத்தியிருப்பார். மேலும் கோசலை துக்கப்படும்போதும் ராமர் அவளைப்பார்த்து, 'அம்மா, என்பிதா இராஜ்யத்தை ஏற்கனவே கைகேயிக்கு சுல்கம் வைத்தி

ருக்கிறார். ஆதலால் நீர் வருத்தப்படுவது நியாயமல்ல' என்றும் சொல்லியிருப்பார். அப்படியும் அவர் சொல்லவில்லை. இவை களையெல்லாம் கவனித்தால் சுல்கவிஷயம் பொய்யெனத் தெரி கிறது. (வால்மீகி வாக்கியமும், நாரதவாக்கியமுமே சகலத்திற்கும் பிரமாணம். இந்த சுல்கவிஷயமாய் நாரத வாக்கியத்தில் ஒன் றுமேஇல்லாததாலும், வால்மீகி தசரதரைச்சத்தியசந்தராய் ஸ்தா பிப்பதாலும் சுல்கம் கிடையாது என்பதே ஸ்தாபனம்— இதை சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்). ஆனால் பரதன் சித்திரகூடத் திற்குச் சென்று ராமனை ஊருக்கு வரும்படி அழைத்தபோது, அவர் பரதனிடம் இந்த சுல்கவிஷயத்தைப் பற்றிச் சொல்லி ராஜ்யம் அவனுக்குத்தான் உரியது என்று தெரிவித்தார். அப்படி அவர் சொன்னது பரதன் ஊருக்குப் போவதற்காக ஒரு வியாஜ மாகச் சொல்லப்பட்டது என்ற மட்டில்தான் தெரிகிறது.

பிதாவிடம் விடைபெற்றுக்கொண்டு ராமன் அவ்விடத்தை விட்டு, பிராணாயாமத்தினால் ஜனார்த்தனனைத் தியானித்துக்கொண் டிருக்கும் தன் மாதாவான கோசலையிருப்பிடத்தை யடைந்து, "அம்மா, காலைமுதல் ராஜ்யத்தைப் பரிபாலிக்க, பிதா என்னை நியமனம் செய்திருக்கிறார். அதாவது நாளைக்கு எனக்கு பட்டா பிஷேகம் செய்யப்போகிறார். அதற்கு நீர் என்ன செய்யவேண் டுமோ அதைச் செய்யலாம்" என்று தெரிவித்தார். அதுகேட்ட கோசலை, "அப்பா, ராமா, உன்பிதா நல்லகாரியமே செய்ய நினைத் திருக்கிறார். ஆனால் நல்ல காரியங்களுக்கு எத்தனையோ தடங் கல்கள் வரும். இக்காரியம் தடையொன்றும் இல்லாமல் நடை பெறவேண்டும்" என்று சொல்லி, ராமனை ஆசிர்வதித்து அனுப் பினாள். அவரும் சீதையின் அரண்மனையை யடைந்தார்.

இது இப்படியிருக்க, பட்டணம் அலங்காரம் செய்யப்பட்டி ருப்பதைக் கண்ணாரக்கண்டு, பாபியும், பணத்தாசையுள்ளவளும், ஆத்மசுகத்தை இச்சித்தவளும், கைகேயிக்குப் பங்காளியும் வேலைக்காரியுமான கூனியானவள் தன்னைப்போல் ஒரு வேலைக் காரியிடத்தில் 'ஊர் அலங்காரம் செய்யப்படுவது எதற்காக? என்ன விசேஷம்?' என்று கேட்டு, மறுநாள் ராமனுக்குப் பட்டா பிஷேகம் என்ற விஷயத்தைத் தெரிந்துகொண்டாள். உடனே

கோபத்தை யடைந்து, எப்படியாவது அது நடைபெருமல் தடுக்க வேண்டுமென்று நிச்சயித்து, கைகேயியின் அந்தப்புரத்தை யடைந்து, அவள் தூங்குவதைக் கண்டு, அவளைத் தட்டி எழுப்பி, "அடி மூடமே! இந்த வைபவங்கள் நிலையற்றன உனக்கு ஆபத்து வந்திருக்கிறது. பொழுது விடிந்தால் ராமனுக்குப் பட்டாபிஷேகம். இப்படிப்பட்ட சமயத்தில் நீ தூங்கலாகுமா?" என்று சொன்னுள். அதைக்கேட்ட கைகேயி, "ராமன், பரதன் என்ற வித்தியாசம் எனக்கு இல்லை. நான் ராமனிடத்தில் மிகவும் பிரேமையுள்ளவள். இராமனும் என்னிடத்தில் மிகவும் வாஞ்சை யுடையவன். ஆகையால் அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்யப் போகிற சமாசாரத்தைக் கேட்க, எனக்கு மிகவும் சந்தோஷமா யிற்று. இந்த நல்ல சமாசாரத்தைக் கொண்டுவந்த உனக்கு என்ன வெகுமதி என்னுல் கொடுக்கமுடியும். இந்தா, இந்த மாலையைப் பெற்றுக்கொள்" என்றுசொல்லி ஒரு சிறந்த மாலையைக் கொடுக்க, கூனி அதை வாங்கி கோபத்துடன் வீசி எறிந்துவிட்டு, அடித்துக்கொண்டு, கதறியழுது கைகேயியைப் பார்த்து, "அடி கைகேயி, நீ ஒன்றும் அறியாதவள். ராமன் உனது சக்களத்தியின் பிள்ளையல்லவா? அப்படியிருக்க நீ அவளிடம் அபிமானமாயிருப்பது எப்படி? ராஜா மிகவும் கெட்டவர். அவர் இருப்பது மட்டும் உன்னிடம். ஆனுல் கொடுப்பதெல்லாம் கோசலைக்கே. தவிரவும் அவருடைய கபடத்தை நீ கவனித்தாயா! பரதன் இங்கிருந்தால் அவனுக்கு ராஜ்யபாகம் கொடுக்கவேண்டி யிருக்குமென்று, அவனை ஊரைவிட்டு வெகுதூரம் அனுப்பிவிட்டு அவன் இல்லாத சமயத்தில் இந்த பட்டாபிஷேகத்தை நிச்சயித்து மிகவும் அவசரமாக நடத்துகிருர். ராமன் மிகவும் அயோக்கியன். அவனுக்குப் பட்டாபிஷேகமானுல், அவன் கட்டாயம் பரதனைக் கொல்வான். ராமன் அரசனுனுல், ராஜ்யத்தில் அவன் மனைவி சீதைக்கும், தாயார் கோசலைக்கும் தான் அதிகாரம். நீ அவர்களுக்குப் பணிவிடை செய்துதான் பிழைக்கவேண்டும். இப்படிச் சக்களத்திக்குக் கைங்கரியம் செய்து பிழைப்பது எங்கேயாவது உண்டா? உன்கதியே அப்படியாகும்பொழுது என் கதியைப்பற்றிச் சொல்லவேண்டியதே இல்லை" என்று சொல்லி வருந்தினுள். இதைக்கேட்ட கைகேயியின் புத்தி மாறியது. அவள் கூனியைப் பார்த்து, "ஏ, கூனி, நான் கபடமறியாதவள். எப்படி இந்த பட்டாபிஷேகத்தை நிறுத்தலாம்? எனக்கு இப்பொழுது தகுந்தபடி யோசனையை நீதான் சொல்லவேண்டும்"

என்று கேட்க, கூனி அவளைப்பார்த்து, "ஏ, ராஜகுமாரீ! நீ உன் அலங்காரங்களை அகற்றிவிட்டு, தலையை விரித்துக்கொண்டு, அழுக்கான வஸ்திரத்துடன் கீழே படுத்துக்கொண்டு துக்கப்பட்டுக்கொண்டிரு. அரசன்வந்து, உன்னைக்கண்டு, சமாதானப்படுத்தி, உன் துக்கத்திற்குக் காரணத்தைக் கேட்பார். அதுதான் உனக்குத் தகுந்த சமயம். நீ அப்பொழுது ஏமாந்துவிடாதே. நீ அவரிடம் பிரமாணத்தை வாங்கிக்கொண்டு, ஆதியில் சம்பராசுர யுத்தத்தில் அவர் உனக்குக்கொடுத்த இரண்டுவரங்களைக் கேட்டுக்கொள். முதல் வரத்தால் உன்மகன் பரதன் ராஜ்யபரிபாலனம் செய்யவேண்டும் என்றும், இரண்டாவது வரத்தால் இராமன் பதினான்கு வருஷங்கள் வனவாசம் செய்யவேண்டுமென்றும் கேள். ஏமாந்துபோகாதே. ஜாக்கிரதை" என்று சொல்லிக்கொடுத்துச் சென்றுவிட்டாள். அவள் சொன்னபடியே கைகேயியும் தன் ஆபரணங்களை யெல்லாம் அகற்றிவிட்டு, அழுக்கான வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டு, கோபாகிரகத்தில் தரையில் படுத்துக்கொண்டு துக்கப்பட்டுக்கொண்டிருந்தாள்.

இது இப்படியிருக்க, தசரதர் பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யும்படி கட்டளையிட்டு, இந்த சந்தோஷமான செய்தியைக் கைகேயிக்குச் சொல்லவேண்டுமென்று எண்ணி, ஆவலுடன் அவள் அந்தப்புரத்தை யடைந்தார். அங்கு அவள் இருக்கும் அலங்கோலத்தைக் கண்டு, திகைத்து, அவளைச் சமாதானம் செய்யும்பொருட்டு அவளைத் தடவிக்கொடுத்துப் பல விதமாய் உபசரித்து, "உன் துக்கத்திற்குக் காரணம் என்ன? யாராவது உன்னை தூஷித்தார்களா? சொல். இப்பொழுதே நான் அவர்களைத் தண்டிக்கிறேன். அல்லது உனக்கு ஏதாவது வேண்டுமானால் சொல். அதை இப்பொழுதே கொடுக்கிறேன். அல்லது நான் உனக்கு ஏதாவது செய்யவேண்டுமா? அதைச் சொன்னால் உன் இஷ்டத்தைப் பூர்த்திசெய்கிறேன்" என்று சொல்ல, அவள் மேலும் அதிக துக்கத்தை யடைந்தவள்போல் பிரலாபித்தாள். அரசனும் அவளைச் சமாதானப்படுத்திக் காரணத்தைக் கேட்க, அவள், "உமக்கு என்னைத் திருப்திசெய்ய வேண்டுமென்று எண்ணமிருந்தால், நீர் எனக்கு பிரதிக்ஞை செய்யவேண்டும்" என்று சொன்னாள். உடனே தசரதன், "நான் எந்தக் குழந்தையில்லாமல் முதலில் விசனமடைந்திருந்தேனோ, எந்தக் குழந்தையைப் பெற்றபின் சந்தோஷமுள்ளவனாயிருக்கிறேனோ, எந்தக்

குழந்தை இல்லாவிட்டால் நான் ஜீவிக்கமாட்டேனே, அந்தக் குழந்தையான ராமன் பேரில் பிரமாணமாய் நான் உன் இஷ்டத்தைப் பூர்த்திசெய்வேன்'' என்று பிரதிக்ஞை செய்தார். கைகேயி சமாதானமடைந்து, எழுந்து உட்கார்ந்துகொண்டு, நீர் செய்த சத்தியத்திற்கு இந்த இரவு வேளை சாக்ஷி. இப்பொழுதுள்ள நக்ஷத்திரங்கள் சாக்ஷி. திக்குதேவதைகள் சாக்ஷி. இக்கிரக தேவதைகள் சாக்ஷி. என்றுசொல்லித் தன்கையை அவர்தோளில் போட்டுக்கொண்டு, ''நாதா! தாங்கள் ஏற்கனவே சம்பராசுரயுத்தத்தில் எனக்குக் கொடுத்துள்ள இரண்டு வரங்களை இப்பொழுது கொடுக்கவேண்டும்'' என்றாள். அதுகேட்ட அரசன், ''இது தானா பிரமாதம்? இதற்குத்தானா இவ்வளவு பிரமாணம் வாங்கிக் கொண்டாய்? வரங்களைக் கேட்டுக்கொள்'' என்று சொல்ல, கைகேயி, ''எனக்கு ஆதியில் கொடுத்துள்ள வரங்கள் உண்மையானால், முதல் வரத்தால் என் மகன் பரதன் அரசாளவும், இரண்டாவது வரத்தால் ராமன் பதினான்கு வருஷங்கள் வனவாசம் செய்யவும் உத்திரவு கொடுக்கவேண்டும்'' என்று சொன்னாள். அதுகேட்ட அரசன் மிகவும் துக்கமடைந்து, மூர்ச்சித்தார். பிறகு எழுந்து கைகேயியைப் பார்த்து, ''ராமனிடம் பிரேமையுள்ள உன்னை யார் கலைத்தார்கள்? உன் புத்தி ஏன் இப்படி மாறியது? நான் நேற்று சபையில் 'நாளை ராமனுக்குப் பட்டாபிஷேகம்' என்று சொல்லிவிட்டு, இன்று மாறுவேனேயாகில், சத்தியத்தை விட்டவனல்லவா? எப்படிநான் சத்தியத்தை விடுவேன்? ('சத்தியத்தை மீறக்கூடாது' என்று இவ்வளவு தீவிரமாக இருப்பவர், ஆதியில் சுல்கம் வைத்திருந்தால், எப்படி அதை மீறி ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய எண்ணுவார்? ஆதலால் சுல்கம் கிடையாது என்பது நிச்சயம்) மேலும் 'மூத்தபிள்ளைக்கேபட்டம்' என்ற குலதர்மத்திற்கு விரோதமான காரியத்தை நான் எப்படிச் செய்வேன்? தவிறவும் யாதொரு குற்றமும் செய்யாதவனைக் காட்டுக்கு அனுப்புவது நியாயமல்லவே! ராமனை விட்டுப்பிரிந்து ஒரு முகூர்த்த காலங்கூட நான் ஜீவித்திருக்கமாட்டேன். இந்த பட்டாபிஷேகத்திற்காக வந்திருக்கும் அரசர்களுக்கு நான் என்ன சொல்லுவேன்?'' என்று சொல்லித் துக்கித்துப் பின் கைகேயியைப் பார்த்து, ''ஏ, கைகேயி, நீ கேட்டபடி முதல் வரத்தை வேண்டுமானால் பெற்றுக்கொள். இரண்டாவது கேட்டவரத்தை விட்டுவிடு. ராமன் நீ எனக்குக் கொடுத்த பிள்ளையாய் இருக்கட்டும். நான் உன்னை யாசிக்கிறேன்'' என்று சொன்னார். அது

கேட்ட கைகேயி கோபத்துடன், "ராஜனே, சத்தியத்தை விடக் கூடாது. நீர் இப்படி சத்தியத்தை மாறுவீர் என்றுதான் நான் உம்மிடம் முதலில் பிரதிக்ஞை வாங்கினேன். ராமன் காட்டுக்குச் செல்லத்தான் வேண்டும். பரதன் ராஜ்யத்தை ஆளத்தான் வேண்டும்" என்று சொல்ல, அரசர் மூர்ச்சித்தார். கொஞ்ச நேரத்திற்குப் பிறகு மறுபடி எழுந்திருந்து மிகவும் கோபங் கொண்டு, "ஏ, துஷ்டே! நீ என் பிராணனை வாங்கிவிட்டபடியால், நீ எனக்குப் பத்தினியல்ல. நான் உன்னை ஆதியில் கன்னிகா தான காலத்தில் எப்படி அக்னிசாக்ஷியாய் கைப்பிடித்தேனோ, அதேவிதமாய் இப்பொழுது உன்னைக் கைவிட்டேன். மேலும் உன் பிள்ளையான பரதன் இந்த ராஜ்யத்தை யிச்சிப்பானேயாகில், ராமன் காடுபோன விஷயத்தில் திருப்தியடைவானே யாகில், நான் இறந்த பிறகு எனக்கு அவன் கர்மங்களைச் செய்யக்கூடாது. அப்படி அவன் மீறிக் கர்மம் செய்தாலும், அது என்னை யடையா மல் இருக்கட்டும்" என்று சொல்லி, துக்கத்தால், "ஏ, ராமா! இனி நான் உன்னைக் காணப்போகிறேனு!" என்று பிரலாபித் துக்கொண்டு மூர்ச்சையடைந்தார்.

இப்படி இரவுகாலம் முடிய, விடியற்காலையில் வசிஷ்டர் பட் டாபிஷேகத்திற்கு வேண்டிய சாமான்களுடன் அரண்மனையை யடைந்து, அங்கு இருந்த மந்திரியான சுமந்திரனைப் பார்த்து, "நீர் சென்று சீக்கிரத்தில் அரசரை அழைத்துவாரும்" என்று சொன்னார். அவரும் அந்தப்புரம் சென்று ஸ்தோத்திரங்களால் அரசரை எழுப்பும்போது, கைகேயி திரையைத் தள்ளிக்கொண்டு வெளியே வந்து அவரைப்பார்த்து, "மஹாராஜா தூங்கவில்லை. விழித்துக்கொண்டுதானிருக்கிறார். ஆனால் அவருக்கு ராமனை உடனே பார்க்கவேண்டுமென்று எண்ணம். ஆதலால் நீர் கார ணத்தை விசாரிக்காமல், சீக்கிரம் சென்று ராமனை அழைத்து வாரும்" என்றாள். அதுகேட்டு அவர் வெளியேவர, வசிஷ்டர் அவரிடம் விஷயத்தைத் தெரிந்துகொண்டு, மறுபடி போய் அர சனைக் கூப்பிடும்படி சொல்ல, மந்திரி திரும்பிவந்து ஸ்தோத்திரங் களால் எழுப்பினார். அதுகேட்டு அரசன், "நான் உயிருடன் தான் இருக்கிறேன். என்உயிர் இருக்கும்பொழுதே என் ஆக்ஞை மீறப்பட்டதா?" என்று கோபித்துக்கொண்டார். மந்திரிஉடனே ராமன் அரண்மனைக்குச் சென்று ராமனைக்கூப்பிட்டு விஷயத்தைச் சொன்னார். அவரும் சீதையிடம் சொல்லிக்கொண்டு புறப்பட,

அவள் தன் நாதனை வாசற்படிபரியந்தம் வழிகொண்டுவிட்டு, அஞ்சலிபந்தம் செய்துகொண்டு தேவதைகளை மனதில் தியானித்துக்கொண்டு தன் பர்த்தாவுக்கு மங்களம் உண்டாகவேண்டும் என்று பிரார்த்தித்தாள். அவளுக்கு ஒரு சன்மானம் செய்து அனுப்பிவிட்டு, ராமன் தேரில் ஏறிக்கொண்டு புறப்பட, லக்ஷ்மணனும் அதில் ஏறிக்கொண்டான். மந்திரி ரதசாரத்தியம் செய்துகொண்டு வரும்போது, ஜனங்கள் எல்லோரும், 'இனி ராமனைநாம் பட்டாபிராமனைப் பார்ப்போம்' என்று சந்தோஷித்து அவனைக் கொண்டாடினார்கள். அதைக் கேட்டுக்கொண்டே ராமன் கைகேயி அரண்மனையை அடைந்தார். மந்திரி கைலாகு கொடுக்க, இரதத்தைவிட்டு கீழே இறங்கி, லக்ஷ்மணனையும் சுமந்திரனையும் வெளியே நிறுத்திவிட்டு தான்மட்டும் உள்ளே சென்றார். அங்கு பரம துக்கத்தால் முகவாட்டத்துடன் இருக்கும் பிதாவைக் கண்டு கவலையடைந்து, 'பிதா என்னிடம் பேசவில்லையே! என்ன காரணமோ தெரியவில்லை. இப்படிப்பட்ட நிலையில் நான் அவரைப் பார்த்ததில்லை. ஒருசமயம் நான் அறியாமல் ஏதாவது குற்றம் செய்துவிட்டேனோ! அதனால்தான் அவர் பேசவில்லையோ! என்று எண்ணி, பாம்பை மிதித்தவன் எவ்விதம் நடுங்குவானோ அவ்விதம் நடுநடுங்கிக்கொண்டு, மறுபடி யோசித்து, "நான் வந்ததைப் பிதா அறியவில்லையோ" என்று நினைத்து, அவரை நமஸ்கரித்து, "அப்பா, நான், ராமன் வந்திருக்கிறேன்" என்று சொன்னார். அப்பொழுதும் அவர் பேசாததால், மிகவும் கவலையடைந்து, பக்கத்திலிருந்த மாதாவான கைகேயியை வணங்கி, "அம்மா, ஏன் அப்பா இப்படி இருக்கிறார்? நான் அஞ்ஞானத்தால் அப்பாவுக்கு ஏதாவது அபராதம் செய்துவிட்டேனா? அல்லது ஊருக்குச் சென்றிருக்கும் பரத சத்ருக்னர்களுக்கு ஏதாவது ஆபத்து என்று சமாசாரம் வந்ததா? அல்லது உமக்கு அப்பாவிடம் இருக்கும் அதிப்பிரேமையால், சொல்லத்தகாத வார்த்தைகள் ஏதாவது சொல்லிவிட்டீரா? என்னகாரணம் சொல்லும்" என்று கேட்க, கைகேயி, "அதெல்லாம் ஒன்றுமில்லை, ராமா. ஆனால் உன் பிதா மனதில் ஒரு எண்ணம்இருக்கிறது. அதைச்சொன்னால் அதன்படி நீ நடப்பாயோ மாட்டாயோ என்று அவருக்கு பயம். ஆதலால் தான் அவர் உன்னிடம் பேசவில்லை அப்பா" என்று சொன்னாள்.

அதுகேட்ட ராமன் மிகுந்த விசனமடைந்து, "அம்மா, நீங்கள் சொன்ன இந்த வாக்கியம் என்மனதைப் புண்படுத்துகிறது.

பெற்ற பிள்ளையைக் கண்டு பிதா பயப்படுவாரேயாகில், அந்தப் பிள்ளை இருந்தாலென்ன இறந்தாலென்ன? பிதா என்னைக்கண்டு பயப்படுவாரேயாகில் இந்த என் தேகத்தைச் சுட்டாலும் தோஷ மில்லை. அம்மா, அப்பா என்னைப் பார்த்து, 'ராமா, நீ விஷத் தைச் சாப்பிடு' என்றாலும், 'சமுத்திரத்தில் விழுந்துவிடு' என் றாலும், 'அக்னியில் விழு' என்றாலும், வேறு என்னசொன்னாலும் காரணம் கேளாமல் உடனே அவர் சொல்லியபடி செய்யத் தயாரா யிருக்கும் என்னைக் கண்டா பிதா பயப்படுகிறார்? அப்படியானால் அவர் மனதில் இருக்கும் எண்ணத்தை நீராவது என்னிடம் சொல்லும். அதை உடனே செய்து நான் அவரைத் திருப்தி செய்கிறேன். ஏனென்றால் பிறப்புக்கு மூலகாரணமும், பிரத்தி யக்ஷ தெய்வமுமான அப்பிதா, என்னை 25 வயது வரையில் வளர்த்திருக்க, அவர் சொற்படி நான் நடக்காவிட்டால், நான் பிள்ளையாவேனோ? ஆதலால் விஷயத்தைச் சொல்லும் அம்மா" என்று கெஞ்சிக்கேட்டான். அப்பொழுது கைகேயி, "ராமா, உன்பிதா தன் எண்ணத்தை உன்னிடம் சொல்லமாட்டார். அதை நானே சொல்லுகிறேன். நீ அதன்படி நடக்கவேண்டுமே!" என்று சொல்லக்கேட்டு ராமன் 'அம்மா ராமனுக்கு சொல் இரண் டில்லை' என்று சொன்னார். உடனே கைகேயி ராமனைப் பார்த்து "ஏற்கனவே உன்பிதா சம்பரர்சுரயுத்தகாலத்தில் எனக்கு இரண்டு வரங்கள் கொடுத்தார். அவைகளை நான் இப்பொழுது கேட் டேன். உன்பிதா கொடுத்தார். அதாவது முதல் வரத்தால் பரதன் இந்த இராஜ்யத்தைப் பரிபாலிக்க வேண்டும் என்றும், இரண்டாவதால் நீ பதினான்கு வருஷங்கள் வனவாசம் செய்ய வேண்டுமென்றும் கேட்டேன். உன் பிதா எனக்கு வரங்களைக் கொடுத்திருப்பதால், நீ வனத்தை யடையவேண்டும்" என்று சொன்னாள். அதுகேட்டு ராமன் கொஞ்சமும் வருத்தப்படாமல், "அம்மா, அப்படியே யான் வனம் செல்வேன். நீர் சீக்கிரத்தில் பரதனை வரவழைத்து, அப்பா உத்திரவின்பேரில் அவனுக்கு பட்டாபிஷேகம் செய்யவும்" என்று சொல்லி, "இதை அப்பா சொன்னால் நான் கேட்கமாட்டேனா! அப்பா சொல்வாரேயானால், நான் இந்த இராஜ்யத்தை மட்டுமா பரதனுக்குக் கொடுப்பேன்! என் உயிரையும் கொடுப்பேன். சீதையையும் கொடுப்பேன். வேறு எதையும் கொடுப்பேன்" என்று சொன்னான். உடனே கைகேயி "இவன் 'வனம் போகிறேன்' என்று சொன்னபோதே இவனை வெளிப்படுத்திவிடவேண்டும், இல்லாவிட்டால் லக்ஷ்மண

னுடன் சேர்ந்து பின்னால் மாறினால் என்ன செய்வது?" என்று எண்ணி, "ஏ, ராமா! எதுபரியந்தம் நீ ஊரைவிட்டுப் போகவில்லையோ அதுபரியந்தம் உன் பிதா எழுந்திருக்கமாட்டார், சாப்பிடமாட்டார், தூங்கமாட்டார்" என்று சொன்னாள். இந்தவாக்கியம் அப்பொழுது சற்று பிரக்ஞை யடைந்திருந்த அரசன் காதில்பட, உடனே அவர், "ராமா, நான் ஒன்றுமே சொல்லவில்லையப்பா" என்று கதறிக்கொண்டு மூர்ச்சித்துவிட்டார். அதுகண்ட ராமன், அவரிடம் ஓடிவந்து, அவரை எடுத்துத் தன் மடியில் போட்டுக்கொண்டு, தகுந்த உபசாரங்களைச் செய்து, "பிதாவை சத்தியசந்தனைச் செய்வது பிள்ளையின் கடைமையாதலால் நான் வனம் சென்று வருகிறேன். நீர் கவலைப்படவேண்டாம்" என்று சொல்லிப் பின் கைகேயியைப் பார்த்து, "அம்மா நான் பணத்தாசை பிடித்தவனல்லன். சகலத்தையும் துறந்து காட்டில் தவம் செய்துகொண்டிருக்கும் ரிஷிகளுக்குச் சமமாக என்னை எண்ணிக்கொள்ளும். அம்மா, என்னைப் பெற்ற மாதாவான கோசலையிடமும், என் மனைவி சீதையிடமும் சென்று நான் வனம்செல்லும் விஷயத்தைத் தெரிவித்து அவர்களிடம் அனுமதி பெற்றுக்கொள்ளும்வரையில் நான் இவ்வூரில் இருக்க உத்திரவு கொடுக்க வேண்டும்" என்று கேட்டுக்கொண்டு அவ்விடத்தை விட்டுக் கோசலையின் அரண்மனையை நாடிவந்தார். அப்பொழுது அவள் தன் புத்திரனுடைய க்ஷேமத்திற்காக, நியமத்துடன் பிராதக் காலத்தில் விஷ்ணுபூஜை செய்து, அக்னியில் ஆகுதி செய்துகொண்டிருந்தாள். தன் பிள்ளையைக் கண்டதும் அவள் மிகவும் சந்தோஷித்து, "அப்பா, குழந்தாய்! வரவேண்டும். இந்த சுவர்ணமயமான ஆசனத்தில் உட்கார்ந்துகொள். கொஞ்சம் ஆகாரத்தைச் சாப்பிடு" என்று அன்புடன் சொல்ல, ராமன் "அம்மா, இப்பொழுது உமக்கு மிகுந்த விசனம் வந்திருக்கிறது. மேலும் எனக்கு இப்பொழுது இந்த ஆசனம் ஏற்றதல்ல. இருபத்தைந்து தர்ப்பையால் செய்யப்பட்ட தர்ப்பாசனம் தான் எனக்குத் தகுந்தது" என்று சொன்னார். அதுகேட்டு கோசலை ஒன்றுமறியாமல், "அப்பா, என்ன விஷயம்? சீக்கிரம் சொல்" என்றுகேட்க, இராமன், "அம்மா, கைகேயி அப்பாவைச் சத்தியத்தில் கட்டுப்படுத்தி, இரண்டு வரங்களைப் பெற்று, ஒரு வரத்தால் பரதன் நாடாளவும், மற்றொன்றால் நான் 14 வருஷங்கள் காட்டில் வசிக்கவும் கேட்டுக்கொண்டாள். பிதுர்வாக்கிய பரிபாலனம் செய்வதற்காக நான் காட்டிற்குப் போகவேண்டும். அதற்குத் தங்களிடம்

விடைபெற்றுபோகவே நான் வந்தேன். எனக்கு விடை கொடுக்க வேண்டும்" என்று தெரிவித்தார். கோசலை அதுகேட்டு, மிகுந்த துக்கத்தால் மூர்ச்சிக்க, ராகவன் தகுந்த உபசாரங்களால் அவள் மூர்ச்சையைத் தெளிவித்து சமாதானம் செய்தார். அப்பொழுது கோசலை ராமனைப் பார்த்து, "ஏ, ராமா! உன்னைப்பிரிந்து ஒரு முகூர்த்தகாலமும் நான் உயிருடன் இருக்கமாட்டேன். உனக்கு பரதனது சம்பத்துவேண்டாம். காடும் போகவேண்டாம். நீ எனது சம்பத்தை வைத்துக்கொண்டு, என்னுடைய அரண்மனையில் இருக்கலாம். கண்டு என்ற மகரிஷி தன் தாயாருக்குப் பணிவிடை செய்துவந்ததுபோல நீயும் செய்துகொண்டிரு" என்று சொல்ல, இராமன், "அம்மா, பிறப்புக்கு மூலகாரணமான பிதா முன்னமேயே ஆக்ஞை செய்துவிட்டபடியால், அவர் ஆக்ஞையை நான் மீறமுடியாது. அவரோ அரசராகவும், பிதாவாகவும், குருவாகவுமுள்ளவர். பிதாவைச் சத்தியசந்தராய்ச் செய்யவேண்டியது பிள்ளையின் கடமையல்லவோ! நான் பிதாவின் சொற்கேட்பதும் புதிது அல்ல. நமது முன்னோர்களான சாகரர்கள் பிதாவின் வார்த்தையைக் கேட்டார்கள். பரசுராமனும் பிதாவின் வார்த்தைப்படி செய்தவன். ஆதலால் பிதாவின் வாக்கியம் விடத்தகுந்ததல்ல" என்று சொன்னார். அப்பொழுது ராமன் கூடவே வந்திருந்த லக்ஷ்மணன் கோபித்துக்கொண்டு (ராமன் ஸத்வகுணத்திலும், பரதன் ரஜோகுணத்திலும், லக்ஷ்மண சத்ருக்னர்கள் தமோகுணத்திலும் ஜனனம். இதை சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்), அவர்களைப் பார்த்து, "நான் இப்பொழுதே கைகேயியையும், ராஜனையும் கட்டிப்போட்டுவிட்டு, இராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்விக்கிறேன். மேலும் இன்னகாரியம் செய்யத்தகுந்தது இன்னது செய்யத்தகாதது என்று அறியாத அரசனைக் கொல்லுகிறேன். உண்மையில் ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்ற எண்ணம் இவருக்கிருந்திருந்தால், இவர் ஏன் நேற்று கைகேயின் அரண்மனைக்குப் போகவேண்டும்? இவ்விஷயத்தைக் கவனித்தால் இப்படிச் செய்யவேண்டுமென்று இருவரும் ஏற்கனவே பேசிக்கொண்டிருப்பதாக ஏற்படுகிறது. ஆதலால் இவ்விருவரையும் கட்டிப்போட்டுவிட்டு பட்டாபிஷேகத்தை நடத்துகிறேன்" என்று கூறினான். அப்பொழுது இராமன் லக்ஷ்மணனைப் பார்த்து, "அப்பா, லக்ஷ்மணா, நீ நமது கடைசி அம்மாவைக் கோபிக்காதே. அவர் தெய்வகதியாய் இவ்விதம் மாறியிருக்கிறார். தெய்வச் செயலை மாற்ற யாரால் முடியும்?

ஆகையால் நீ பெரியோர்களான மாதா பிதாக்களை நிந்திக்காதே" என்று சொல்ல, லக்ஷ்மணன், "அண்ணா, தெய்வமென்பது யாருக்குத் தெரியுமா? பலமில்லாதவர்களும், வியாதியஸ்தர்களும் தான் எப்பொழுதும் தெய்வத்தைக் கொண்டாடுவார்கள். சுத்த க்ஷத்திரியன், அதிலும் தனுர்வேதமறிந்தவன் தெய்வத்திற்குப் பயப்படுவானா? நீர் தெய்வத்தைக் காட்டினால் நான் அதை இப்பொழுதே அடித்து வீழ்த்துகிறேன். என் பலத்தால் அது அடிபட்டுக்கிடப்பதைத் தாங்களும் பார்க்கலாம். அப்பாவும் பார்க்கட்டுமே" என்று கோபாவேசத்துடன் சொல்லவே, ராமன், லக்ஷ்மணா, நீ இவ்விதம் தெய்வத்தையும், பெரியோர்களையும் நிந்திப்பது சரியல்ல. தெய்வத்திற்கு ரூபம் இல்லை. அது கண்ணுக்குத் தெரியாது. அது அழிவில்லாதது. அதைக் கொல்லவும் முடியாது. காரியங்கள் நடக்கும்போது, அனுபவத்தில் தான் 'தெய்வம் உண்டு' என்றறியவேண்டும். நீயும் அதை அனுபவத்தால் பின்னால் அறிவாய், ஆதலால் லக்ஷ்மணா, நீ இதையும் தெய்வச்செயல் என்று எண்ணிக்கொள். கோபத்தால் இப்படியெல்லாம் சொன்னால், ஏற்கனவே துக்கத்தில் ஆழ்ந்திருக்கும் நமது மாதா இன்னும் அதிக துக்கப்படுவார். ஆகையால் நீ நான் சொல்வதை கேட்டுக்கொண்டு பேசாமலிரு" என்று சொல்லிப்பின் தன் மாதாவைப் பார்த்து, "அம்மா, நம் முன்னோர்கள் பிதாவின் சொல்லைக் கேட்பதான தர்மத்தைச் செய்ததுபோல் நானும் என் பிதாவின் வார்த்தையைத் தட்டாமல் வனவாசம் செய்து வருகிறேன். அனுமதி கொடுங்கள்" என்று கேட்டார். கோசலை "அப்பா, ராமா, அப்படியானால் நானும் உன்னுடன் வருகிறேன். நான் உன்னைப் பிரிந்து இருக்கமாட்டேன்" என்று சொல்ல, ராகவன், "அம்மா, பிதாவானவர் கைகேயின் வார்த்தையால் கட்டுப்பட்டு உயிருக்கு மன்றாடும்போது, கொண்ட கணவரான தெய்வத்தை விட்டு தாங்கள் என்னுடன் வருவது தர்மமல்லவே, 'எந்த உத்தமி தன் கணவனைப் பூஜித்து உபாசிக்கிறாளோ அவள் தன் பர்த்தாவின் லோகத்தை அடைவாள்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் தாங்கள் அப்பாவைப் பார்த்துக்கொள்ளுங்கள். நான் வனம் சென்று வருகிறேன். அனுமதி கொடுங்கள்" என்று கேட்டார். அது கேட்ட கோசலை, அவன் சொல்வது நியாயமானது எனத்தெரிந்து, "அப்பா, நீ எந்த தர்மத்தில் இருக்கிறாயோ அந்த தர்மமே உன்னைக் காட்டில் காப்பாற்றட்டும். விசுவாமித்திரர் உனக்குக் கொடுத்துள்ள அஸ்திரங்கள் உன்னை ரக்ஷிக்கட்டும்.

சகல தேவதைகளும் உனக்குக் காவலாக இருக்கட்டும். அதிதி தேவியின் அனுக்கிரகத்தால் இந்திரனுக்கு எவ்வித மங்களம் உண்டாயிற்றோ அந்த மங்களம் உனக்கும் உண்டாகட்டும். அமிர்தத்தைக் கொண்டுவருவதற்காக விநதாதேவி கருடனுக்குச் செய்த அனுக்கிரகமும், மகாபலியை யடக்குவதற்காக அதிதி தேவி வாமனமூர்த்திக்குச் செய்த அனுக்கிரகமும், உனக்கு உண்டாகட்டும்'' என்று ஆசீர்வதித்து, அவருக்கு ரக்ஷைகட்டி அவரைப் பிரதக்ஷிணம் செய்தார். ராமனும் மாதாவை நமஸ்கரித்து, விடைபெற்றுக்கொண்டு, அவ்விடத்தைவிட்டு சீதையின் அரண்மனையை அடைந்தார்.

தன் நாதனைக் கண்ட சீதை அவரை அன்போடு வரவேற்று, அவர் முகம் மாறுபட்டிருப்பதைக்கண்டு வருந்தி, "நாதா, தங்கள் முகம் மாறுபட்டிருக்கக் காரணம் யாது? பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் ஆகவில்லையா? அல்லது வேறு ஏதாவது விசேஷம் உண்டா?'' என்று கேட்க, ராகவன் "சீதா, என் பிதாவின் கட்டளைப்படி நான் வனவாசம் செய்யப்போகிறேன். உன்னிடம் அதைத் தெரிவித்துப் போகவே நான் இப்பொழுது இங்கு வந்தேன். இங்கு பரதன் ராஜ்யபரிபாலனம் செய்வான். நீ அவனிடத்தில் என்னைப்பற்றிப் புகழாதே. அவனும் உன்னைச் சிலாகிக்கும்படி இருக்காதே. மாமனார் மாமியாருக்குப் பணிவிடை செய்துகொண்டிரு. நான் சென்றுவருகிறேன்'' என்று சொன்னார். அதைக்கேட்ட சீதை, "நாதா, நானும் தங்களுடன் கூட வருகிறேன். தாங்கள் தங்கள் பிதாவின் வார்த்தையைக் கேட்பதுபோல, நானும் என் பிதாவின் வார்த்தையைக் கேட்கவேண்டுமல்லவா? அவர் நமது கலியாண காலத்தில், 'இவள் உம்மை நிழலைப்போல் பின்பற்றுவாள்' என்று சொல்லவில்லையா? ஆகையால் நீங்கள் இருக்குமிடத்தில்தான் நானும் இருக்கவேண்டும். ஆனால் தங்களுக்கு எவ்விதமான கஷ்டத்தையும் கொடுக்கமாட்டேன். தயவுசெய்து என்னையும் அழைத்துச் செல்லுங்கள்'' என்று வேண்ட, ராமன், "காட்டில் வசிப்பது மிகவும் கஷ்டம். நீ வரவேண்டாம்'' என்று சொன்னார். அதுகேட்ட சீதை தன் நாதனிடம் கொண்டுள்ள அபிமானத்தாலும், பிரணய கோபத்தாலும் ராமனைச் சற்று திரஸ்கரித்துப் பேச, ராமன் அவளைத் தன்னுடன் அழைத்துச்செல்ல சம்மதித்தார். அவளும் உடனே புறப்பட்டாள். அப்பொழுது லக்ஷ்மணன் தானும் வருவதாகச்

சொல்ல, ராமன், "லக்ஷ்மணா! நீ இங்கேயே இருந்து மாதாபிதாக்களுக்கு வேண்டிய பணிவிடை செய்துகொண்டிரு" என்று சொன்னார். லக்ஷ்மணன் அவரைப் பார்த்து "அண்ணா! நான் உம்மை விட்டு உயிருடன் இருக்கமாட்டேன் (லக்ஷ்மணன் ராமனைப்பிரிந்து ஜீவித்திருக்கமாட்டான் என்ற விஷயத்தைச் சித்தாந்த புத்தகத்தில் பார்த்துக்கொள்ளவும்). என்னைக் கட்டாயம் கூட்டிப்போக வேண்டும்" என்று சொல்லி சீதையைப் பார்த்து. "அம்மா, நான் உங்களுக்குப் பணிவிடை செய்துகொண்டு காவலாக இருப்பேன். ஆகாரத்திற்குக் காய், கிழங்கு, கனிகள் கொண்டுவருவேன். என்னைக் கூட்டிக்கொண்டுபோக அண்ணாவிடம் சிபார்சு செய்யுங்கள்" என்றான். ராமரும் சீதையின் உத்தேசத்தை அறிந்துகொண்டு, லக்ஷ்மணனையும் கூட்டிக்கொண்டு போகச் சம்மதித்தார். அவனும் உடனே புறப்பட, ஸ்ரீ ராகவன் பெரியோர்க்குச் சகலவித தானங்களையும் செய்து, பிதாவின் இருப்பிடத்தை யடைந்து, அவரை நமஸ்கரித்து, லக்ஷ்மணனையும், சீதையையும் தன்னுடன் கூட்டிக்கொண்டுபோக அவருடைய அனுமதி பெற்றுக்கொண்ட பின் மூவரும் கைகேயியிடம் மரவுரிபெற்றுத் தரித்துக்கொண்டு புறப்பட்டார்கள். சீதைக்கு 14 வருஷங்களுக்கு வேண்டிய ஆடையாபரணங்களைத் தசரதர் கொடுக்க, ராமன் அனுமதியுடன் சீதை அவைகளைப் பெற்றுக்கொண்டாள். அப்பொழுது தசரதர் அபிப்பிராயப்படி சுமந்திரன் ரதம் கொண்டுவந்தான். லக்ஷ்மணன் தன் மாதாவை நமஸ்கரித்துத் தானும் போய்வருவதாகச்சொல்ல, அவள், "அப்பா,லக்ஷ்மணா, ராமனைப்பிதாவாகவும், சீதையைமாதாவாகவும், காட்டைஅயோத்தியாகவும் எண்ணிக்கொள். க்ஷேமமாய் போய்வா" என்று ஆசீர்வதித்து அனுப்பினாள். பிறகு அம்மூவரும் ரதத்தில் ஏறிப் புறப்பட, ஜனங்கள் ராமனைப் பிரிந்து இருக்க இஷ்டப்படாமல், அவருடன் புறப்பட்டார்கள். தசரதரும் ராமனைப்பிரிந்து அரண்மனையில் இருக்க முடியாமல், ரதத்தைத் தொடர்ந்து வந்து, ரதமோட்டும் சுமந்திரனை யழைத்து ரதத்தை நிறுத்தச் சொன்னார். அப்பொழுது ராமன் சுமந்திரனிடம் "ரதத்தை நிறுத்தாமல் ஓட்டும். நாளை நீங்கள் ஊருக்குப் போனதும் 'ஏன் ரதத்தை நிறுத்தவில்லை?' என்று அப்பா கேட்டால் 'நீங்கள் ரதத்தை நிறுத்தச் சொன்னது காது கேட்டது. ஆனால் அப்படி நிறுத்தினால் துக்கத்திற்கு இடமுண்டாகும். அப்படி துக்கத்திற்கு இடம் கொடுப்பது பாபம் என்றுதான் நான் நிறுத்தாமல் ஓட்டினேன்' என்று சொல்லிவிடுங்கள்" என்று

சொன்னார் (கதாநாயகனான ராமன், கதாநாயகி சீதை, ராகவனுக்குப் பரம மித்திரனான சுக்ரீவன் இவர்கள் ஒரு சமயத்திலும் பொய் சொல்லவில்லை என்பதை சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்). அப்படியே சுமந்திரனும் ரதத்தை நிறுத்தாமல் ஓட்டினதால் தசரதர் பின்தொடர்ந்து வரவில்லை. ஆனால் ஜனங்கள் மட்டும் வந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் தன்னுடன் கூடவே வந்தால், காடு நாடாகுமாதலால் தான் காட்டில் வசிப்பதாகச் சொன்னது பொய்யாகுமென்றெண்ணி, அவர்களை இரவில் தமஸா நதிக்கரையில் விட்டுவிட்டு, அவர்களறியாமல் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு கங்கைக்கரை வந்து சேர்ந்தார் ('கங்கை விஷ்ணு பாதத்திலிருந்து பெருகினதும் பரமசிவன் தன் தலையில் அதைத் தாங்கினார்' என்பது வால்மீகமல்ல — இதைச் சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்). ஏற்கனவே ராமனுக்கு மித்திரனும், நிஷாத ஜாதியில் ஜனித்து சிருங்கிபேரம் என்ற பட்டணத்திற்கு அதிபதியுமிருந்த குஹன் ராமன் வரவையறிந்து சகல மரியாதைகளுடன் அவரை வரவேற்றான். அப்பொழுது ராமன், "நண்ப, நீர் கொண்டுவந்த வஸ்துக்களில் நான் மிகுந்த திருப்தியடைந்தேன். ஆனால் கைநீட்டி வாங்கும் வழக்கம் இல்லை" என்று சொல்லி அவனை ஆலிங்கனம் செய்துகொண்டு, பின் லக்ஷ்மணனால் கொண்டுவரப்பட்ட கங்கா தீர்த்தத்தைப் பருகி, லக்ஷ்மணனால் மணிபுங்க மரத்தடியில் போடப்பட்ட தர்ப்பப்படுக்கையில் படுத்துக்கொள்ள, லக்ஷ்மணன், சுமந்திரன், குஹன் மூவரும் காவலாக இருந்தனர். அப்பொழுது குஹன் லக்ஷ்மணனைப் பார்த்து, 'உமக்கும் படுக்கை போடப்பட்டிருக்கிறது. நீங்களும் தூங்கலாம். உங்கள் எல்லோருக்கும் நான் காவலாயிருந்து காப்பாற்றுகிறேன்" என்றுசொல்ல, லக்ஷ்மணன், "எங்களை எங்கள் தர்மமே காப்பாற்றும். நீர் காப்பாற்ற வேண்டாம். மேலும் என் அண்ணன் ராமனும், சீதையும் இப்படித் தரையில் படுத்திருக்க எனக்குத் தூக்கம்வருமா! உணவுதான் வேண்டியிருக்குமா!" என்றுசொல்லிவிட்டு, இரவுமுழுவதும் தானே காவலாயிருந்து, பொழுதுவிடிந்ததும் ஆலம்பால் கொண்டுவரும்படி குஹனிடம்சொல்ல, அவனும் கொண்டுவந்தான். பிறகு இராமலக்ஷ்மணர்கள் ஜடை தரித்துக்கொண்டு, படகுகொண்டுவரும்படி சொல்ல, குஹனது வேலைக்காரன் படகுகொண்டுவர, லக்ஷ்மணன் ராமரது கட்டளைப்படித் தன் மாதாவான சீதையை முதலில் படகேற்றிவிட்டுத்தானும் ஏறிக்கொண்டான். பிறகு ராமனும் படகேறினார்.

அப்பொழுது சுமந்திரன், "ராமா, நான் உம்மைவிட்டுச் செல்ல மாட்டேன். ஊருக்குப் போனதும் மாதாவான கோசலை 'ராமன் எங்கே?' என்று கேட்டால், 'அவனை மாதுலன் வீட்டில் கொண்டு விட்டேன்' என்று எப்படிப் பொய்சொல்வேன். ஆதலால் நான் இங்கேயே உயிரை விட்டுவிடுகிறேன்" என்று சொல்ல, ராமன், "மந்திரியே, நான் காட்டுக்குப் போனேனோ, இல்லையோ என்று கைகேயி சந்தேகம் கொள்வள். ஆதலால் நீங்கள் ஊருக்குச் சென்று, நான் காட்டிற்குப் போய்விட்டதாக அவரிடம் சொல்ல வேண்டும். பரதன் வந்ததும், அப்பா ஒருவர் இருக்கிறார் என்று அவனிடம் தெரிவிக்கவேண்டும். கோசலையிடமும், சுமித்திரையிடமும், பிதாவிடமும் நான் அவர்கள் அனுக்கிரகத்தால் 14 வருஷங்களைக் காட்டில் சந்தோஷமாய்க் கழித்துத் திரும்பிவந்து அவர்களை நமஸ்கரிப்பதாகச் சொன்னதாகச் சொல்லவேண்டும்" என்று சொன்னார். பிறகு சுமந்திரன் லக்ஷ்மணனைப் பார்க்க, அவன் எது எப்படி இருந்தாலும் ஒரு குற்றமும் செய்யாத ராமனை பிதா காட்டிற்கு அனுப்பியது நியாயமல்ல என்று நான் சொன்னதாகச் சொல்லும்" என்று சொன்னான். சீதை ஒன்றும் பேசாமல் ரதத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள். படகு புறப்பட்டது. கங்கா மத்தியை யடைய சீதை கங்கையை ஸ்துதித்தாள். பிறகு அவர்கள் அக்கரை அடைந்தனர். எல்லோரும் படகைவிட்டிறங்கி, வனத்தில் சுற்றிக்கொண்டிருந்து பிறகு ராம லக்ஷ்மணர்கள் நான்கு மிருகங்களை அடித்துக்கொண்டுவர, மூவரும் மாமிச போஜனம் செய்து அன்று முழுதும் வனசஞ்சாரம் செய்து இரவில் ஒரு இடத்தில் படுத்துத் தூங்கினார்கள். மறுநாளும் வன சஞ்சாரம் செய்து மாமிசபோஜனங்கொண்டு வனத்தில் படுத்துத் தூங்கி எழுந்து கங்கையும், யமுனையும் சந்திக்குமிடத்திலுள்ள பரத்துவாஜர் ஆசிரமத்தை யடைந்தார்கள்.

பரத்துவாஜர் ராமாதிகளைப் பூஜிக்க, அவர்களும் சந்தோஷித்து, "வாசத்திற்குத் தகுந்த இடமொன்றைச் சொல்லவேண்டும்" என்று கேட்க, "தேவதைகளுக்கும், பெரியோர்களுக்கும் இருப்பிடமாயுள்ளது சித்திரகூடம். அங்கு வசிக்கலாம்" என்று சொன்னார். அவர்களும் சித்திரகூடத்தை யடைந்து வால்மீகியைக் கண்டு சந்தோஷித்து, அவரது ஆசிரமத்திற்குப் பக்கத்தில் மால்யவதி நதிக்கரையில் லக்ஷ்மணனால் கட்டப்பட்ட பர்ணசாலையில் சந்தோஷமாய் வசித்துவந்தனர்.

இது நிற்க, தசரதர் கோசலையின் அரண்மனையை யடைந்து ராமனைப் பிரிந்து துக்கப்பட்டுக்கொண்டுருக்கும்போது ராமனால் தமஸா நதிக்கரையில் விடப்பட்ட ஜனங்களும் ஊரைநாடி வந்தார்கள். கோசலையும் தன் மகனைப் பிரிந்த துக்கத்தால் பிரலாபித்துக்கொண்டிருக்க, சுமித்திரை அவளைத் தேற்றி, "நீ கவலைப்படவேண்டாம். ராமன் தண்டகாரண்யத்தில் சம்பராசுரன் பிள்ளையை யுத்தத்தில் கொன்றபோது, பிரம்மதேவர் ராமனுக்கு அற்புதமான, சிறந்த அஸ்திரங்களைக் கொடுத்திருப்பதால், அவனுக்கு ஒன்றும் ஆபத்து வராது" என்றுசொல்ல, கோசலையும் சற்று சமாதான மடைந்திருந்தாள். இப்படி மூன்று நாட்கள் கழிய, ராமனைக் காட்டில் விட்டுவந்த மந்திரியான சுமந்திரர் வந்தார். அவர் வருவதைக்கண்ட கோசலை தன் கணவனிடம், "ராமன் என்ன சொன்னான்? என்று கேளுங்கள்" என்று சொன்னாள். மந்திரி அங்கு வந்ததும் அரசர் அவரைப் பார்த்து, "ராமன் எங்கள் எல்லோருக்கும் என்ன தெரிவித்தான்?" என்று கேட்க, சுமந்திரன் "தங்கள் அனுக்கிரகத்தால் 14 வருஷங்களைக் காட்டில் சௌக்கியமாய்க் கழித்துப் பின்வந்து தங்கள் எல்லோரையும் நமஸ்கரிப்பதாய் ராமன் சொன்னார். ஒரு குற்றமும் செய்யாத ராமனை நீங்கள் காட்டிற்கனுப்பியது நியாயமல்லவென்று லக்ஷ்மணன் சொல்லச்சொன்னான். சீதை ஒன்றும் பேசவில்லை" என்று சொல்லக்கேட்டு மிகுந்த துக்கத்தை யடைந்தனர். இப்படியே எல்லோரும் துக்கப்பட்டுக்கொண்டிருக்க, ராமன் காட்டிற்குப் போய் ஐந்து நாள் முடிந்து ஆறுவது நாள் கோசலை மகப்பிரிவான துக்கத்தைப் பொறுக்க முடியாமல், அரசனைப் பார்த்து, நாதா, யாதொரு குற்றமும் செய்யாத ராமனை யாது காரணம்பற்றி காட்டிற்கனுப்பினீர்கள்? இளையாளின் மோகத்தில் ஈடுபட்டு பந்துக்களையும் இழந்து இராஜ்யத்தையும் இழந்ததுமல்லாமல் என்னையும் பிள்ளையை இழக்கும்படிச் செய்துவிட்டீரே! தாங்கள் இப்படிச் செய்யலாமா? துக்கம் பொறுக்க முடியவில்லையே" என்று சொன்னாள். அதுகேட்டு தசரதர் மிகவும் வருந்தி, "ஏ கௌஸல்யே, உத்தமிகள் தாங்கள் மணந்த புருஷர்கள் நல்லவர்களானாலும், கெட்டவர்களானாலும் அவர்களை நிந்திக்கமாட்டார்கள். ஏனென்றால் கணவனே பெண்களுக்குப் பிரத்தியக்ஷ தெய்வம். நீ இதையறியாமல் பிள்ளையைப்பிரிந்து அதிக துக்கப்பட்டுக்கொண்டிருக்கும் என்னை இன்னும் அதிக துக்கப்படும்படி செய்கிறாய். என்னை வருத்தாதே. உன்னை

அஞ்சலிபந்தம் செய்கிறேன்" என்று சொன்னார். அப்பொழுது தான் செய்த தவறை உணர்ந்து கோசலைத் தன் கணவரை நமஸ்கரித்து, "நாதா தயைசெய்து நான் செய்த பிழையைப் பொறுக்கவேண்டும். அதிக துக்கத்தால் அறிவிழந்து உம்மைப் புண்படுத்தி விட்டேன். தாங்கள் என்னைப் பிரார்த்திக்கக் கூடாது. தாங்கள் எனக்குக் கிருபை செய்தால்தான் எனக்குப் பர்த்தாவின் லோகம் கிடைக்குமாதலால் அருள்கூர்ந்து எனக்குக் கிருபை புரியவேண்டும்" என்று வேண்ட, மன்னரும் அவளை மன்னித்து, "அடி பெண்ணே! நம்மிருவருக்கும் கலியாணமாவதற்கு முன், நான் காட்டிற்கு வேட்டையாடச் சென்றபோது, அறியாமையால் சப்தவேதி என்ற பாணத்தை விட்டு ஒரு மனிதனைக் கொன்ற பாவத்தை இப்பொழுது அனுபவிக்கிறேன்: அதாவது நான் யுவராஜனாயிருந்தபோது ரதத்தில் ஏறிக்கொண்டு வில்லுடன் சரயூ நதிக்கரையில் வேட்டையாடச் சென்றேன். வேட்டையாடிக்கொண்டிருக்கும்போது அஸ்தமனமாகிவிட்டபடியால் இரவு காலத்தில் அந்நதிக் கரையில் தங்கிச் செல்லலாமென்றும், இரவில் அந்நதியில் ஜலம் குடிக்கவரும் மிருகங்களைக் கொல்லலாமென்றும் எண்ணி அங்கு தங்கினேன். அந்த இரவில் அந்த நதியில் யானை ஜலம் குடிப்பதுபோன்றதொரு சப்தம் கேட்க, அது யானையென்றெண்ணிக் கையிலிருந்த சப்தவேதி என்றபாணத்தை விட்டேன். அந்த பாணம் அப்பொழுது நதியில் ஜலம் எடுத்துக்கொண்டிருந்த ஒரு ரிஷிகுமாரன் மார்பில் பாய்ந்தது. அவன் கதறிக்கொண்டு கீழே விழுந்த சப்தம்கேட்டு, நான் அவ்விடத்தை யடைந்து, "நான் அயோத்தியைப் பரிபாலிக்கும் அரசன். என் பெயர் தசரதன். நீர் குடத்தில் ஜலம் முகக்கும்போது உண்டான சப்தம் யானை ஜலம் குடிக்கும்போது உண்டாகும் சப்தம்போலிருந்ததால், யானை என்று எண்ணி உம்மை பாணத்தால் அடித்துவிட்டேன். அறியாமல் செய்த பிழையை மன்னிக்கவேண்டும்" என்று மிகுந்த துக்கத்துடன் கேட்டுக்கொண்டேன். அவன், 'நீர் அறியாமல் என்னைக் கொன்றதாலும், நான் வைசியனுக்கு சூத்திரஸ்திரீயிடம் பிறந்தவனாதலாலும் உமக்கு பிரம்மஹத்தி தோஷமில்லை. நீர் இதோ செல்லுகிற ஒற்றையடிப் பாதைவழியாய்ச் சென்றால், என் மாதாபிதாக்களைக் காண்பீர். அவர்கள் வயோதிகர்கள். அவர்களுக்குக் கண் தெரியாது. அவர்களுக்கு இந்தத் தீர்த்தத்தைக் கொடுத்து என் கதியையும் தெரிவியுங்கள். நீர் இவ்விஷயத்தைச் சொல்லாமல் போய்விட்டால் அவர்கள்

உம்மை வமிசத்துடன் சபித்துவிடுவார்கள். ஆதலால் நடந்ததை அவசியம் சொல்லவேண்டும்' என்று சொல்லி இறந்தான். உடனே நான் அவன் சொன்னபடியே அந்தத் தீர்த்தத்தை எடுத்துக்கொண்டு அவன் காட்டிய பாதை வழியாய்ச் சென்று அவன் பெற்றோரைக் கண்டேன். கண் தெரியாத அவர்கள் என் காலடி சத்தத்தைக் கேட்டு, 'அப்பா, குழந்தாய் இரவு காலத்தில் நதியில் நீந்தலாமா? தவறி ஆற்றில் முழுகிவிட்டால் எங்கள் கதியென்னவாகும்? நீ வருவதற்கு இவ்வளவு நேரம் ஏன்? உன்னை ஆலிங்கனம் செய்துகொள்ள ஆசைப்படுகிறோம், வா, அப்பா!' என்று ஆவலோடு சொல்ல, நான் மிகவும் வருத்தத்துடன் அவர்களை நமஸ்கரித்து, 'ஐயா, பெரியோர்களே, நான் அயோத்தியை ஆளும் அரசன். காட்டில் வேட்டையாடிக்கொண்டிருந்தபோது அஸ்தமித்துவிட்டபடியால் நதிக்கரையில் தங்கியிருந்தேன். அச்சமயம் உங்களுடைய பிள்ளை குடத்தில் ஜலம் எடுக்கும்போது, அச்சப்தம் யானை ஜலம் குடிப்பதுபோல் இருந்தபடியால் யானையென்றெண்ணி பாணத்தால் அடித்து அவனைக் கொன்றுவிட்டேன். நான் அறியாமற்செய்த பிழையைப் பொறுத்து, என்னை மன்னிக்கவேண்டும்' என்று சொன்னேன். அதைக் கேட்டு அவர்கள் மிகுந்த துக்கத்தை யடைந்து, 'ஏ, ராஜனே, எந்தவிடத்தில் எங்கள் பிள்ளை இறந்து கிடக்கிறானோ அந்த இடத்திற்கு எங்களைக் கூட்டிக்கொண்டுபோய் அவனைக் காட்டும்' என்று கதற, நான் அவர்களுக்குப் பலவிதமாய் ஆறுதல்சொல்லி, அவர்களைக் காப்பதாய்ச் சொல்லியும் அவர்கள் வருத்தத்துடன் அழுதுகொண்டே பிள்ளையிருக்கு மிடத்தில் தங்களைக் கொண்டு போய் விடும்படி சொல்ல, நானும் அப்படியே அவர்களைக் கூட்டிக்கொண்டுபோய் அந்தப் பிள்ளையின் பிரேத சரீரத்தை எடுத்து அவர்களிடம் கொடுத்தேன். அவர்கள் அதை எடுத்துவைத்துக் கொண்டு, 'அப்பா, குழந்தாய், நீ இனி அத்யயனம் செய்வதை நாங்கள் எப்பொழுது கேட்போம்? (இதன் விவரத்தை சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்) எப்பொழுது உன்னைக் காண்போம்?' எனப் பலவிதமாய்ப் புலம்பி, 'குழந்தாய்! சகரன், சிபி, ஜனமேஜயன், திலீபன், நகுஷன், துந்துமாரன் (இவர்கள் மகாபாரதத்தில் உள்ள ஜனமேஜயன், நகுஷன் அல்ல — இவர்கள் வேறு) முதலியவர்கள் எந்த லோகத்தை யடைந்தார்களோ, அந்த லோகத்தை அகாலத்தில் மரணமடைந்த நீ அடையலாம். கோதானம் செய்தவன், பூதானம் செய்தவன், அக்கினிஹோத்தரம்

செய்தவன், யுத்தத்தில் புறமுதுகு காட்டாதவன், யுத்தத்தில் எதிர்முகமாய் அடிபட்டவன் இவர்கள் எந்த லோகத்தை யடைவார்களோ அந்த லோகத்தை நீ அடையலாம்' என்று சொல்லி அவனுக்குச் செய்யவேண்டிய கர்மங்களைச் செய்தார்கள். அதற்குப் பிறகு என்னைப் பார்த்து, 'நாங்கள் அக்கினிப்பிரவேசம் செய்யப்போகிறோம். அக்கினி மூட்டவேண்டும்' என்றுசொல்ல நான் அவர்களை எவ்விதமாய்ச் சமாதானம் செய்தும், அவர்கள் கேளாமலிருந்ததால், அவர்கள் சொன்னபடியே நான் அக்னி மூட்ட, அவர்கள் என்னைப்பார்த்து, 'நாங்கள் எப்படி புத்திர சோகத்தால் பிராணனை விடுகிறோமோ அப்படியே நீயும் புத்திர சோகத்தால் இறக்கக்கடவாய்' என்று சபித்துவிட்டு, அக்கினிப் பிரவேசம் செய்து சுவர்க்கத்தை யடைந்தார்கள். (இவர்கள் என்ன ஜாதி? தசரதனைச் சபிக்க இவர்களுக்குச் சக்தி உண்டா? என்ற விஷயத்தைச் சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்). ஏ, கோசலே! நான் இப்பொழுது அப்பெரியோர்களின் சாபத்தால் பீடிக்கப்பட்டிருக்கிறேன். நான் யமதூதர்களைக் காண்கிறேன். அவர்கள் என்னை அவசரமாய் அழைக்கிறார்கள்" என்று இவ்விதம் தான் சாபமடைந்த விவரத்தைச்சொல்லி, ஆயாசத்தால் சற்று கண்களை மூட, கோசலை முதலியவர்களும் அதிக விசனத்தால் பிரக்ஞை யிழந்தார்கள். இப்படியிருக்க அர்த்தராத்திரி வேளையில், தசரதர் சாபத்தால் பீடிக்கப்பட்டு, "ஏ, ராமா" என்று கதறிக்கொண்டே பிராணனை விட்டு, உத்தம லோகத்தை யடைந்தார். இப்படி யிவர் புண்ணியலோகம் அடைந்தது யாருக்கும் தெரியாது. விடியற்காலத்தில் ஸ்துதிபாடகர்களும் கானம் செய்து சென்றார்கள். அதற்குப் பின் அவர் ஸ்நானம் செய்ய வாராததால், தாதிகள் அவர் சயன அறையை யடைந்து, அவரிருந்த நிலையைக்கண்டு சந்தேகித்து, கோசலை முதலியவர்கள் முகத்திலிருந்த விபரீதங்களைக் கண்டு துக்கித்தார்கள். கோசலை முதலியவர்களும் ராஜனைப் பார்த்து, அவரது விபரீத தோற்றத்தைக் கண்டு துக்கித்தார்கள். இவ்விஷயம் சீக்கிரத்தில் பட்டணத்தில் பரவ, பிரஜைகள் எல்லோரும் கவலையடைந்தார்கள். அப்பொழுது கைகேயி கோசலையின் அரண்மனைக்கு வந்து, அவளால் திரஸ்கரிக்கப்பட்டுத் திரும்பிச் சென்றாள். பிறகு வசிஷ்டர் அரண்மனைக்கு வருவதைக்கண்ட பிரஜைகள் அவரை வணங்கி, "குருவே, இப்பொழுது இந்த இராஜ்யத்தில் அரசனில்லை, அரசனில்லா நாட்டில் துன்பங்கள் உண்டாகுமாதலாலும், ராமன்

திரும்பிவர 14 வருஷங்கள் ஆகுமானபடியாலும், எந்த வேலையு மில்லாமல் தனது பாட்டனார் வீட்டில் இருந்துவரும் பரதனைச் சீக்கிரம் வரவழைத்து பிதுர்க் கருமங்களைச் செய்யச் சொல்லுங் கள். அதுவரையில் தாங்கள் இந்நாட்டைப் பரிபாலித்துவரக் கோருகிறோம்'' என்று வேண்டிக்கொள்ள, அவரும் உடனே அதிவேகமாய்ச் செல்லக்கூடிய தூதர்களை யழைத்து, "நீங்கள் சீக்கிரம் புறப்பட்டு அதிவேகமாய்ச் சென்று கிரிவிரஜம் என்ற பெயரையுடைய கேகயபட்டணத்தை யடைந்து, அங்கிருக்கும் நமது ராஜகுமாரனை பரதனைக் கண்டு, 'ஆச்சாரியர் உம்மை க்ஷேமம் விசாரித்தார். உம்மை உடனே அழைத்துவரச் சொன் னார்' என்று தெரிவித்து, நாம் கொடுக்கும் வஸ்துக்களை அவ னிடம் கொடுத்து அவனது பாட்டனாருக்கும், மாமாவுக்கும் கொடுக்கச் சொல்லுங்கள். 'ஊரில் எல்லோரும் க்ஷேமம்' என்று மொத்தத்தில் சொல்லுங்கள். அவன் சிறுபிள்ளை யாதலால் 'அம்மா க்ஷேமமா? அப்பா க்ஷேமமா?' என்று பலதடவை திருப் பித் திருப்பிக் கேட்டாலும், நீங்கள் ஏமாந்துபோகாமல், 'நீங்கள் எவரெவர்களின் க்ஷேமத்தை விரும்புகிறீர்களோ அவர்கள் யாவரும் க்ஷேமம்' என்று சொல்லிவிட்டுச் சபையைவிட்டு விலகி விடுங்கள். 'சபையிலிருந்து நீங்கின தூதரை மறுபடி கூப்பிட் டுப் பேசக்கூடாது' என்று ராஜதர்மமாதலால் அவன் உங்களைக் கூப்பிடாமல் சீக்கிரத்தில் புறப்பட்டுவிடுவான்'' என்று சொல்ல, அவர்களும் மிக வேகமாய் ஓடக்கூடிய குதிரைகளின்மேல் ஏறிக் கொண்டு விரைவில் கேகயநாட்டை யடைந்தார்கள்,

இது இப்படியிருக்க, பரதன் இரவில் கெட்ட கனவு ஒன்று கண்டு மிகுந்த கவலையுடன் இரவைப்போக்கி, விடிந்ததும் ஸ்நா னம்செய்து தம்பி சத்ருக்னனுடன் சபையிலிருக்கையில் அவனது சிநேகிதர்கள் இவன் முகம் மாறுபட்டிருப்பதைக் கண்டு ஹாஸ் யம், கானம், நாட்டியம் முதலியவைகளால் துக்கத்தைப் போக்க முயற்சித்தும் பயனில்லாமல் போக, அவனது பிராண சிநேகிதன் ஒருவன் அவனைக் கட்டியணைத்துக்கொண்டு, "அப்பா, மித்திரா, உன் துக்கத்திற்குக் காரணம் யாதுசொல். துக்கத்தை சிநேகித ரிடம் வாய்விட்டுச் சொன்னால், துக்கம் குறையும். ஏதாவது விசேஷம் உண்டானால் சொல்'' என்று கேட்டான். அதுகேட்ட பரதன், "அன்பனே, நான் என்ன சொல்லுவேன். வயோதிக ரான என் பிதா எண்ணெய்க் கொப்பரையில் மிதந்துகொண்டு

எண்ணெயைப் பானம் செய்வதாயும், என்னைப் பார்த்து அடிக்கடி சிரிப்பதாயும், இரும்புமயமான பீடத்திலிருந்துகொண்டு எள்ளன்னம் சாப்பிடுவதாயும் கனவில் கண்டேன். மேலும் சமுத்திரம் வற்றிப்போனதையும், சந்திரன் திடீரென்று ஆகாயத்திலிருந்து பூமியில் விழுந்ததையும் கனவில் கண்ணாரக் கண்டேன். இவைகளைக் கவனித்தால் ஏதோ விபரீதம் நிகழுமென்று நிச்சயமாய்த் தெரிகிறது. ஆகையால்தான் நான் வருந்துகிறேன்'' என்று சொல்ல, அம்மித்திரன் அவனைத் தேற்றி, "அப்பா, நீ இதற்காக வருந்தாதே. சீக்கிரம் அயோத்திக்கு தூதரை யனுப்பி விசாரிப்போம்" என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது அயோத்தியிலிருந்து தூதர்கள் வந்திருப்பதாகத் தெரிந்து, 'உடனே அவர்களை வரச்சொல்லுங்கள்' என்று சொல்ல, காவலாளிகள் சென்று அவர்களை யழைத்துவந்தார்கள். அவர்கள் பரதனுக்கு ராஜமரியாதைகள் செய்து, "உம்மை ஆச்சாரியார் க்ஷேமம் விசாரித்தார்கள். உம்மை உடனே கூட்டிக்கொண்டு வரும்படி சொன்னார்கள். இதோ இருக்கும் வஸ்துக்களை தங்கள் மாமனுக்கும், பாட்டனுருக்கும் கொடுக்கச் சொன்னார்கள். 'ஊரில் எல்லோரும் க்ஷேமம்' என்றும் தெரிவிக்கச் சொன்னார்கள்'' என்று சொல்லி வசிஷ்டரால் அனுப்பப்பட்ட பொருள்களை அவனிடம் கொடுத்தார்கள். பரதன், "தூதர்களே, ஊரில் பிதா சௌக்கியமா? ராமன் சௌக்கியமா? லக்ஷ்மணன் க்ஷேமமாயிருக்கிருனா? கோசலை, சுமித்திரை, கைகேயி முதலிய மாதாக்கள் க்ஷேமமா?'' என்று கேட்க, தூதர்கள், "தாங்கள் யாராருடைய க்ஷேமத்தை விரும்புகிறீர்களோ அவர்கள் யாவரும் க்ஷேமம்'' என்று சொல்லி சபையிலிருந்து நீங்கிவிட்டார்கள். அவர்கள் அப்படி அங்கிருந்து சென்றுவிட்டதால், மறுபடியும் அவர்களைக் கூப்பிடுவது அதர்மம் என்று எண்ணி, பரதன் தன் பாட்டனுரிடம் சென்று தூதர்கள் வந்த விஷயத்தைத் தெரிவித்து அவரிடம் விடைபெற்றுக்கொண்டு அயோத்திக்குப் பிரயாணமானுன். மிக விரைவாக வழியைக் கடந்து அயோத்திக்குப் பக்கத்தில் வந்து க்ரோச தூரத்திலிருந்து அதைப் பார்த்தபொழுது அது சோபிக்காமலிருப்பது கண்டு மனக்கிலேச மடைந்து தன் தம்பியின் கரத்தைப் பிடித்துக்கொண்டு பிதாவின் அரண்மனையை யடைந்து பார்க்க, அங்கு பிதா காணப்படவில்லை. பிறகு தன் மாதாவான கைகேயின் அரண்மனைக்குச் செல்ல, அவள் அவனை அன்புடன் வரவேற்று, "அப்பா, பரதா! நீ ஊரை விட்டுப் புறப்பட்டு எத்தனை நாட்க

ளாயினை? ஊரில் மாதாபிதாக்கள் எல்லோரும் க்ஷேமமா? அவர்கள் என்ன சொன்னார்கள்?" என்று கேட்டாள். அப்பொழுது பரதன் 'இவள் பிடிவாதக்காரியாதலால், இவள் கேள்விகளுக்கு நாம் பதில் சொன்னாலொழிய இவள் நம் கேள்விக்குப் பதில் சொல்ல மாட்டாள்' என்று எண்ணி, "நான் ஊரைவிட்டுப் புறப்பட்டு ஏழுநாட்களாகின்றன. ஊரில் எல்லோரும் க்ஷேமம்தான். மாதா பிதாக்கள் உம்மை க்ஷேமம் விசாரித்தார்கள். அது இருக்கட்டும். தூதர்கள் என்னை அவசரமாய் அழைத்து வந்தார்களே! என்ன காரணம்? பிதா மறுபடியும் ஏதாவது அசுவமேதயாகம் செய்யப் போகிறாரா? அப்பாவைக் காணோமே! அவர் இங்கு வந்திருக் கிறாரா?" என்று பிரேமையோடு கேட்க, கைகேயி, 'பரதா, உன் பிதா போன இடத்தைச் சொல்கிறேன். கேள். பிரளய காலத் தில் சகல பூதங்களும் எந்த லோகத்தை யடையுமோ, யாக, தான திகளைச் செய்த பெரியோர் எந்த லோகத்தை யடைவார்களோ அந்த லோகத்தை யடைந்தார் உன் பிதா" என்று சொன்னாள். அதுகேட்டு மிகுந்த துக்கத்தை யடைந்த பரதன், "அப்பா எத னால் புண்ணியலோகம் அடைந்தார்? நான் பாபி — அதிர்ஷ்ட ஹீனன். அவர் இறக்கும் சமயத்தில் அவர் பக்கத்திலிருந்து செய்யவேண்டிய கருமங்களைச் செய்யக் கொடுத்துவைக்கவில்லை. ராம லக்ஷ்மணர்கள் அதிர்ஷ்டசாலிகள். பிதாவின் அந்தியகாலத் தில் அவர்கள் சமீபத்திலிருந்து கருமங்களைச் செய்தார்கள்," என்று சொல்லிப் பலவிதமாய் துக்கித்து "அம்மா, அப்பா இறக்கும்போது கடைசியில் என்ன சொன்னார்? அதையாவது சொல்லும்" என்று கேட்க, கைகேயி, "உன் பிதா பிராணனை விடும்போது 'ராமா, லக்ஷ்மணா, சீதே' என்று சொன்னார்" என்று தெரிவித்தாள். அதுகேட்டு பரதன், "அம்மா இதைக் கவனித் தால் அப்பா இறக்கும்போது இவர்கள் மூவரும் பக்கத்தில் இல் லையென்று தெரிகிறதே. ஏனம்மா, என்ன சங்கதி?" என்று ஆவலோடு கேட்டான். அப்பொழுது கைகேயி "அம்மூவரும் காட்டிற்குச் சென்றுவிட்டார்கள்" என்று தெரிவிக்க, பரதன், "பரதாரத்தை அபகரிப்பவனை நாட்டிலிருந்து காட்டிற்கு அனுப்ப வேண்டுமென்று சட்டம் இருக்கிறது. என் அண்ணா அப்படிச் செய்யப்பட்டவரல்லவே! ஏனம்மா பிதா அவரைக் காட்டிற்கனுப் பினார்? சொல்லும்" என்று ஆத்திரத்தோடு கேட்டான். கைகேயி, "அப்பா, அது ஒன்றும் காரணமல்ல. ராமனுக்குப் பட்டாபி ஷேகம் செய்ய வேண்டுமென்று உன் பிதா ஏற்பாடு செய்தார்.

அச்சமயத்தில் சம்பராசுர யுத்தத்தில் அவர் எனக்குக் கொடுத்திருந்த இரண்டு வரங்களை நான் பெற்று, முதல் வரத்தால் நீ இந்நாட்டை யாளவும், இரண்டாவது வரத்தால் ராமன் 14 வருஷங்கள் வனத்தில் வசிக்கவும் உத்தரவு செய்யவேண்டுமென்று கேட்டேன். உன் பிதாவும் வரங்களைக் கொடுத்தார். அதனால்தான் ராமன் காட்டை யடைந்தான். நீ பட்டாபிஷேகம் செய்து கொண்டு, ராஜ்ய பரிபாலனம் செய்து, இவ்விராஜ்யத்தை உனக்கு சம்பாதித்துக் கொடுத்த மாதாவான எனக்கு சந்தோஷத்தைக் கொடுத்துக்கொண்டிரு" என்று சொல்லக் கேட்ட பரதன் அவள் செய்த அதர்மத்திற்காக அவளைத் திரஸ்கரித்து, "நீ என்ன அநியாயம் செய்துவிட்டாய்! நீ அசுவபதி ராஜன் பெண்ணல்ல. 'எனக்கு ராஜ்யத்தை வாங்கிக்கொடு' என்றுநான் உன்னைக் கேட்டேனா? 'அப்பாவைக் கொன்று, அண்ணாவைக் காட்டிற்கனுப்பி பரதன் ராஜ்யத்தை யடைந்தான்' என்ற ஓர் அபவாதத்தை நீ எனக்கு உண்டாக்கிவிட்டாயே! மாதாவான கோசலை என்னைப் பற்றி என்ன எண்ணுவாள்! நான் என்னசெய்வேன்!" என்று புலம்பிச் சற்றுநேரம் கழித்து, "இந்த ராஜ்யத்தைப் பெற்றுக் கொள்ளும் அதர்மத்தை நான் செய்யமாட்டேன். எனக்கு என் அண்ணாவான ராமனே கதி. நான் அவரையே யடைந்து, அவரை இங்கு அழைத்து வருவேன்" என்று சொல்லி, அவ்விடத்தை விட்டுக் கோசலையின் அரண்மனையை யடைந்தான்.

இதற்குள் கோசலை சுமித்திரையுடன் பரதனைப் பார்ப்பதற்காகப் புறப்பட, அந்த சமயத்தில் பரதன் அங்குவந்து அவர்களை நமஸ்கரித்தான். அப்பொழுது கோசலை அவனைப் பார்த்து, பரதா, உன் தாயார் உன் பிதாவைப் புண்ணியலோகத்திற்கனுப்பி, உன் அண்ணாவைக் காட்டிற்கனுப்பி உனக்கு ராஜ்யத்தைச் சம்பாதித்து வைத்திருக்கிறாள். ஆதலால் நீ உன் இச்சை நிறைவேற்றப்பட்டவனாய் ராஜ்ய பரிபாலனம் செய்துகொண்டிரு. என் பிள்ளை ராமன் காட்டிலேயே இருக்கட்டும். நீ என்னை இராமன் இருக்குமிடத்தில் கொண்டுபோய் விட்டுவிடு" என்றுசொல்லி மறுபடியும் சற்று நேரத்திற்குப் பிறகு, "நீ என்னைக் காட்டிற்குக் கூட்டிக்கொண்டு போகவேண்டாம். நானே சுமித்திரையைத் துணையாகக் கூட்டிக்கொண்டு அக்கினிஹோத்திராக்கினியை முன்னிட்டுக்கொண்டு, ராஜசரீரத்தை எடுத்துக்கொண்டு ராமனிருப்பிடத்திற்குச் செல்கிறேன்" என்று சொன்னாள். ராமன் காடுசென்ற

விஷயமாய் ஏற்கனவே துக்கத்தையடைந்திருந்த பரதன் கோசலை சொன்னதைக் கேட்டு இன்னும் அதிக துக்கத்தை யடைந்து, "அம்மா, நடந்த விஷயம் எனக்கொன்றுமே தெரியாது. அண்ணாவைக் காட்டிற்குப் போகும்படி எந்தப் பாபி சொன்னானோ அவன் இரண்டு சந்தியா காலங்களில் தூங்கப்பட்டவனுக்கு எந்த நரகமோ, பசுமாட்டைக் காலால் மிதிக்கும் பாபிக்கு எந்தநரகமோ; யுத்தத்தில் புறமுதுகு காட்டி ஓடுகிறவனுக்கு எந்த நரகமோ, பாயசம், பக்ஷணம் முதலியவைகளைச் செய்து மற்றவர்களுக்குக் கொடுக்காமல் தான்மட்டும் சாப்பிடும் மகாபாபிக்கு எந்த நரகமோ; வாயில் ஜலத்தை ஊற்றிக்கொண்டு, பல் துலக்கும் காரணத்தால் ஆகாயத்தை நோக்கிக் குமிழிட்டு உமியும் பாபிக்கு எந்நரகமோ, ருதுஸ்நானம் செய்து கிரகத்தை யடைந்திருக்கும் தன் மனைவியை விட்டு பிறர் மனைவியை அடையும் மகாபாபிக்கு எந்த நரகமோ அந்த நரகத்தை அடையட்டும்" என்று இன்னும் பலவிதமாகச் சபதஞ்செய்தான். கோசலை அவனைத் தேற்றி, "உத்தமா, நான் உன்னை அறிவேன். அதிருக்கட்டும். இன்னும் உன் பிதாவுக்குச் செய்யவேண்டிய சாவுச் சடங்குகள் ஒன்றும் செய்யப்படவில்லை. வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்படவேண்டும்" என்று சொல்லி அவனைப் பிதாவின் சரீரம் இருந்த இடத்திற்கு அழைத்துப் போக, அவன் அதைக் கண்டு பலவிதமாய்ப் புலம்பி துக்கித்தான். அப்பொழுது பரதன் வரவையறிந்த வசிஷ்டர் அவ்விடம் வந்து அவனைத்தேற்றி, ஸ்நானம் செய்யச்சொல்லிப் பின் நடக்கவேண்டிய கருமங்களைச் செய்வித்து, அலங்கரிக்கப்பட்ட பல்லக்கில் ராஜாவின் பிரேதசரீரத்தை வைத்து பந்துக்களைக்கொண்டு அந்தப் பல்லக்கை உத்தம பூமிக்கு எடுத்துச்செல்லும்போது சகல பிரஜைகளும், அரசரது மனைவியரும், வசிஷ்டரும் கூடவர, பரதன் அக்கினிஹோத்திராக்கினியை எடுத்துக்கொண்டு முன்னால் செல்ல, இப்படி எல்லோரும் மயானத்தை யடைந்து பல்லக்கைக் கீழே இறக்கிவைத்தார்கள். அந்த இடத்தில் அகில், சந்தனம், தேவதாரு முதலிய கட்டைகளால் அடுக்கப்பட்ட சிதையில் ராஜசரீரத்தைவைக்க, பரதன் பலவிதமாய் துக்கித்தான். வசிஷ்டர் அவனைச் சமாதானம் செய்து, பிதிர்கர்மாவைச் செய்யச் சொல்ல, அவனும் தன் பிதாவுக்கு அக்கினிப்பிரதானமான கர்மாவைச் செய்து முடித்தான். பிறகு எல்லோரும் துக்கத்துடன் ஊரை யடைந்தனர். இவ்விதம் பரதன் பதினொரு நாட்களும் முறைப்படிச் செய்யவேண்டிய கர்மங்களைச் செய்து, பனிரெண்டாவது

நாள் சிரார்த்தத்தையும் செய்து, பதின்மூன்றுவது நாள் க்ஷத்திரிய தர்மப்படி அந்த இடத்தைச் சோதனை செய்யவேண்டும் என்ற முறைப்படி அதையும் செய்துமுடித்து ஊரையடைந்தான். மறுநாள் குருவான வசிஷ்டர் உத்தம தீர்த்தங்களைக் கொண்டுவரச் சொல்லி, பட்டணத்து ஜனங்களை வரவழைத்து, சகல பெரியோர்களும் இருக்கும்போது, பரதனைப் பார்த்து, "பரதா, உனது பிதா உனக்கு ராஜ்யத்தையும், ராமனுக்குக் காட்டையும் கொடுத்திருப்பதால், ராமன் காட்டை யடைந்துவிட்டார். பிதாவாலும், அண்ணுவாலும் கொடுக்கப்பட்ட இந்த ராஜ்யத்தை நீ பெற்றுக்கொள்" என்று சொல்லக்கேட்ட பரதன் மிகுந்த துக்கமடைந்து, அந்த துக்கத்தினுலும், அண்ணுவிட மிருந்த பிரியத்தினுலும், 'மூத்தவனிருக்க இளையவன் இராஜ்ய பரிபாலனம் செய்யக்கூடாது' என்ற எண்ணத்தாலும் தன் குலகுருவின் வார்த்தையைத் திரஸ்கரித்து, "நான் இந்த ராஜ்யத்திற்கு அருகனல்ல. இது ராமனுக்கே உரியது. நான் இப்பொழுதே ராமனிடம் சென்று அவரை அழைத்துக்கொண்டு வருவேன்" என்று சொல்லிப் புறப்பட்டான். பிரஜைகளும் பரதனது குணத்திற்காக அவனைப் புகழ்ந்து, தாங்களும்கூட வருவதாய்ச் சொல்லி வழியைச் செப்பனிட, எல்லோரும் புறப்பட்டார்கள். அப்பொழுது கூனியும் தன்னை அலங்காரம் செய்துகொண்டு புறப்பட்டாள். அதைக் கண்ட ஜனங்கள் கோபித்து, 'இவ்வளவு துன்பத்திற்கும் இவள் தானே காரணம். இவளுக்கு அலங்காரம் எதற்காக? இவளுக்குச் சரியான மரியாதை செய்யவேண்டும்" என்று எண்ணி, பரதன் படும் துக்கத்தால் மிகுந்த துக்கத்தை அடைந்திருந்த சத்ருக்னனிடம்சென்று, "சத்ருக்னு, ராமன் காட்டையடையவும், மகாராஜா புண்ணியலோகம் அடையவும், பரதன் துக்கப்படவும் இந்தக் கூனிதான் காரணம்" என்று சொன்னுர்கள், அதுகேட்டதும் சத்ருக்னன் அதிவேகமாய்க் கூனியிடம் சென்று அவளை யுதைக்க, அவள் பயந்து, கதறிக்கொண்டு கைகேயியிடம் சென்றுள். கைகேயி சத்ருக்னனைத் தடுக்க, அவன் கோபங்கொண்டு, "நீ அப்பாவைக் கொன்றவளல்லவா?" என்று அவளைத் திரஸ்கரித்துச் சொல்ல, அவளும் மிகவும் பயந்து பரதனைச் சரணமடைந்தாள். பரதன் தன் தம்பியைப் பார்த்து, "அப்பா சத்ருக்னு. இவளை விட்டுவிடு. இவளைக் கொன்றுவிட்டு ராமனையடைந்தால், 'மாதாவைக் கொன்றவனே, இங்கு வராதே' என்று அண்ணு நம்மைத் தள்ளிவிடுவார். ஆகையால் இவளை விட்டுவிடு. இந்தக்கூனியை

அடித்ததை ராமன் கேட்டாலும் மிகவும் கோபிப்பார். நம்மிடம் பேசுவாரோமாட்டாரே. ஆகையால் கோபத்தை அடக்கிக்கொள்." என்றுசொல்லி சமாதானம் செய்தான். பிறகு எல்லோரும் பல இடங்களைக் கடந்து கங்கைக்கரையை யடைந்தனர். ஐந்து யோசனை தூரம் நிற்கும் சேனையைக் கண்ட குகன், "ஒருசமயம் இந்த பரதன் ராமனைக் கொல்ல வந்திருப்பானோ?" என்று சந்தேகித்து, தன் சகாக்களான ஐநூறு வீரர்களை யழைத்து, "படகுகளைத் தயார்செய்துகொண்டு யுத்தத்திற்குச் சித்தமாயிருங்கள். இவர்கள் கங்கையில் இறங்கினால், ஜலத்தில் அமிழ்த்திவிடுங்கள்" என்று சொல்லி, பின்னும் சற்றுயோசித்து, 'என்னவானாலும், எதிரான் விஷயத்தை யறியாமல் நாமொன்றும் செய்யக்கூடாது. ஆகையால் நேரில் சென்று விஷயத்தைத் தெரிந்துகொள்ளலாம்' என்று தீர்மானித்து, பரதனை அரசனென்று எண்ணி, சகல ராஜ மரியாதைகளுடன் அவனிடம் சென்றான். குகன் வரவைக்கண்ட சுமந்திரன் பரதனைப் பார்த்து, "ஏ, உத்தம இதோவருகிறவன் ராமனுக்கு மித்திரன். இவனைக் கேட்டால் அவரிருப்பிடம் தெரியும்" என்று சொல்ல, பரதன், "அண்ணாவுக்கு மித்திரனானால், இவன் நமக்கும் மித்திரனே. அவனை அழைத்துக்கொண்டு வாரும்" என்று சொன்னான். சுமந்திரன் சென்று குகனை அழைத்துவர, பரதன் அவனை வரவேற்றுத் தன் கைகளால் அவனைக் கட்டிக்கொண்டான். அப்பொழுது குகன் பரதனைப்பார்த்து "நீர் நல்ல எண்ணத்துடன் வந்திருக்கிறீரா?" என்று கேட்க, பரதன், "நான் ராமனிடம் நல்ல எண்ணத்துடன் தான் வந்திருக்கிறேன். நான் அவரை அழைத்துப்போக வந்திருக்கிறேன். நீ சந்தேகங்கொள்ள வேண்டாம். என் அண்ணா இங்கிருந்தபோது எங்கு இருந்தார்? எங்கே படுத்தார்? எனக்குச் சொல்லவேண்டுகிறேன்" என்று கேட்டான். பரதன் குணத்தைக்கண்டு சந்தோஷித்த குகன், ராமன் படுத்திருந்த மணிபுங்கமரத்தடியைக்காட்ட, பரதன், "என்னால் அல்லவோ ராமன் துக்கத்தை அனுபவித்தார். நான் மூத்தவனை அனுசரித்து, அவர் இருந்ததுபோலவே இருப்பேன்" என்று சொல்லி, அவர் படுத்திருந்த தர்ப்பப் படுக்கையில் தானும் படுத்து இரவுப்பொழுதைப் போக்கி, மறுநாள் குகனிடம் படகு கொண்டுவரச் சொன்னான். உடனே ஐநூறு படகுகள்வர, எல்லோரும் அக்கரைக்குப் போய்ச்சேர்ந்தார்கள். பிறகு அங்கிருந்து எல்லோரும் பரத்துவாஜர் ஆசிரமத்தை யடைந்தனர். பரதன் தன்னுடன் வந்த சேனைகளை வெளியில் நிறுத்தித் தான்

மட்டும் ஆசிரமத்தில் நுழைந்து, முனிவரை நமஸ்கரித்தான். அவர் பரதனைப் பார்த்து, "பரதா, நீ ராமனிடத்தில் நல்லெண்ணத்துடன் வந்திருக்கிறாயா?" என்று கேட்க, பரதன் மிகுந்த துக்கமடைந்து, "மகாரிஷியே, தங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. நான் அண்ணாவை அழைத்துப் போகவே சகலருடன் வந்திருக்கிறேனே தவிற வேறு எண்ணத்துடன் வரவில்லை. ஆதலால் தாங்கள் தயைசெய்து நாங்கள் அண்ணா இருப்பிடத்தையடையச்செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்தான். உடனே ரிஷியும், "உன் அண்ணா இருப்பிடத்தைத் தெரிவிக்கிறேன். நீ இன்று இங்கு தங்கி நாளை போகலாம்" என்று சொல்லி அவனுக்கும் அவனுடன் வந்த சகலருக்கும் வேண்டிய சகல வசதிகளைச் செய்து நல்ல உணவை யளித்தார். பரதன் காய் கிழங்குகளை மட்டும் உட்கொண்டு இரவுகாலத்தைப் போக்கி, காலையில் எழுந்து அண்ணாவின் இருப்பிடத்தைத் தெரிவிக்கும்படி வேண்ட, பரத்வாஜரும், "இதோ தெரிகிற சித்திரகூடத்தில் தான் உன் அண்ணா இருக்கிறார். இந்த வழியாய்ச் செல்லுங்கள்" என்று சொன்னார். எல்லோரும் அவ்வழியே சென்று சில வீரர்களால் சித்திரகூடம் இருக்குமிடத்தை யறிந்து, வழி நடந்தார்கள். சித்திரகூடத்திற்குச் சமீபமாய் வந்ததும், பரதன் யாவரையும் பின்னால் வரச் சொல்லித் தான்மட்டும் முன்னால் சென்றான்.

இது இப்படியிருக்க, ஏராளமான சேனைகள் ஆரணியத்தில் வருவதைக்கண்ட மிருகங்களும், பக்ஷிகளும் பயந்து, பலவிதமாய்ச் சப்தம் செய்துகொண்டு ஓட, அச்சப்தத்தைக் கேட்ட ராகவன் லக்ஷ்மணனைப் பார்த்து, "லக்ஷ்மணா இதென்ன சப்தம் பார்த்துவா. ஒருக்கால் அரசர் யாராவது வேட்டையாட வந்திருப்பாரோ?" என்று சொன்னார். லக்ஷ்மணன் வெளியேவந்துபார்த்து, பரதசேனையைக் கண்டு கோபித்து, ராமனிடம் வந்து "அண்ணா பரதன் நம்மைக் கொல்லச் சேனையுடன் வந்திருக்கிறான், எனக்கு உத்திரவு கொடுங்கள். நான் உடனே சென்று எல்லோரையும் கொன்று வருகிறேன்" என்று சொன்னான். அதுகேட்ட ராமன், "அப்பா, அவசரப்படாதே. ரதத்தில் துவஜம் இருக்கிறதா? குடை பிடிக்கப்படுகிறதா? சாமரம் போடப்படுகிறதா? இவைகளைக் கவனித்துப்பார்" என்று சொல்ல, லக்ஷ்மணனும் பார்த்து, "ரதத்தில் குடையில்லை. சாமரமுமில்லை. ஆனால் கோவிதார துவஜம் மட்டும் இருக்கிறது" என்று சொன்னான். அது கேட்டு

ராகவன் சற்று யோசித்து, "லக்ஷ்மணா, பரதன் இப்பொழுது இங்கு வருவதைக் கவனித்தால் அவன் கிரிவிரஜத்திலிருந்து அயோத்திக்கு வந்ததும், நடந்த விஷயங்களை யறிந்து 'எனக்கு ராமனே கதி' என்று எண்ணி, எனக்கு ராஜ்யத்தைக் கொடுப்பதற்காகவே வருகிறதாகத் தெரிகிறது. லக்ஷ்மணா உனக்கு ஏன் பரதனிடம் அவ்வளவு கோபம்? அவனுக்கு நீ முன்னமேயே ஏதாவது அபராதம் செய்திருக்கிறாயா? அல்லது உனக்கு இராஜ்யம் வேண்டுமென்ற ஆசையிருந்தாலும் சொல். பரதன் வந்தவுடன் உனக்கு ராஜ்யத்தைக் கொடுக்கச் சொல்லுகிறேன்" என்று சொல்லி, அப்பொழுதே பரதனைப் பார்க்க விரும்பி தர்ப்பாசனத்தைப் போடச்சொன்னார். லக்ஷ்மணன் உடனே தர்ப்பாசனத்தைப் போட, ராகவன் சீதையுடன் அதில் உட்கார்ந்திருந்தார். அப்பொழுது, ராமனிடத்திலிருந்த பக்தியாலும், அன்பாலும், அவரை உடனே பார்க்கவேண்டுமென்று ஆவலுடன் ஆசிரமத்தை நாடிவந்த பரதன் தன்னுடன் வந்த சத்ருக்னனைப் பார்த்து, "சத்ருக்னா பூர்ணிமா சந்திரமண்டலம் போன்ற முகத்தையுடையவனும் தனது இடது பக்கத்தில் சீதையை யுடையவனுயுமுள்ள ராமனை எதுபரியந்தம் நான் தரிசிக்கவில்லையோ, அவரது பாதங்களில் உள்ள பாதுகைகளை எதுபரியந்தம் என் சிரத்தில் நான் தாங்கவில்லையோ, அவரை நான் எதுபரியந்தம் பட்டாபி ராமனைப் பார்க்கவில்லையோ, அதுபரியந்தம் என்மனது சாந்தியடையாது" என்று சொல்லிக்கொண்டே ஆசிரமத்தை யடைந்து, அங்கு, தனக்குப்பிதாவாகவும், குருவாகவும் விளங்கும் ராமன் தன் பொருட்டு ராஜ்யத்தையும் சகல வைபவங்களையும் இழந்து, தர்ப்பாசனத்தில் சீதையுடன் வீற்றிருப்பதைக் கண்டு, அவரை நமஸ்கரித்தான். ராமன் அவனை அன்போடு வரவேற்று ஆலிங்கனம் செய்துகொண்டு, "பரதா, அப்பா கொடுத்த ராஜ்யத்தை நீதி நெறி தவராமல் பரிபாலிக்கிறாயா? அப்பா சௌக்கியமாயிருக்கிறாரா?" என்று கேட்க, பரதன், "அண்ணா, உம்மைப் பிரிந்த ஆருவதுநாள் அப்பா உயிர்துறந்தார்" என்று சொன்னான். அதைக்கேட்ட ராமன் லக்ஷ்மணனோடும், சீதையோடும் மந்தாகினி நதியை யடைந்து ஸ்நானம்செய்து 'புத்திரன் சாப்பிடுவதையே பிதுர் தேவதைகளுக்குக் கொடுக்கவேண்டு' மென்ற விதிப்படி லக்ஷ்மணனால் கொண்டுவரப்பட்ட மணிபுங்கம்பழம், இலந்தைப்பழம், இவைகளைக் கலந்து செய்யப்பட்ட பிண்டத்தைப் பிதுர்தேவதைகளுக்குக் கொடுத்து ஸ்நானத்தை முடித்

துக்கொண்டு ஆசிரமத்திற்குத் திரும்பிவந்தார். அப்பொழுது வசிஷ்டருடன் கோசலைமுதலானவர்களும், மற்றவர்களும் வரவே, ராமன் அவர்களையெல்லாம் தக்கபடி மரியாதையுடன் வரவேற்றுப் பெரியோர்களை நமஸ்கரித்து வணங்கினார். பிறகு பரதன் ராமனை வணங்கி, "அண்ணா, ஊருக்கு வரவேண்டும்" என்று வேண்டிக் கொள்ள, ராமன் அவனைப் பார்த்து, "பரதா, பிறப்புக்கு மூலகாரணமான பிதாவைச் சத்தியசந்தனாகச் செய்யவேண்டியது பிள்ளையின் கடமை. நமது பிதா மாதா கைகேயிடம் சத்தியத்தில் கட்டுப்பட்டு அவருக்கு வரத்தை யளித்திருப்பதால், நான் அவர் வரத்தின்படி பதினான்கு வருஷங்கள் வனத்தில் வசிப்பதாய் மாதாவின் முன்னிலையில் பிரதிக்ஞை செய்துவிட்டேன். அந்தப் பிரதிக்ஞையை மீறமுடியாது. ஆதலால் நீ ஊருக்குப் போய் ராஜ்யபரிபாலனம் செய்து வா" என்று சொல்லி, மேலும் பரதனை ஊருக்கு அனுப்பும் வியாஜமாய் "பரதா, நமது பிதா உனது மாதாவான கைகேயியைக் கலியாணம் செய்துகொண்ட காலத்தில் உன் பாட்டனாரிடம் 'இந்த ராஜ்யம் கைகேயிக்கு சுல்கம்' என்று சொன்னதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். கைகேயியின் பிள்ளையான உனக்குத்தான் இது பாத்தியம். ஆகலால் நீ ஊருக்குச் சென்று ராஜ்யபரிபாலனம் செய்யலாம்" என்றும் சொன்னார் (இந்த சுல்க விருத்தாந்தத்தை சித்தாந்த புத்தகத்தில் பார்க்க). பரதன் சுல்க விஷயத்தைப் புறக்கணித்துவிட்டு, "அண்ணா 'மூத்தவன்தான் ராஜ்யபரிபாலனம் செய்ய வேண்டும்' என்று குலதர்மம் இருப்பதால், தாங்கள் அதை விடக்கூடாது. தவிரவும் கைகேயி பிதாவை ஏமாற்றி, நியாயத்திற்கு விரோதமாய் காரியத்தைச் சாதித்துக்கொண்டதால், அது எவ்விதத்திலும் அங்கீகரிக்கத் தகுந்ததல்ல" என்று சொல்ல, இருவரும் தர்மவிஷயத்தில் சம்வாதம் செய்துகொண்டிருந்தார்கள். அப்பொழுது ஜாபாலி என்பவர், "ராமா, மாதா பிதாக்களின் சொற்படி நடக்க வேண்டும் என்பது என்ன விதி? மேலும் உன் பிதாவோ இறந்து விட்டார். இறந்தவருக்கு சிரார்த்தம் செய்வதாவது, அதனால் பிதுர்தேவதை திருப்தி யடைவதாவது, இதெல்லாம் என்ன முறை? உன் சகோதரனும் உன்னை ஊருக்கு வரும்படி வருந்தி யழைக்கிறான். ஆதலால் வா, ஊருக்குப் போவோம்" என்று சொன்னார். அதுகேட்ட ராமன், "மகாரிஷியே, பிறப்புக்கு மூலகாரணமான வஸ்து பிதாவாதலாலும், குழந்தை பிறந்தது முதல் அதைக்காப்பாற்றுவதில் அவர் அதிக ஜாக்கிரதையாயிருந்து

தக்க காலத்தில் அவரே குருவாயிருந்து மந்திரோபதேசம் செய்து, சகல வித்தைகளையும் கற்றுக்கொடுத்து, அக்குழந்தை விரும்பும் சகல பொருள்களையும் கொடுத்து, நேரில் பேசிக்கொண்டிருந்து, சரியான பருவத்தில் நல்ல குலத்தில் பிறந்த ஒரு கன்னிகையை விவாகம் செய்வித்து குழந்தைக்கு வேண்டிய சந்தோஷங்களை அளித்துவரும் பிதாவைக்காட்டிலும் சிறந்த தெய்வம் இல்லை. அவரே பிரத்தியக்ஷ தெய்வம். ஒருவன் தன் பிதாவை 'புத்' என்னும் நரகத்திலிருந்து காப்பாற்றுவதால்தான் புத்திரன் எனப்படுகிறான். அப்படியிருக்க, இதுகால பரியந்தம் என்னை வளர்த்த பிதா ஒரு வார்த்தை சொல்ல, நான் அதைக் கேளாவிட்டால், நானும் ஒரு பிள்ளையா? என் பிதா கைகேயியிடம் கட்டுப்பட்டதால், அவரை அந்த கடனிலிருந்து நீக்கி, அவரைச் சத்திய சந்தராய்ச் செய்வது என்கடமை யாதலால், அவர் வார்த்தையைத் தள்ள சக்தியில்லை. மகரிஷியே, சிரார்த்த தினத்தில் ஒருவரைப் பிதுர்தேவதையாய் வரித்து சிரார்த்தம் செய்வதால் அந்த மந்திர அதிஷ்டான தேவதை அந்த சிரார்த்த தினத்தில் சிரார்த்தத்தைச் செய்யும் கர்த்தாவால் கொடுக்கப்பட்ட ஆகாரத்தை வாங்கிக் கொண்டு, அவருடைய பிதுர்தேவதை எந்த இடத்தில் எந்த ஜன்மாவை எடுத்திருந்தாலும் அந்த பிதுர்தேவதையிடம் அந்த ஆகாரத்தைக் கொடுத்துத் திருப்தி செய்விப்பதால், அந்தப்பிதுர் தேவதையின் ஆசிர்வாதத்தால் வம்சவிருத்தி யடைந்து லோகம் க்ஷேமத்தை யடைவதால், சிரார்த்தம் அவசியம் செய்யத்தகுந்தது. சத்தியத்தில் சிறந்த பதவியில்லை. ஆதலால் நான் சத்தியத்தை மீறமாட்டேன். இப்படி தர்மத்திற்கு விரோதமாகப் பேசும் உங்களை என்பிதா எப்படி குருவாக வைத்துக்கொண்டிருந்தாரோ!" என்று சொன்னார். அப்பொழுது வசிஷ்டர், "அப்பா, ராமா, அவர் நாஸ்திகரல்ல, ஆஸ்திகர்தான். உன்னை ஊருக்கு அழைத்துப் போவதற்காகவே அப்படிச் சொன்னாரே தவிற வேறல்ல. அது இருக்கட்டும். நான் உனக்கு ஞானத்தைக் கொடுத்த குருவாதலால் நான் சொல்வதைக் கேள். இதுவரையில் சூரியவம்சத்தில் மூத்தபிள்ளையே ராஜ்யபரிபாலனம் செய்து இருப்பதால், நீ ஊருக்குவந்து ராஜ்யபரிபாலனம் செய்யவேண்டும்" என்றுசொல்ல ராமன், "குருசிரேஷ்டரே, பிதா, மாதா, குரு, தெய்வம் என்று சொல்லப்பட்ட தெய்வங்களில் நீங்கள் மூன்றாவதாக இருப்பதால் உங்கள் வார்த்தையை நான் கட்டாயம் மூன்றாவதாகக் கேட்கிறேன். பிதாவாக்கியமும் மாதா வாக்கியமு

மான பதினன்கு வருஷ வனவாசத்தை முடித்து, அவர்கள் சொல்லைப் பரிபாலனம் செய்து, அதற்குப் பிறகு குருவான தங்கள் வாக்கியப்படி கட்டாயம் ஊருக்கு வந்து ராஜ்யபரிபாலனம் செய்து குருவாக்கிய பரிபாலனம் செய்வேன்" என்று சொன்னர். இதைக் கேட்ட பரதன், 'நமது சார்பாகப் பேசின ஜாபாலி வாக்கியம் கண்டிக்கப்பட்டது. குருவாக்கியம் சமாதானம் செய்யப்பட்டது. நமது வாக்கியமும் அப்படியே போய்விடக்கூடாது' என்று எண்ணி, சுமந்திரனைக்கொண்டு அங்கு தர்ப்பங்களைப் பரப்பச் சொல்லி, "எதுபரியந்தம் அண்ணு ஊருக்குப் புறப்படவில்லையோ அதுபரியந்தம் நானும் இங்கிருந்து எழுந்திருக்க மாட்டேன்" என்றுசொல்லி அதன்மேல் படுக்க ஆரம்பித்தான். அதுகண்டு ராகவன் பரதனைப் பார்த்து, "பரதா, நீ செய்வது பாபமான காரியம். இந்தப்பாபம் பரிஹாரம் ஆவதற்காக தர்மத்தை அனுஷ்டிக்கிற என்னை நீ தொடு" என்றுசொல்ல, அவனும் உடனே எழுந்து ராமனைத்தொட்டு நமஸ்கரித்து பரிசுத்தனுனன். அப்பொழுது தேவதைகள் 'ராவணன் முதலியவர்களை யழிப்பதற்காக ராமனைக் காட்டிற்குக் கொண்டுவருவதற்கு நாம் எவ்வளவு பாடுபட்டோம்! இப்பொழுது இருக்கும் நிலைமையைப் பார்த்தால் பரதன் ராமனைக் காட்டிலிருந்து அழைத்துக் கொண்டுபோய் விடுவான் போலிருக்கிறதே' என்று கவலைப்பட்டு, ஆகாயத்தில் தோன்றி, "பரதா, அப்பா சொல்படி நீ நாட்டை யாளவேண்டும், ராமன் காட்டில்தானிருக்கவேண்டும்" என்றுசொல்லி மறைந்தன. ராமன் இவ்வாக்கியத்தை ஏற்றுக்கொண்டு ஊருக்குப் போகும்படி பரதனிடம் சொல்ல, அவன், "தாங்கள் வானப்பிரஸ்த ஆசிரம தர்மப்படி காட்டிற்கு வந்ததால், தாங்கள் வரும்போது தரித்துக் கொண்டுவந்த பாதுகைகளை எனக்கு அனுக்கிரகம் செய்யவேண்டும். அவைகள் நாட்டையாளட்டும். அவைகளை நான் என் சிரத்தில் தரிக்கிறேன்" என்று வேண்டினன். ராமனும் அவன் விரும்பியவண்ணமே தான் அணிந்துகொண்டுவந்த சுவர்ணமயமான பாதுகைகளை அவன் எதிரில் தரித்துக்கொண்டு, அவனிடம் கொடுத்தார். அவன் அவைகளை மிகுந்த சந்தோஷத்துடன் பெற்றுக்கொண்டு, "அண்ணு, நான் 14 வருஷமும் தலையில் ஜடையும் இடுப்பில் மரவுரியும் தரித்திருப்பேன். 14 வருஷம் முடிந்த மறுதினம் தாங்கள் திரும்பிவந்து எனக்குத் தரிசனம் கொடுக்காவிட்டால், நான் அக்கினிப்பிரவேசம் செய்வேன்" என்று சொல்ல, ராமன் "அப்படி ஆகட்டும். நான் 14 வருஷம் முடிந்தவுடன்

திரும்பி வருகிறேன். ஆனால் நீ உன் மாதாவான கைகேயியை தூஷிக்காமல், என்பேரிலும் சீதைபேரிலும் பிரமாணமாய் அவளை அன்போடு போற்றவேண்டும்'' என்று சொல்லியனுப்ப, அவனும் பாதுகைகளைத் தன் தலையில் வைத்துக்கொண்டு, சகலருடன் புறப்பட்டு அயோத்தியடைந்தான்.

ஆனால் பரதன் அயோத்தியிலிருக்க விரும்பாமல் சிம்மாசனத்தை நந்திக்கிராமத்தில் வைத்து, அதில் பாதுகைகளைப் பிரதிஷ்டைசெய்து, உத்தம தீர்த்தங்களால் அவைகளுக்கு அபிஷேகம் செய்து, அவைகளிடம் சகலத்தையும் ஒப்புவித்து, ராமபக்தியுடன் விளங்கிவந்தான். இது நிற்க, இராமன் தனது இருப்பிடம் ஜனங்களுக்குத் தெரிந்துவிட்டதால் அவர்கள் இனி அடிக்கடி வருவார்கள். அவர்கள் அப்படி வந்துகொண்டேஇருந்தால், காடு நாடாகிவிடும். அப்பொழுது காட்டில் வசிப்பதாகத் தான் சொன்ன வார்த்தை பொய்யாகும் என நினைத்து லக்ஷ்மணனுடனும், சீதையுடனும் வேறு இடத்திற்குப் புறப்பட்டுச் செல்லும்போது வழியிலிருந்த அத்திரி மகரிஷியின் ஆசிரமத்தையடைந்தார். அவரும் அவர்களை உபசரித்துச் சீதையைத் தன் பத்தினி அநுசூயையிடம் செல்லும்படி ஆக்ஞாபித்தார். ரிஷி பத்தினி சீதையை மிகுந்த சந்தோஷத்துடன் உபசரித்து, அவளுக்கு நல்ல சந்தனத்தைப் பூசி, புஷ்பத்தைச் சூட்டிச் சிறந்த பட்டு ஒன்றைக் கொடுத்து, "உன் கலியாணத்தை நான் பார்க்காததால், அந்த கதையை எனக்குச் சொல்'' என்று கேட்க, சீதை எல்லா விஷயங்களையும் சொன்னாள். அவைகளைக் கேட்டு அநுசூயை மிகவும் சந்தோஷித்து அவள் இருக்கவேண்டிய தர்மமார்க்கத்தைச் சொல்லி அனுப்பினாள். பிறகு அவர்கள் அங்கிருந்து புறப்பட்டு இக்ஷ்வாகு வமிசத்தில் அவனுக்கு நூறுவது பிள்ளையாகப் பிறந்த தண்டகனால் உண்டான தண்டகாரணியத்தில் பிரவேசித்தார்கள்.

---

ஓம்.

ஸ்ரீராமஜெயம்.

# ஆரணிய காண்டம்.

---

சாக்ஷாத் ஸ்ரீ ராகவன் தன் தம்பியுடனும் மனைவியுடனும் தண்டகாரணியத்தில் சஞ்சரித்துக்கொண்டிருக்கும்போது, விராதன் என்னும் இராக்ஷதன் 3 சிம்மங்களும், 4 புலிகளும், 10 செந்நாய்களும் கோர்க்கப்பட்டிருக்கும் சூலாயுதத்தைத் தனது நீண்ட கைகளில் பிடித்துக்கொண்டு பயங்கரமான ரூபத்துடன் அவர்களெதிரில் அதிவேகமாய் ஓடிவந்து, "ரிஷிவேஷம் பூண்டிருக்கும் அதர்மிஷ்டர்களான நீங்கள் யார்? நான் இக்காட்டில் இருப்பவன். விராதன் என்ற பெயர் உள்ளவன். என் பிதாவுக்கு ஜெயனென்றும், மாதாவுக்கு சதஹ்ரதா என்றும் பெயர். எந்த பாணத்தாலும் என்னைக் கொல்ல முடியாது. எனக்குப் பத்தினி கிடையாது. எனக்காக நீங்கள் ஒரு பெண்ணைக் கொண்டுவந்திருப்பதால், அவளை விட்டுவிட்டு நீங்கள் ஓடிவிடுங்கள்" என்றுசொல்லி ஸீதையை எடுத்துக்கொண்டு சென்றான். அப்பொழுது ராமன் ஸீதையைப் பிரிந்த துக்கத்தால் வருந்த, லக்ஷ்மணன் அவரைச் சமாதானம் செய்தான். பிறகு இருவரும் அவனைப் பல பாணங்களால் அடிக்க, அதனால் அவன் மிகவும் கோபங்கொண்டு, ஸீதையைக் கீழே விட்டுவிட்டு, வேகமாய்வந்து ராமலக்ஷ்மணர்களைத் தூக்கிச்சென்றான். அதைக்கண்டு ஸீதை மிகவும் துக்கித்தாள். அதற்குள் ராமலக்ஷ்மணர்கள் தங்கள் கையிலிருந்த கத்தியால் விராதன் கைகளைச் சேதித்துவிட்டனர். உடனே அவன், "நான் உங்களைத் தெரிந்துகொண்டேன். நான் தும்புரு என்ற கந்தர்வனாகயிருந்தவன். நான் ரம்பையோடிருந்த காலத்தில் குபேரனால் சபிக்கப்பட்டு இப்பொழுது உம்மால் சாபவிமோசனமடைந்தேன். நீர் எனக்கு அக்கினிப்பிராதனமானக் கர்மம் செய்தால் நான்தேவ ரூபம் அடைவேன்" என்று தெரிவிக்க, அவர்கள் அவனை ஒரு குழியில் தள்ளி அவன் சரீரத்தில் அக்னியை உண்டுபண்ணினார்கள். உடனே அவன் தேவரூபத்துடன் வெளிக்கிளம்பி, விமானத்தில் ஏறிக்கொண்டு தேவலோகம் அடைந்தான்.

பிறகு அவர்கள் அவ்விடத்தை விட்டு சரபங்கர் ஆசிரமத்தையடைந்தனர். அந்த வேளையில், தன்பிறப்பு எதற்காக என்பதையறியாமல் தம்பியுடனும் மனைவியுடனும் தண்டகாரணியத்திலிருக்கும் ஸ்ரீ ராகவனிடம் தேவகாரியமான ராவணாதிகளை வதிப்பதான பிரதிக்ஞையை ரிஷிகள்மூலம் பெறுவதற்காகவும், வருணன் தன்னிடம் கொடுத்த வில்லையும், சிறப்பான அஸ்திரத்தையும் அகஸ்தியரிடம் கொடுப்பதற்காகவும், பிரம்மாவின் ஆக்ஞையால் சரபங்கரைப் புண்ணிய லோகத்திற்கு அழைத்துக்கொண்டு போவதற்காகவும் தண்டகாரணியம் வந்திருந்த இந்திரன் இரண்டு காரியங்களை முடித்துவிட்டு, மூன்றாவது காரியமான சரபங்கரை அழைத்துப்போகும் காரியத்தைச் செய்வதற்காகத் தன் விமானத்தை ஆகாயத்தில் நிறுத்திவிட்டு சரபங்கர் ஆசிரமத்திற்குச் சென்றிருந்தார். அப்பொழுது அந்த விமானத்தைக் கண்ட ராமன் லக்ஷ்மணனைப் பார்த்து, "லக்ஷ்மணா, இதோ தெரியும் விமானத்தைப் பார்த்தாயா? இது இந்திரனுடையது. இந்திரன் இங்கு ஏதோ காரியமாய் வந்திருப்பதாகத் தெரிகிறது. நீ சீதையுடன் இங்கேயே இரு. நான் உள்ளே சென்றுவருகிறேன்" என்று சொல்லி ஆசிரமத்திற்குள் சென்றார்.

இது நிற்க, உள்ளே சென்றிருந்த இந்திரன் சரபங்கரைப் பார்த்து, "மகாரிஷியே, தபசால் நீர் சகல லோகங்களையும் ஜயித்துவிட்டபடியால், உம்மை தேவலோகத்திற்கு அழைத்துவரும்படி பிரம்மதேவர் சொன்னார்" என்று சொல்ல, சரபங்கர், "இந்திரா, ரிஷிகளான நாங்கள் எந்தப் பரப்பிரம்மத்தைத் தியானிக்கிறோமோ, அந்தப் பரப்பிரம்மமே இப்பொழுது உலகத்தில் ஸ்ரீ ராமனாய் அவதரித்திருப்பதால், அவரைப் பார்க்காமல் எனக்கு எந்த லோகமும் வேண்டாம். அவர் இப்பொழுது சித்திரகூடம் வந்திருக்கிறார் என்று கேள்விப்பட்டேன். சீக்கிரத்தில் இங்கு வருவார். நான் அவரை தரிசித்தபிறகு கட்டாயம் வருகிறேன்" என்று கூறினார். அதுகேட்டு இந்திரன், "மகாரிஷியே, நீர் யார் வரவை எதிர்பார்க்கிறீரோ அவர் இதோ வந்துவிட்டார். ராவண வதம் ஆகும்வரையில் நான் அவரைப் பார்க்கக்கூடாது. ஆதலால் நான் சென்றுவருகிறேன்" என்று சொல்லி மறைந்தார். அப்பொழுது லக்ஷ்மணன் சீதை முதலிய எல்லோரும் வரவே, ரிஷி மிகுந்த சந்தோஷத்துடன் அவர்களை வரவேற்று, அவர்களுக்கு ஆகாரத்திற்கு வேண்டிய காய் கிழங்கு கனிகளைக் கொடுத்து,

தான் அதுவரையில் தனது தவத்தால் சம்பாதித்த சகல லோகங் களையும் ராமனுக்கு அர்ப்பணம்செய்து, அக்கினிப்பிரவேசம் செய்து, பிரம்மலோகத்தை யடைந்தார். பிறகு, அந்த வனத்தி லிருந்த எல்லா ரிஷிகளும் ராமன் அங்குவந்திருப்பதை யறிந்து, அவ்விடம் வந்து, "ராமா, நாங்கள் ராக்ஷதர்களால் மிகவும் கஷ் டப்படுகிறோம். எங்கள் உடம்பைப் பாரும். அவர்களால் நாங் கள் காயப்படுத்தப்பட்டிருக்கிறோம். இதோ இங்கு மலைகள் போல் குவிந்திருக்கும் எலும்புகள் ராக்ஷதர்களால் கொன்றுதின் னப்பட்ட ரிஷிகளின் எலும்புகள். ரிஷிகள் நிஷ்டையில் இருக் கும்போது ராக்ஷதர்கள் கலைமான் ரூபத்துடன் வந்து, அவர்களைக் கொம்புகளால் குத்திக்கொன்று தின்றுபோவார்கள். ஏ, ராமா, நீர்தான் எங்களை இந்தக் கஷ்டத்திலிருந்து காப்பாற்றவேண்டும். 'நீங்கள் தபசிகள் அல்லவா? நீங்கள் அவர்களை சபிக்கக்கூடாதா?' என்று கேட்கலாம். ஆனால் அவர்களைச் சபித்தால், நாங்கள் வெகுகாலமாகச் செய்த தவத்தின் பலன் போய்விடும், ஆதலால் தான் நாங்கள் சபிப்பதில்லை. ஆகையால் நீர்தான் அவர்களை அழிக்கவேண்டும்" என்று பிரார்த்திக்க, ராமன், "மகரிஷிகளே, நீங்கள் அஞ்சவேண்டாம். நான் சகல ராக்ஷதர்களையும் அழித்து விடுகிறேன்" என்று பிரதிக்ஞைசெய்து அவர்களை அனுப்பினார்.

அதற்குப் பிறகு ராமன் அவ்விடத்தை விட்டு சுதீக்ஷ்ணர் ஆசிரமத்தை யடைந்து, அவரால் கொண்டாடப்பட்டுப் பின் அங் கிருந்து புறப்பட்டுச் செல்லும்போது சீதை ராகவனைப்பார்த்து, "நாதா, தாங்கள் சகலராக்ஷதர்களையும் அழிப்பதாகப் பிரதிக்ஞை செய்தது என்மனதை வருத்துகிறது. ஜடை, மரவுரி முதலிய வைகளுடன் ரிஷிகளைப்போலிருக்கும் நீங்கள் உங்களுக்கு நேரிட ஒன்றும் துன்பம் செய்யாத ராக்ஷதர்களை ஏன் கொல்லவேண்டும்? தங்கள் கையில் வில் இருப்பதால் அல்லவா நீங்கள் இவ்விதம் சபதம் செய்கிறீர்கள்! நான் இப்படிச் சொல்வதைப்பற்றித் தாங் கள் வருத்தப்படக்கூடாது. நான் உம்மிடம் கொண்டுள்ள அபி மானத்தால் சொல்லுகிறேனே தவிற வேறில்லை. சேர்க்கையால் கெடுதல் உண்டாகும் என்பதற்கு ஒரு கதை சொல்லுகிறேன் கேளுங்கள். ஒரு ரிஷியானவர், இந்திரன் பத்திரமாய் வைத்தி ருக்கும்படி தன்னிடம் கொடுத்த ஒரு கத்தியால் சகல மரங்களை யும் சேதித்து, அந்தப் பாபத்தால் தவப்பலனை எல்லாம் இழந்து நரகமடைந்தார். கத்தியின் சேர்க்கையால் அவருக்கு கெடுதல்

வந்ததுபோல உங்களுக்கும் வில்லின் சேர்க்கையால் கெடுதல் வருமோ என்று பயப்படுகிறேன். மேலும் தர்மமே சகலத்திற்கும் பிரதானம். தர்மத்திலிருந்துதான் எல்லாம் உண்டாயிருக்கிறது. இந்த உலகமும் தர்மத்தின் சாரமாகும். ஆகையால் தாங்கள் தர்மத்தை மீறக்கூடாது" என்று சொன்னதைக் கேட்டு ராமன் பிரேமையோடு, "ஏ, சீதே, நானாக ரிஷிகளைக் கூப்பிடவில்லையே! அவர்களாகவே வந்து கேட்பதால், நான் அவர்களை ரக்ஷிக்கக் கடமைப்பட்டவன். அண்டினவர்களை ஆதரிக்காவிட்டால் நரகம்தான் சித்திக்கும். ஆதலால் அவர்களைக் காப்பாற்றுவதற்காக அவசியமானால் உன்னையும், லக்ஷ்மணனையும், என் உயிரையும் இழப்பேனே தவிர என் பிரதிக்ஞையை விடமாட்டேன்" என்று சபதம் செய்தார். பிறகு அவர் தன்னையழைத்த ஒவ்வொரு ரிஷியின் ஆசிரமத்திலும் பலமாதங்கள் தங்கியிருந்து இப்படிப் பத்து வருஷங்களைக் கழித்தார். அதன்பின் அவ்வனத்தில் இல்வலன், வாதாபி என்ற ராக்ஷசர்களை நாசம்செய்த அகஸ்தியர் இருப்பதாகத் தெரிந்துகொண்டு, அவரைத் தரிசிப்பதற்கு அவருடைய ஆசிரமத்தை யடைந்தார். அங்கு ஒரு சிஷ்யர் அவரை வரவேற்று உள்ளே அழைத்துச் செல்லும்போது, அவருக்கு அங்கிருந்த பிரம்மா, அக்னி, விஷ்ணு முதலிய தேவர்களின் பீடங்களையும் காண்பித்தார். உள்ளே சென்றதும் அகஸ்தியர் அவர்களை வரவேற்று, காய், கிழங்கு முதலிய ஆகாராதிகளைக் கொடுத்து உபசரித்தார். ராமர் அங்கு சிலகாலம் தங்கியபின் அகஸ்தியரிடம், "நான் வசிப்பதற்கு சௌகரியமான இடத்தைச்சொல்லவேண்டும். துஷ்டர்களை அவர்கள் வருகிற வழியிலேயேகொன்று உங்களுக்கு சௌக்கியத்தை உண்டாக்குகிறேன்" என்று கேட்க, ரிஷியானவர், "சமீபத்தில் பஞ்சவடி என்று ஒருஇடம் இருக்கிறது. அங்கு வசிக்கலாம்" என்று சொல்லி ராமருக்கு ஒரு சிறந்த வில்லையும், அம்பராப் பொதியையும் கொடுத்தனுப்பினார். ராமன் அவைகளைப் பெற்றுக்கொண்டு பஞ்சவடிக்குப் புறப்பட்டுச் செல்ல, வழியில் ஜடாயுவென்ற பக்ஷிராஜனைக் கண்டார்கள். தன் பிதாவுக்கு சினேகமான அப்பக்ஷி அவர்களை ரக்ஷிப்பதாகச் சொல்லியது. அதைக்கேட்டு சந்தோஷித்து ராமன் அதனிடம் விடைபெற்றுக்கொண்டுக் கொஞ்சதூரம் சென்றதும், லக்ஷ்மணனைப் பார்த்தார். அக்குறிப்பால் அவர் மனதிலுள்ள எண்ணத்தையறிந்துகொண்ட லக்ஷ்மணன் அங்கு ஒரு பர்ணசாலை கட்டினான். ராமன் சீதையுடன் அதில் கிரகப்பிரவேசம் செய்து, தனக்குத்

தம்பியாயும்,பிள்ளையாயும்,சிஷ்யனுயுமுள்ள லக்ஷ்மணனைப்பார்த்து, "பிள்ளையான உன்னால் நமது பிதா இவ்வித பாக்கியத்தை யடையவில்லை. நான் அடைந்தேன்" என்று சந்தோஷத்துடன் அவனை ஆலிங்கனம் செய்துகொண்டு அவனைப் புகழ்ந்தார். பின் அவர்கள் அங்கே மூன்று வருஷகாலம் வசித்துவந்தனர். பிறகு ஒரு நாள் ராமன் கோதாவரிக்குச் சென்று ஸ்நானம் செய்துவிட்டு வந்து சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் வீற்றிருந்தார். இப்படி அவர் வீற்றிருந்த காட்சியானது பரமேஸ்வரன் பார்வதியுடனும் நந்திகேஸ்வரனுடனும் விளங்கிய காட்சிபோலிருந்தது. (நூறு கிரந்த பரியந்தம் எழுதியுள்ள சிவபக்தியுள்ளவரான அப்பயதீக்ஷதர், விஷ்ணுபரமாக விளங்கும் ஸ்ரீமத் வால்மீக ராமாயணத்தை வியங்காதி அர்த்தங்களால் சைவப்பரமாய் அர்த்தம்செய்து எழுதியிருக்கிறார். இந்த இடத்தில் பரமசிவன் பார்வதியுடனும் விஷ்ணுவுடனும் விளங்கினால் எப்படியோ அப்படியே ராமன் விளங்கினார் என்பது அங்கீகரிக்கத்தகுந்ததல்ல. இவரால் எழுதப்பட்ட ராமாயண ஸாரஸங்கிரஹம் என்ற கிரந்தமானது கண்டனம் செய்யப்பட்டிருப்பதை வால்மீக வாக்கியரீதியாய் பூர்வபக்ஷம் செய்யப்பட்டிருக்கும் ராமாயண ஸாரஸங்கிரஹ கண்டனமான சத்தியசாரம் என்ற புத்தகத்தில் பார்த்துக்கொள்ளவும்).

இப்படி ராமன் சிறப்பாக வீற்றிருக்கும்போது அவ்விடத்தில் வந்த கிழவியான சூர்ப்பநகையைப் பார்த்து ராமன், "நீயார்? எதற்காக வந்திருக்கிறாய்?" என்று கேட்க, அவள், "நான் ராவணனுக்கும், கும்பகர்ணனுக்கும் தங்கை. எனக்குப் பின் பிறந்தவன் விபீஷணன் என்று ஒருவன் உண்டு. அவனுக்கு ராக்ஷசர்களுக்குள்ள சேஷ்டைகள் கிடையாது. அவன் உத்தம தர்மிஷ்டன். நான் இப்பொழுது காமத்தை உத்தேசித்து இவ்விடம் வந்திருக்கிறேன்," என்று சொன்னாள். அதுகேட்டு ராமன், "உன்னைப்போலொத்த ஒரு ஸ்திரீ சககளத்தியோடு இருக்கமாட்டாள். ஆதலால் இங்கு இப்பொழுது பத்தினியுடன் இல்லாத என் தம்பியிடம் செல்" என்றுசொல்ல, அவளும் லக்ஷ்மணனை நாடிவர, அவளது மனோபாவத்தை யறிந்த லக்ஷ்மணன், "நான் இப்பொழுது ராமருக்கும் சீதைக்கும் கைங்கரியம் செய்துவருவதால், நீ என்னுடனிருப்பது உசிதமல்ல. நீயும் அவரையே அடைந்தால் அந்த கைங்கரியத்தை யடையலாம். மேலும் ராமன் பக்கத்திலிருக்கும் சீதை கிழவியாயிருக்கிறாள்" என்று சொல்லி, ராமன்

அவளைப் பரிஹஸித்துத் தன்னிடம் அனுப்பியதுபோலத் தானும் அவளைப் பரிஹஸித்துத் திரும்பவும் அவரிடமே அனுப்பிவிட்டான். அவள் ராமனைப் பார்த்து, "இந்த சீதை உம்மிடம் இருப்பதாலல்லவா நீர் என்னை உபேக்ஷிக்கிறீர். நான் இப்பொழுதே இவளை விழுங்கிவிடுகிறேன் பார்" என்று சொல்லிக்கோபத்துடன் சீதையிடம் ஓடிவர, ராமன் அவளை விரட்டி ஓட்டிவிட்டு, "லக்ஷ்மணா, துஷ்டர்களோடு பரிஹாசம் செய்யலாமா? சீக்கிரம் இவளை அங்கஹீனம் செய்துவிடு. ஆனால் கொன்றுவிடாதே" என்று சொல்ல, லக்ஷ்மணன் அவள் காதையும் மூக்கையும் அறுத்துவிட்டான். உடனே அவள் அலறி யழுதுகொண்டு, "என் காது மூக்கை யறுத்தபலனை நீங்கள் சீக்கிரம் அனுபவிப்பீர்கள்" என்று சொல்லிக்கொண்டு கராதிகள் இருப்பிடத்திற்குச் சென்றாள். அவள் கோலத்தைக் கண்ட கரன், "உன் காது மூக்கை யறுத்தது யார்? யார் கழுத்தில் இப்பொழுது காலபாசம் சுற்றிக்கொண்டிருக்கிறது? படம் எடுத்துக்கொண்டு சீறிவரும் கிருஷ்ண சர்ப்பத்தின் வாயில் யார் கைவைக்கக் காத்திருக்கிறான்? என்று கேட்க, அவள், "கரனே, காட்டில் காய் கிழங்குகளைச் சாப்பிட்டுக்கொண்டு உத்தம ரூபத்துடன் இருவர் இருக்கின்றனர். அவர்கள் தர்மநெறியில் நடப்பவர்கள். அவர்களால்தான் இப்படி ஏற்பட்டது. அவர்களிடம் அழகான ஒரு பெண் இருக்கிறாள். அவளை உனக்காகக் கொண்டுவரப்போனேன். அப்பொழுது இப்படி யாகிவிட்டது" என்றுரைத்தாள். அதைக்கேட்ட கரன் அதிக கோபமடைந்து சேனாதிபதியான தூஷணனைக் கூப்பிட்டு, திரிசிரஸுடனும் 14000 வீரர்களுடனும் உடனே யுத்தத்திற்குப் புறப்படும்படி கட்டளையிட்டான். எல்லோரும் புறப்பட்டு ராமனிடம் சண்டைக்குவர, ராமன் அப்பொழுது உண்டான உற்பாதங்களைக் கவனித்து, "லக்ஷ்மணா, இவைகளைக் கவனித்தால் மகா கோரமான யுத்தம் உண்டாவது நிச்சயம். ஆகையால் நீ சீதையைக் கொண்டுபோய் மலைக்குள் வைத்துக்கொண்டு காவலாயிரு" என்று சொல்ல லக்ஷ்மணன் அப்படியே செய்தான். இதற்குள் சகல சேனைவீரர்களும் வந்தார்கள். பலபாணங்களால் ராமன் அவர்களையெல்லாம் அழித்து நாசம்செய்வதைக்கண்ட தூஷணன் ராமனையெதிர்க்க, அவனையும் ஒரு பாணத்தால் கொன்றுப் பின் தன்னை எதிர்த்துவந்த திரிசிரஸையும் மூன்று பாணங்களால் கொன்றான். அப்பொழுது கரன் ராமன் கையிலிருந்த வில்லை முறிக்கவேண்டுமென்று அதைப் பிடிக்க, ராமன் பலபாணங்களால்

கரனை அடித்து அவன் ரதத்தை அழித்துவிட்டான். உடனே கரன் தன் கதையை எடுத்துக்கொண்டு கீழே குதித்து, ராமன் மேல் வீசியெறிய, ராமன் அதைக் கண்டித்து, பல பாணங்களால் கரன் தேகத்தைத் துளைத்துவிட்டார். கரன் மிகுந்த கோபங் கொண்டு ராமனை விழுங்குவதற்காக அவனிடம் ஓடிவந்தான். இப் படி இரத்தத்தால் நனைந்த சரீரத்துடன் ஓடிவரும் கரனை அதிக பௌரஷமுள்ள ராமன் தன் அஸ்திரத்தால் ஓரடி (அல்லது இரண்டுமூன்றடிகள்) பின்னடையும்படி செய்து, ஒரு சிறந்த பாணத்தை அவன் வதத்திற்காகப் பிரயோகம் செய்தார். சுவே தாரணியத்தில் பரமசிவனால் அந்தகாசுரவதம் எப்படியாயிற்றோ அப்படியே கரன் அந்த பாணத்தால் அடிபட்டு விழுந்தான். எல்லோரும் அடிபட்டு விழுந்ததை சூர்ப்பனகை கண்டாள் (தாடகா வதம், கரவதம், வாலிவதம் இம்மூன்றிலும் ராமனுக்குச் சில நாடகங்களில் தோஷம் சொல்லப்படுகிறது. இவற்றில் ராம னுக்கு தோஷமே கிடையாது என்பதையும், ஸ்திரீவத தோஷமே ராமனுக்குக் கிடையாது என்பதையும், கரவதத்தில் ராமன் தன் காலைப் பின்வைக்கவில்லையென்பதையும், வாலிவதத்தில் ராமன் வாலியை மறைந்தடிக்கவேயில்லையென்பதையும் சித்தாந்த புத்த கத்தில் பார்த்துத் தெரிந்துகொள்ளவும்). கராதிகள் இவ்விதம் அடிபட்டதைத் தூரத்திலிருந்து பார்த்துக்கொண்டிருந்த அகம் பனன் என்பவன் பயந்து, ராவணனிடம் சென்று சகல விஷயத் தையும் சொல்லி, "ராமனைக் கொல்லவேண்டுமானால், அவனுடைய பத்தினியை அபகரிக்கவேண்டும். அப்பொழுதுதான் ராமன் வருத்தத்தால் ஒருவேளை பிராணனை விடுவான்" என்று சொன் னான். ராவணன் இதுவிஷயமாய் மாரீசனிடம் யோசனை செய்ய, மாரீசன் அவன் எண்ணத்தை மாற்றி, அவனை ஊருக்கனுப்பிவிட் டான். சிறிதுகாலத்திற்குள் சூர்ப்பனகை வர, அவளது அலங் கோலத்தைக் கண்ட ராவணன் அதன் காரணத்தைக் கேட்க, அவள், "லக்ஷ்மணன்தான் இப்படிச் செய்தவன். ராமன் பக்கத் திலிருந்த சீதையை உனக்காகக் கொண்டுவரச் சென்றபோது இவ் விதம் நேர்ந்தது. மேலும் அந்த சீதையை யார் அடைந்திருக்கி றார்களோ, யார் சீதையால் அடையப்பட்டிருக்கிறார்களோ அவர் கள்தான் பாக்கியசாலிகள்" என்று சொன்னாள், அதுகேட்ட ராவணன், ஏற்கனவே சனத்குமாரரிடமிருந்து பரமாத்மாவின் பாதாரவிந்தத்தை யடைவதற்கு உபாயத்தை யறிந்திருப்பதாலும் (ராவணன் காமத்திற்காக சீதையை எடுக்கவில்லை. தன் ஆத்ம

வதத்திற்காகவே அவளை எடுத்துப்போனான் என்ற விஷயத்தைச் சித்தாந்த புத்தகத்தில் பார்த்துக்கொள்ளவும்), ராமனிடத்தில் ஜன்ம த்வேஷத்தை உண்டுபண்ணிக்கொண்டால் அவரால் அடிபட்டு உத்தமலோகத்தை யடையலாமென்று கேள்விப்பட்டிருப்பதாலும், ராமனிடத்தில் த்வேஷம் உண்டுபண்ணிக்கொள்ள மூன்று உபாயங்களில் எது சிறந்தது என்று சற்று யோசித்து, பரதாராபஹரணம்தான் செய்யத்தகுந்தது எனத் தீர்மானித்து, 'நான் ராம பத்தினியை அபஹரித்து என் உயிர் உள்ளவரையில் அவளை விடாமல் இருப்பேனேயாகில் ராமன் கட்டாயம் என்னைக் கொல்லுவான்' என்று தனக்குள் நிச்சயித்து, அதற்காக சீதையை அபகரிக்க வேண்டுமென்று எண்ணி, மாரீசனிடம் சென்று, "நீ என்னுடன் வரவேண்டும். தங்கமான் ரூபம்கொண்டு வனத்தில் சஞ்சரித்துக்கொண்டிரு. சீதை உன்னைக் கண்டதும் தனக்குப் பிடித்துத் தரும்படி ராமனை வேண்டும்படி செய்து, ராமன் உன்னைப் பிடிக்கவரும்போது, அவன் கையில் சிக்காமல் தந்திரமாக ராமனையும் லக்ஷ்மணனையும் பிரித்துவிடு. அவர்கள் இல்லாத சமயம் பார்த்து நான் சீதையை எடுத்துக்கொண்டு வந்துவிடுகிறேன். நீ இந்த உபகாரம் செய்தால், பின்னால் நான் உனக்குப் பாதி ராஜ்யம் கொடுப்பேன்" என்று சொன்னான். அதுகேட்ட மாரீசன், "அபார பலத்துடன் கூடிய ராமனுடைய விரோதம் உனக்கு வேண்டாம். அவனது பன்னிரண்டாவது வயதில் நான் ஏற்கனவே அவனிடம் அடிபட்டிருக்கிறேன். இப்பொழுது அவனுக்கு 38 வயதிருக்கும். இப்பொழுது அவன் அதிக பலமுள்ளவனாயிருக்கிறான். அவன் உத்தமன். அவனிடம் உனக்கு த்வேஷம் வேண்டாம்" என்று சொல்ல, ராவணன் அழியவேண்டிய காலத்திலிருப்பதால், 'கேடுவரும் பின்னே மதிகெட்டுவரும் முன்னே' என்ற வாக்கியப்படி, மதியிழந்து ராமனை வாயில்வந்தபடி தூஷித்தான். அப்பொழுது மாரீசன், "உனக்கு அழிவு காலம் நெருங்கிவிட்டது. அதனால்தான் இப்படி ஒரு உத்தமனைத் தூஷிக்கிறாய்" என்றுசொல்ல ராவணன் மிகுந்த கோபங்கொண்டு, "நீ என் சொற்படி நடக்காவிட்டால் இப்பொழுதே நான் உன்னைக் கொன்றுவிடுவேன்" என்று பயமுறுத்தினான். மாரீசனும் அவன் சொற்படி நடக்கச் சம்மதித்து அவனுடன் புறப்பட, இருவரும் ஜனஸ்தானத்தை (பஞ்சவடியை) யடைந்தனர். உடனே மாரீசன் பொன்மான் ரூபத்துடன் சீதை யிருப்பிடத்திற்குச் சமீபமாய் சஞ்சரித்துக்கொண்டிருக்க, புஷ்பம் பறிப்பதற்காக

ஆசிரமத்திலிருந்து வெளியே வந்த சீதை அம்மானைக் கண்டு, அதில் பிரேமைகொண்டு, "உத்தமர்களே, சீக்கிரம் ஆயுதங்களுடன் வாருங்கள்" என்றுகூப்பிட்டவுடனே இருவரும் வெளியே வந்தனர். சீதை ராமனைப் பார்த்து, "நாதா, இந்த மான் என் மனதைக் கொள்ளைகொண்டுவிட்டபடியால் தாங்கள் எனக்கு அதைப் பிடித்துக் கொடுக்கவேண்டும். அது கிடைத்தால், நான் ஊரில் விட்டுவந்த மான்களை நினைக்கமாட்டேன்" என்று கூறக் கேட்ட லக்ஷ்மணன், "இது உண்மையான மானல்ல. ஏற்கனவே இரண்டு தடவை தப்பித்து ஓடின மாரீசன் இந்த ரூபத்தில் வந்திருக்கிறான். இவனைக் கொல்வதே தகும்" என்றுசொல்ல, சீதை, "நாதா இதை எனக்குக் கட்டாயம் பிடித்துத் தரவேண்டும். உயிரோடு அகப்பட்டால் நல்லது. இல்லாவிட்டால் அதைக்கொன்று தோலையாவது கொண்டுவந்தால், ஆசனம் போட்டுக்கொள்ளலாம்" எனத் தெரிவித்தாள். அவள் சொல்லை ஏற்றுக்கொண்டு ராமன் லக்ஷ்மணனைப் பார்த்து, "தம்பியே, விற்பிடித்த, தனுர்வேதமறிந்த அரசர்கள் விளையாட்டிற்காவது, மாமிசத்திற்காவது, வேட்டைக்காவது மிருகங்களைக் கொல்லும்போது அவைகளை நேர்முகமாகவே அடிப்பார்கள். மறைமுகமாக அடிப்பது தனுர்வேதத்திற்கு விரோதமாகும். அந்த தர்மத்தை அனுஷ்டிக்கும் நான் இந்த மானைத் துரத்திக்கொண்டுபோய், அது சீதை சொன்னபடி உண்மையான மானுனல், உயிருடன் பிடித்துவருகிறேன். நீ சொல்லியபடி மாரீசனுனல், அவன் அநேகம் பெரியோரைக் கொன்றிப்பதால், நான் அவனைக் கொன்றுவருகிறேன். நீ இங்கு சீதையை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொண்டிரு," என்று சொல்லிப் புறப்பட்டு, அதை உயிரோடு பிடிக்கவேண்டுமென்று பதுங்கிப் பதுங்கிப் பிடித்துப்பார்க்க, அந்த மான் ஜாதிவழக்கப்படி துள்ளிக் குதித்து ஓடிவிட, ராமன் அதைத் துரத்திக்கொண்டு வெகுதூரம் சென்று, களைப்படைந்து ஒரு மரத்தடியில் தங்கினுர். அப்பொழுது 'இராமன் இனி நம்மைத் துரத்திக்கொண்டுவரமாட்டான்' என நினைத்த மாரீசன் பலமான்களுடன் கூட்டமாக அவரெதிரில் வர, அவர் வில்லை வளைத்தார். உடனே அவன் மறைந்தான். இராமன் அவன் வரவிற்காகக் காத்திருந்து, மரங்களின் மறைவிலிருந்து வெளியே வந்ததும், அவன்மேல் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகம் செய்ய, அது சென்று அந்தமான் சரீரத்தைப் பிளந்து, அதனுள்ளிருந்த மாரீசனது ஹிருதயத்தையும் பிளந்துவிட, அவன் "சீதா, லக்ஷ்மணா!" என்றலறிக்கொண்டே கீழே

விழுந்தான். அதைக் கேட்ட ராமன் சீக்கிரமாய் வேறு ஒரு மானைக்கொன்று, அதன் மாமிசத்தை எடுத்துக்கொண்டு ஆசிரமத்தை நாடிவந்தார்.

அதற்குள் சீதை 'சீதா லக்ஷ்மணா' என்ற சப்தத்தைக் கேட்டு, லக்ஷ்மணனைப் பார்த்து, "அண்ணாவுக்கு ஏதோ ஆபத்து வந்துவிட்டது. நீர் அவருக்குத் துணையாகச் செல்லவேண்டும்" என்று சொல்ல, லக்ஷ்மணன், "அம்மா, சுத்த க்ஷத்திரியர் ஒருக்காலும் வாய்விட்டுக் கதறமாட்டார்கள். தவிறவும் யுத்தத்தில் அண்ணாவை ஜயிப்பதற்கு மூன்று லோகங்களிலும் யாருமில்லை. அண்ணாவுக்கு ஆபத்து ஒன்றுமில்லை. நீர் கவலைப்படவேண்டாம்" என்று கூறியும், சீதை அதை நம்பாமல், "அண்ணாவுக்கு ஆபத்து வந்த இச்சமயத்தில் நீர் உடனே அங்கு செல்லாமல் இங்கு இருப்பதைக் கவனித்தால், சந்தேகமாயிருக்கிறது. நீ யோக்கியனாய்க் காணப்படவில்லை. பூஜிக்கத்தகாதவனே, குலத்தைக் கெடுக்கவந்தவனே, அண்ணா இல்லாத வேளையில் நீ என்னையடைய எண்ணங்கொண்டாயோ? அல்லது என்னை அழைத்துக் கொண்டு வருவதற்காக பரதன் உன்னை அனுப்பினானா? உன்னையாவது பரதனையாவது நான் மனத்திலும் நினைக்கமாட்டேன்" என்று கோபத்தோடு சொன்னாள். இவ்வார்த்தைகளைக் கேட்ட லக்ஷ்மணன் மனம் பொறுமல் காதுகளைப் பொத்திக்கொண்டு, "குருவாக்கியத்தைக் கடைப்பிடித்து, ஒழுங்கு தவராதிருக்கும் என்னை நோக்கி இவ்விதம் சொன்ன உம்முடைய நாக்கைச் சுட்டாலென்ன?" என்று கூறவும், சீதை "இப்படிப் பேசிக்கொண்டு நீ இன்னும் இங்கு இருந்தால், நான் அக்னிப்பிரவேசம் செய்வேன்" என்று சொல்லிக்கொண்டு வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு கதறினாள். அதைக் கண்ட லக்ஷ்மணன் 'இனி நான் 'இவ்விடத்தில் இருந்தால் இவள் பிராணனை விட்டுவிடுவாள்' என்றெண்ணி, அவளை அஞ்சலிபந்தம் செய்து, அவ்விடத்தை விட்டகன்றார். இவ்விதம் செல்லும்போது வனதேவதைகளை மனதில் தியானித்து, 'நீங்கள் இவளைப் பாதுகாக்கவேண்டும்' என்று வேண்டிக்கொண்டான்.

இலக்ஷ்மணன் அங்கிருந்து அகன்றதை யறிந்த இராவணன் சந்நியாசி வேஷங்கொண்டு, கையில் திரிதண்டத்துடனும், மார்பில் யக்ஞோபவீதத்துடனும், தோளில் சிக்கத்துடனும், காலில் பாத

ரகைக்ஷியுடனும்; குடைபிடித்துக்கொண்டு ஆசிரமவாயிலை யடைந்தான். அவனைப் பெரிய சந்நியாசி என்று எண்ணி, சீதை அர்க்கிய, பாத்திய ஆசமனீயங்களால் உபசரித்து, "என் பர்த்தா வேட்டைக்கு வெளியே சென்றிருக்கிறார். வரும் சமயமாகிவிட்டது. தாங்கள் தயவுசெய்து சற்று உட்காருங்கள்" என்று சொல்ல, ராவணன் அவளைப் பார்த்து, "நீர் யாருடைய புத்திரி? யாருடைய பத்தினி? நீர் ஏன் இங்கு தனித்திருக்கிறீர்? என்று கேட்க, 'இவர் பெரியவர். பதில் சொல்லாவிட்டால் கோபிப்பாரோ?' என்று எண்ணி சீதை, ஆதியந்தமாகத் தன் சரித்திரம் பூராவையும் சொல்லித் தான் தசரதமகாராஜன் நாட்டுப்பெண்ணென்றும், ராமபத்தினியென்றும், ஜனகராஜன் புத்திரியென்றும், தன் பர்த்தா கொடுப்பதைத் தவிற யாரிடமும் எதுவும் வாங்கும் வழக்கமில்லையென்றும் சொன்னாள். அப்பொழுது ராவணன், "சகல சம்பத்தையும் இழந்திருக்கும் ராமனை நீ யடைந்திருக்கலாமா? நான் இலங்கா பட்டணத்திற்கு அதிபதி. உனக்கு நான் லங்காராஜ்யத்தைக் கொடுக்கிறேன். சகல சம்பத்தையும் அளிக்கிறேன். நீ என்னுடன் வந்துவிடு" என்று சொல்லக் கேட்ட சீதை மிகுந்த துக்கத்தை யடைந்து, லக்ஷ்மணனை நினைத்துக்கொண்டு, 'ஏ, உத்தமா, நீர் இருந்தால் இப்பொழுது இந்தக் கஷ்டம் நேரிட்டிருக்காதே. நான் உம்மைத் தூஷித்த பலனை யனுபவிக்கிறேன்' என்று வருந்தி, ராவணனை அவமதித்துப் பேசினாள். உடனே ராவணன் சந்நியாசியின் ரூபத்தை மாற்றி, பத்துத் தலை, இருபது கைகளுடன் தோன்றவும், அந்த பயங்கர ரூபத்தைக்கண்ட சீதை பயந்துஓட, ஆகாயத்தில் புதன் ரோகிணி தேவியைத் துரத்திப் பிடிப்பதுபோல ராவணனும் அவளைத் துரத்திப் பிடித்துக் கைகளால் தூக்கி ரதத்தில் உட்காரவைத்து ரதத்தை ஓட்டிக்கொண்டு போகும்போது, சீதை "ராமா, லக்ஷ்மணா" என்று கதறிக்கொண்டு, "பக்ஷிகளே, மிருகங்களே, ராவணன் என்னைப் பலாத்காரமாகக் கொண்டுபோகிறான் என்று என் நாதரிடம் தெரிவியுங்கள்" என்று பலவிதமாய்க் கதறிக்கொண்டிருந்தாள். அவள் இவ்விதம் ஓலமிட்டுஅழுத சப்தத்தைக்கேட்ட பக்ஷிராஜனான ஜடாயு ராவணனைத் தடுத்து, "ஏ, ராவணா! பரதாராபகரணம் பாபமல்லவா? ஆகையால் இவளை நீ விட்டுவிடு. தவிறவும் நீ பராக்கிரமமுள்ளவனானால், ராமனிருக்கும்போதல்லவா இவளைக் கொண்டுபோக வேண்டும். சற்று பொறு. ராமன் வரட்டும்" என்று சொல்ல, ராவணன் அதைப்பொருட்படுத்தாமல்

சென்றான். அப்பொழுது ஜடாயு கோபங்கொண்டு, "ஹே, ராவணா! நான் உன்னை விடமாட்டேன். நீ என்னுடன் யுத்தம் செய்து போகலாம்" என்று சொல்லி ராவணனை எதிர்க்கவே, ராவணன் அவனைப் பல பாணங்களால் அடிக்க, ஜடாயு தனது இறக்கைகளால், அவனது சகல பாணங்களையும் ரதத்தையும் அழித்து, தன் மூக்கினால் குதிரைகளைக் கொன்று, அவன் கையி லிருந்த வில்லையும் முறித்துவிட்டான். உடனே ராவணன் தனது இடது கைகளால் சீதையைப் பிடித்துக்கொண்டு தேரிலிருந்து கீழே குதிக்க, ஜடாயு அவனது இடது கைகளை வெட்டிவிட்டான். அக்கைகள் மறுபடியும் முளைத்ததைக் கண்ட ஜடாயு அதிககோ பங்கொண்டு, அவனது கிரீடங்களை உருட்டிவிட்டுத் தனதுபாதங் களால் அவனது கேசபாரங்களைப் பிடித்துக்கொண்டு இறக்கை களால் கன்னத்தில் அறையவே, ராவணன் மிகுந்த துன்பப்பட்டு பரமசிவனால் தனக்கு முன்னால் கொடுக்கப்பட்டிருந்த சந்திர ஹாஸமென்ற கத்தியால் அவனுடைய இறக்கைகளை வெட்டினான். உடனே ஜடாயு கீழேவிழக்கண்ட சீதை தனக்கு உபகாரஞ்செய்ய வந்தவனுக்கு இக்கதியாயிற்றே என்று கதறியழுதாள். ராவணன் அவளைத் தூக்கிக்கொண்டு ஆகாயமார்க்கமாய்ச் செல்லும்போது வழியில் ஒரு பர்வதத்தில் ஐந்து வானரர்கள் இருப்பதைக் கண்ட சீதை, இராம லக்ஷ்மணர்கள் ஒருசமயம் அவ்வழியாக வந்தால் தான் அவ்வழியாகப் போனதைத் தெரிந்துகொள்வதற்காகத் தன்னிடமிருந்த சில ஆபரணங்களைக் கழற்றித் தன் புடவை யின் மேல்பாகமான உத்தரீயத்தைக் கிழித்து அதில் முடிந்து, ராவணனுக்குத் தெரியாமல் அந்த வானரர்கள் மத்தியில் அதைப் போட்டுக் கதறிக்கொண்டே போனாள். அவள் தன்னை மறந்து பிரமித்திருக்கும்போது ராவணன் மகேந்திரமென்ற மலையை நெருங்கினான். அங்கிருந்த ஜடாயுவின் தமையனான சம்பாதியின் பிள்ளையான ஸுபார்ச்வன் கருத்தரூபமுடைய ராவணன் வரு கையைக் கண்டு அவனைக்கொண்டுபோனால் தன் பிதாவுக்கு ஒரு வேளை சாப்பாட்டுக்காகும் என்றெண்ணி அவனைப் பிடிக்க நெருங் கிவரக்கண்ட ராவணன், 'இப்பொழுதுதான் நான் ஒரு கிழக்கழு கினால் மிகுந்த கஷ்டமடைந்தேன். மறுபடியும் பாலியமான மற் றொன்று வந்து எதிர்க்கிறது. இச்சமயம் நமது மனோரதம் பூர்த் தியாவதற்காக நாம் காலத்தை யனுசரித்து, எல்லா ஜாதிக்கும் பொதுவான சரணாகதிதர்மப்படி இதைச் சரணாகதியடைந்து தான் தப்பிப் போகவேண்டும்' என்றெண்ணி அவனைப்பார்த்து,

"நான் இப்பொழுது ஒரு வஸ்துவைக் கொண்டுபோகிறபடியால் நீ என்னை விட்டுவிடு" என்றுகேட்டுக்கொண்டு போய்விட்டான். இவ்விஷயத்தை ஸுபார்ச்சுவன் தன் பிதாவிடம் சொல்ல, தன் பிள்ளை ஒரு சரணாகதனை ரக்ஷித்ததற்காக அவன் மிகுந்த சந்தோஷமடைந்தான். பிறகு ராவணன் சீதையைத் தன் பட்டணத்திற்குக் கொண்டுபோய் அவ்விடத்திலுள்ள சகல வைபவங்களையும் அவளுக்குக் காட்ட, அவள் அவைகளைப் பொருட்படுத்தாமல் அவனைத் திரஸ்கரித்தாள். ஆகையால் அவன் சீதையைக் கொண்டுபோய் அசோக வனத்தில் விட்டு, ஏகாக்ஷி முதலிய ராக்ஷசிகளை அவளுக்குக் காவல்வைத்துத் தன்னைத்தவிர வேறு எந்த ஆடவனையும் அவ்விடம் விடக்கூடாது என்றாக்ஞாபித்துச் சென்றான்.

இதுநிற்க, காட்டில் தன்னைத் தேடிவந்த லக்ஷ்மணனைக் கண்ட ராமன், "என்ன, லக்ஷ்மணா! நீ சீதையைத் தனியாக விட்டு வந்துவிட்டாயே! இதுதான் காவலிருக்கும் அழகா? அவளுக்கு இதற்குள் எவ்வித ஆபத்து வந்துவிட்டதோ!" என்று சொல்லிக்கலங்க, "அண்ணா, நானாக வரவில்லை. ஆனால் சீதை என்னைத் தூஷித்து நான் கட்டாயம் போகவேண்டுமென்று சொன்னதால்தான் நான் வந்தேன்" என்றுரைத்தான். அப்பொழுது ராமன், "உனக்கென்ன, ஒரு வார்த்தையில் காரணத்தைச் சொல்லிவிட்டாய். நானல்லவோ பத்தினியையிழந்து வருத்தப்படவேண்டும். சீதை ஆசிரமத்திலிருப்பாளென்று நான் நினைக்கவில்லை. அவளுக்கு ஆபத்துவந்திருப்பது நிச்சயம். எதற்கும் போய்ப் பார்ப்போம் வா," என்று சொல்லிக்கொண்டு பர்ணசாலையில் வந்து சீதே, சீதே என்று கூவிப் பலவிடங்களில் தேடிப்பார்த்துக் காணாததால், பக்ஷி மிருகஜாதிகளைக்கண்டு கதறினர். அவர் துக்கிப்பதைக்கண்ட மான்கூட்டங்கள் தெற்கு நோக்கி துக்கித்தன. அதனால் அவள் தெற்கு முகமாய்ச் சென்றிருப்பாளென ஊகித்து, ராமன் தெற்கு திசையில் செல்லும்போது வழியில் ராக்ஷசனின் பாதச்சுவட்டைக் கண்டு, கோபத்தை வரவழைத்துக்கொண்டு, "சீதையைக் கொண்டுபோனவன் யாரானாலும்சரி, அவளைக்கொண்டுவந்து விடாவிட்டால் இந்த உலக முழுவதையும் சம்ஹாரம் செய்வேன்" என்று சொல்லி, வில்லை நாணேற்றி அஸ்திரத்தைப் பூட்டினதும் லக்ஷ்மணன், "அண்ணா, ஒருவன் குற்றம் செய்தால் ஊரை அழிக்கலாமா! தாங்கள் பொறுமையுடையவரல்லவா! இவ்வி

தம் கோபங்கொள்ளவேண்டாம். இதோ தேரின் சக்கரச்சுவடு தெரிகிறது. அதைக்கவனித்துச் சென்றால் நாம் சீக்கிரம் சீதையைக்காணலாம் என்று எண்ணுகிறேன்'' என்று சொன்னான். ராமன் அதை அங்கீகரித்துத் தேர்போன வழியைக் கவனித்துச் சென்றபோது வழியில் சிறந்ததொரு ரதம் உடைந்திருப்பதையும் நான்கு குதிரைகள் கொல்லப்பட்டிருப்பதையுங்கண்டு, "லக்ஷ்மணா, சீதையின் பொருட்டு யாரோ இருவர் யுத்தம் செய்திருப்பதாய்த் தெரிகிறது. ஒருவன் பூமியிலிருந்தும் மற்றொருவன் ஆகாயத்திலிருந்தும் சண்டை செய்திருக்கிறார்கள்'' என்றுசொல்லிக் கொண்டேகொஞ்சதூரம் செல்ல அங்கொரு கழுகைக்கண்டு, "லக்ஷ்மணா, வில்லைக்கொண்டுவா. எவனோ சீதையை விழுங்கிவிட்டு கழுகு ரூபத்துடன் இங்கு படுத்துக்கொண்டு தூங்குவதாகத் தெரிகிறது. இவனை இப்பொழுதே அடிக்கிறேன்'' என்றார். அதைக்கேட்ட ஜடாயு, "ஏ, ராமா! நான் ராக்ஷசனல்ல. நான் ஜடாயு. ராவணன் சீதையை எடுத்துக்கொண்டு போனான். நான் அவனுடன் யுத்தம் செய்ய அவன் என்னை அடித்துவிட்டான். ஆனால் அவன் தெற்கே போனதாலும், அவன் சீதையை எடுத்த வேளை விபரீத வேளையாதலாலும், அவன் அவளையடைய முடியாது'' என்றுசொல்லி ஆயாசத்தால் கண்களை மூடிக்கொள்ள, ராமன், "விஷயங்களை விவரமாகச் சொல்லும்'' என்று கேட்டுக்கொண்டிருக்கும்போது ஜடாயு உயிர் துறந்தது. உடனே ராமன் லக்ஷ்மணனைக்கொண்டு சிதையை அடுக்கச்செய்து அவருக்கு அக்கினிப் பிரதானமான கர்மாவைச் செய்து முடித்துத் தன் சத்தியத்தால் அவருக்கு உத்தமலோகமளித்து (அவரவர்கள் தங்கள் தங்களுக்குரிய சத்தியத்தில், தர்மத்தில், தபசில் இருந்தால் யாருக்கும் எப்பதவியையும் கொடுக்க முடியும் என்ற விஷயத்தை சித்தாந்த புத்தகத்தில் அறியலாம்), பிதுர் தேவதையைத் திருப்தி செய்விப்பதற்காக அநேக மிருகங்களைக் கொன்று பக்ஷிகளுக்குச் சாப்பாடுபோட்டு, அவ்வனத்தை விட்டு லக்ஷ்மணனுடன் மதங்க வனத்தை யடைந்தார்.

அவர்கள் அவ்வனத்தில் போய்க்கொண்டிருக்கும் போது அயோமுகி என்ற ஒரு ராக்ஷசி காமத்தால் லக்ஷ்மணனைத் தூக்கிக் கொண்டு ஓட, அவளது காது, மூக்கு, ஸ்தனங்கள் அறுக்கப்பட்டு லக்ஷ்மணனை விட்டுவிட்டு ஓடிப்போனாள். இன்னும் சற்று தூரம் சென்றதும் லக்ஷ்மணன் ஒரு பூதத்தைக்கண்டு பயந்து, "அண்ணா எனக்கு பயமாயிருக்கிறது. நீர் என்னை இந்த பூதத்திற்குப் பலி

யாக கொடுத்துவிட்டு ஓடினுல்தான் பிழைக்கலாம். பிறகு நீர் ஊரில் அரசனுகவிருக்கும்போது என்னைப்பற்றி நினைத்தால் நான் மோக்ஷத்தையடைவேன். இந்த வரத்தைத் தாங்கள் எனக்குத் தரவேண்டும்'' என்று சொல்ல ராமன், ''என்ன விஷயம் அப்பா, லக்ஷ்மணு! நீ ஏன் இவ்விதம் சொல்லுகிறுய்?'' என்றுகேட்க, லக்ஷ்மணன் அந்த பூதத்தைக் காண்பித்தான். கபந்தனென்ற அப்பூதத்தைப் பார்த்து ராமன் லக்ஷ்மணனுக்குச் சமாதானம் சொல்லிக்கொண்டிருக்கையில் ஒரு யோசனை நீளமுள்ள கைகளையுடைய கபந்தன் அவர்களைத் தன்னிடம் இழுத்துக்கொண்டு, ''நான் உங்களைச் சாப்பிடுவதற்குள் உங்கள் விருத்தாந்தத்தைச் சொல்லுங்கள்'' என்று கேட்டது. அப்பொழுது ராமன் லக்ஷ்மணனைப் பார்த்து, ''சகலமும் காலத்திற்குத்தகுந்தபடிதான் நடக்கும். எல்லாம் தெய்வச்செயல்'' என்று சொல்லி தைரியமாக இருக்கையில், லக்ஷ்மணன் ''அவன் கைகளை வெட்டி விடலாம்'' என்று யோசனை சொல்ல, அதன்படியே ராமன் அவனது வலது கரத்தையும், லக்ஷ்மணன் இடது கரத்தையும் சேதித்தனர். உடனே அக்கபந்தன் ராகவாதிகளைப்பார்த்து, ''நான் முன் பிறவியில் ஒரு கந்தர்வனுயிருந்தேன். பிறகு நான் ஸ்தூல சிரஸ் என்ற ரிஷியின் சாபப்படி ராக்ஷசனுயிருக்கும்போது, எனக்கும், இந்திரனுக்கும் யுத்தம் நடந்தது. அதில் இந்திரன் தன் வஜ்ராயுதத்தால் என் தலையில் அடித்ததால், என் தலை உள்ளே போய்விட்டது. அப்பொழுது எனக்கு இறப்பில்லாதிருந்தாலும், தலை உள்ளே போய்விட்டதாலும், நான் சாப்பிடுவதற்கனுகூலமாக இந்திரன் என் கைகளை நீட்டிவிட்டான். இப்பொழுது உம்மால் எனக்குச் சாபவிமோசனமாயிற்று. தாங்கள் எனக்கு அக்கினிப்பிரதானமான கர்மத்தைச் செய்தால், நான் எனது சுய ரூபத்தை யடைவேன். தாங்கள் தங்கள் பத்தினியான சீதையை யடையும் உபாயத்தையும் சொல்லுவேன். இந்த சரீரத்தோடு உபாயம் சொல்லத் தெரியாது'' என்று சொல்ல, அவன் விருப்பப்படியே ராமன் அவனுக்குக் கர்மத்தைச் செய்து முடித்தான். உடனே அவன் தேகத்திலிருந்து ஒரு தேவதா ரூபம் வெளிப்பட்டு, அப்பொழுது ஆகாயத்தில்வந்த விமானத்தில் ஏறிக்கொண்டு, ராகவனைப்பாரத்து, ''நான் சொல்வதைக்கேளும். பம்பாஸரஸ்கரையிலுள்ள ரிஷ்யமூகத்தில் தமையனை வாலியால் துரத்தப்பட்ட சுக்ரீவன் என்ற வானரன் தன் நான்கு மந்திரிகளுடன் வசிக்கிறுன். அவன் எக்காரியத்திலும் மிகவும் சமர்த்தன். அளவிலா பலமுடையவன். நீர் அங்கு

சென்று, துரோகம் உண்டாகாமலிருப்பதற்காக அவனுடன் அக்கினிசாக்ஷியாக சிநேகஞ் செய்துகொள்ளும். மேலும் நீரோ சூரிய வமிசத்தைச் சேர்ந்தவர். அவன் சாக்ஷாத் சூரியனுடைய பிள்ளையாதலால் நீர் அவனிடம் சிநேகங்கொள்ளலாம். அது தான் தற்சமயம் செய்யத்தக்கது" என்று தெரிவித்து தேவலோக மடைந்தது. பிறகு ராம லக்ஷ்மணர்கள் சற்றுதூரம் சென்ற பொழுது, சபரி என்பவள் அவர்கள் வரவை யறிந்து, தான் எச்சில் செய்யாமல் சேர்த்து வைத்திருந்த பலவித பழங்களை அவர்களுக்குக் கொடுத்து உபசரித்து, அவ்வனத்தின் பல விசித்திரங்களை அவர்களுக்குக் காட்டி, ராம சந்நிதானத்தில் அக்கினிப்பிரவேசம் செய்து தேவதா ரூபமடைந்து தேவலோகமடைந்தாள். அதன்பின் அவர்கள் அவ்விடத்தை விட்டுப் பம்பாஸரஸை யடைந்தனர். அங்கு பக்ஷிகளும், மிருகங்களும், மற்ற ஜலசரங்களும் தங்கள் தங்கள் பத்தினியுடனிருப்பதைக் கண்ட ராகவன் தன் பத்தினியைப் பிரிந்திருப்பதை யெண்ணி மிகவும் வருத்தப்பட்டுக்கொண்டு அங்கே தங்கியிருந்தார்.

o

---

ஓம்.

ஸ்ரீராமஜெயம்.

# கிஷ்கிந்தாகாண்டம்.

இவ்விதம் பம்பாஸரஸுக் கரையில் துக்கப்பட்டுக்கொண்டிருந்த ராமனை லக்ஷ்மணன் சமாதானம்செய்து ரிஷ்யமுகத்திற்கழைத்துப்போக, அவர்கள் வருவதைத் தூரத்திலிருந்து கண்ட சுக்ரீவன், அவர்கள் வாலியால் ஏவப்பட்டுத் தன்னைக் கொல்ல வருகிறார்களோ வெனப் பயந்து மரத்திற்கு மரம் தாவியோடினான். அப்பொழுது அவன் மந்திரியான ஆஞ்சநேயன், "இது மலையபர்வதம். இங்கு இருக்கும்போது வாலிக்கு நாம் பயப்படவேண்டியதில்லை" என்று சொல்ல, சுக்ரீவன், "நான் இவர்கள் ரூபத்தைக் கண்டு பயந்தேன். நீர் இங்கிருந்து சென்று அவர்கள் நோக்கத்தையறிந்து, அவர்கள் நமக்கு இஷ்டர்களானால் அவர்களிடம் எனக்கு எதிர்முகமாயிருந்து பேசும். நானந்த சைகையை அறிந்துகொள்கிறேன்" என்று சொல்லி அவனை ராமனிடம் அனுப்பினான். ஆஞ்சநேயன் சந்நியாசி வேடம்பூண்டு அவர்களிடம் சென்று, "நீங்கள் யார்? தேவலோகத்திலிருந்து வந்தவர்களா? உத்தமசுகத்திற் கிருப்பிடமாய்க் காணப்படும் நீங்கள் துக்கத்துடனிருப்பதற்குக் காரணம் என்ன? நீங்கள் மூலைக்கு மூலை மரத்திற்கு மரம் பார்ப்பதைப் பார்த்தால், ஏதோ ஒரு பொருளையிழந்து தேடுவதுபோல் காண்கிறதே" என்று சொல்லி மேலும் தன் புத்திசாலித்தனத்தால் அவர்களை யோக்கியர்களாகக் கண்டு, அவர்களிடம் தன்னைப்பற்றியும் சுக்ரீவனைப் பற்றியும் சொல்லலாம் என நினைத்து, "இந்தக் காட்டில் வந்து எங்களைப்பற்றி விசாரிக்கிற நீங்கள் யார் என்று கேட்பீரேயாகில், நான் இங்கு வசிக்கும் சுக்ரீவனென்ற அரசனுக்கு மந்திரி. அவர் வானர அரசன். அவருடைய தமையனான வாலியென்ற பாபி அவருடைய ராஜ்யத்தையும், பத்தினியையும் அபகரித்துக்கொண்டதால் அவர் மிகுந்த துக்கப்பட்டுக்கொண்டிருக்கிறார். அவர் உமது சிநேகத்தை இச்சிக்கிறார்" என்று சொன்னான். அதைக்கேட்ட ராமன் லக்ஷ்மணனைப் பார்த்து, "லக்ஷ்மணா! நாம் யாரை நாடிப் போகிறோமோ அவரது மந்திரியே இங்கு வந்திருக்கிறார்.

இவர் வேதங்களை யறிந்தவர். இவர் சொல்லும் விஷயத்தில் யாதொரு குற்றமுமில்லை. இவர் பேசுங்காலத்தில் முகத்தில் யாதொரு விகாரமும் காணப்படவில்லை. ஆதலால் இவரிடம் நமது சகல விருத்தாந்தத்தையும் சொல்லி இப்பொழுது எனக்குள்ள மனோபாவத்தையும் சொல்லலாம்" என்றுரைக்க லக்ஷ்மணனும் சகல விஷயங்களையும் தெரிவித்து "நானும் என் தமையனான ராகவனும் இப்பொழுது சுக்ரீவனைச் சரணாகதி செய்கிறோம். சகல தானங்களைச்செய்து, சிறந்த கீர்த்தியுடன் விளங்கும் லோகநாதனான என் தமையனார் சுக்ரீவனைத் தனக்கு நாதனாக இச்சிக்கிறார். எவருடைய பிதா எல்லோராலும் சேவிக்கப் பட்டாரோ அவருடைய பிள்ளையான இவர் சுக்ரீவனைச்சரணமடைகிறார். சகல லோகங்களுக்கும் தர்மாத்மாவாயும், சகலராலும் சேவிக்கப்பட்டவராயும், எனக்கு குருவாயும், ரகுவம்சத்தில் பிறந்தவராயுமுள்ள இவரை நான் ஏற்கனவே சரணமடைந்திருக்கிறேன். அவரே இப்பொழுது சுக்ரீவனைச் சரணமடைகிறார். ராமன் சோகத்தால் பீடிக்கப்பட்டு சுக்ரீவனைச் சரணமடைகிறார். (ராமன் சரணாகதி செய்தார் என்பதைச் சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்). சுக்ரீவன் அவரை யேற்றுக்கொள்ளத் தகுந்தவன். எவருடைய அனுக்கிரகத்தைச் சகல பிரஜைகளும் எதிர்பார்க்கின்றனரோ அவரே வானர அரசனான சுக்ரீவன் பிரசாதத்தை எதிர்பார்க்கிறார்". என்று சொன்னான். உடனே ஹனுமான், "நான் சிநேகம் செய்துவைக்கிறேன்" என்று சொல்லி அவர்களிருவரையும் தன்தோளில் தூக்கிக்கொண்டு சுக்ரீவனிடம்சென்று, "இவர்களிருவரும் உம்மைச் சரணாகதி செய்திருக்கிறார்கள். இவர்கள் சரணாகதி செய்ததால் நீங்கள் கர்வப்படக் கூடாது. இவர்களுடன் சிநேகம் செய்துகொள்ளும்" என்று சொல்ல, சுக்ரீவன் அற்புதமான மானுஷரூப மெடுத்துக்கொண்டு ராமனிடம் சென்று, "வானரனான என்னுடன் சிநேகம் செய்துகொள்ள வேண்டுமென்ற எண்ணம் உமக்கிருந்தால், என்கையில் உமது கையால் தட்டும்" என்று சொல்ல, அவரும் அவ்விதமே செய்தார். ஹனுமான் அக்னியைக் கொண்டுவந்து வைக்க இருவரும் அக்னி சாக்ஷியாய்க் கைபிடித்துக்கொண்டார்கள். அப்பொழுது ராமன் சுக்ரீவனைப் பார்த்து, "உன் பத்தினியை அபகரித்த வாலியை நான் அழிக்கிறேன்" எனச் சபதம் செய்தார். (இவர் இப்படிச் சபதம் செய்ததால், வாலிக்கு நேர்முகமாகச் சென்றால், ஒருசமயம் அவன் சரணமடைந்தால், அவனை ரக்ஷிக்கவேண்டி

யிருக்கும். ரக்ஷித்தால் சபதம் பொய்யாகும் என்றெண்ணி அவனை மறைந்தடித்தார் என்று சிலர் சொல்லுகிறார்கள். அது பொய்யென்று வால்மீகி கீழ்க்காணும் காரணங்களால் நிரூபிக்கிறார்.

1. வாலி சரணாகதி செய்தால், அவனை ரக்ஷிக்கவேண்டியிருக்கும். அப்படி ரக்ஷிப்பது கூடாதென்று எண்ணினால் அவருக்கு சரணாகதரக்ஷகன் என்றபெயர் எவ்விதம் பொருந்தமாகும்.

2. ராமன் வாலிக்குப் பதில் சொல்லும்போது 'என்னைப் போன்ற சத்திய சந்தர்கள் ஒரு பிரதிக்ஞை செய்தால் அதை எப்படி மீறமுடியும்' என்று சொல்வதால், வாலி சரணமடைந்தாலும் அவனை அவர் காப்பாற்ற மாட்டாரென்பது நிச்சயமாய்த் தெரிகிறது.

3. சத்தியத்திலிருந்து தர்மம் உண்டாயிருப்பதால், அவர் சத்தியத்தை (பிரதிக்ஞையை) மீறமாட்டார்.

4. வாலி ராமனிடத்தில், தான் அவரிடம் வதத்தை உத்தேசித்துத் தான் தன் பத்தினி தாரை தடுத்தும் கேளாமல் அவரிடம் சண்டைக்கு வந்ததாகச் சொன்னான். அப்படிப்பட்ட எண்ணமுள்ளவன் ராமனிடம் சரண்புகுவானா?

5. வாலி சண்டைக்குப் புறப்படும்போது தாரையிடம், 'பகைவன் சண்டைக்கு வந்து வாயிலில் கர்ஜிக்கும்போது சூரனாயுள்ள ஒருவன் தைரியமாய் அவனையெதிர்த்து சண்டைசெய்து மடிந்தாலும் மடிவானே தவிற, அவன் காலில் விழுந்து பணியமாட்டான்' என்று சொல்வதால் அவன் சரணமடையமாட்டானென்பது திண்ணம்.

6. ராமன் சுக்ரீவனிடம், "சுக்ரீவா, நீ போய் வாலியைச் சண்டைக்குக் கூப்பிடு. மானியாயும் சூரனாயுமுள்ள ஒருவன் எதிரியின் அட்டகாசத்தைச் சகிக்காமல் சண்டைக்கு வருவானேயொழிய சரணமடையமாட்டான்" என்பதால் "வாலி சரணாகதியடைவான்" என்றெண்ணி அதைத் தடுப்பதற்காக ராமன் மறைந்து யுத்தம் செய்தார் என்பது எவ்விதம் பொருந்தும்?

7. வாலி ராவணனைக் கட்டினான். ஆதலால் வாலி ராவணனைவிட பலிஷ்டன் என்பர் பலர். இதுநிற்க பல சமயங்களில் "என் தம்பிகள் மேல் பிரமாணமாய் ராவணனை அழிக்காமல்

அயோத்திக்குத் திரும்பமாட்டேன்" என்று சொன்ன ராமன், விபீஷண சரணாகதிக் கட்டத்தில், 'ராவணனே சரணாகதிக்கு வந்தாலும் ரக்ஷிப்பேன்' என்றார். இதுவிஷயமாய் வியாக்யான கர்த்தர்கள், "ராவணன் சரண்புக மாட்டான் என்று ராமனுக்குத் தெரியும். அதனால்தான் அவ்விதம் முன்பின் முரணாகச் சொன்னார்" என்கிறார். இதன் உண்மையைச் சற்று நிதானமாகக் கவனிப்போம். ராவணனே சரணாகதிக்கு வரமாட்டானென்றால், அவனைவிட அதிக பலமுள்ளவனாகக் கருதப்படும் வாலி சரணாகதிக்கு வருவானா? இது முன்பின் முரணாகத் தோன்றவில்லையா? என்கிறார் வால்மீகி.

8. வாலிக்கும், அவனது மாலைக்கும் விரோதியின் முழு பலத்தையோ, பாதி பலத்தையோ கிரகிக்கும் சக்தி உண்டென்று சொல்வது உண்மையானால், இப்படிப்பட்ட அபூர்வ சக்தியுள்ள வாலி சரணமடைவானா? ராமனைப் பரமாத்மா வென்றறிந்து சரணமடையக் கூடாதோவெனில், வாலி ராமனால் அடிபட்டதும் அவரைப் பாபியென்று பலவிதமாய்த் தூஷித்தான். பிராணன் போகும்போதுகூட அவரிடம் கெட்ட எண்ணம்கொண்டிருந்தான். அப்படியிருந்தவனுக்கு 'ராமன் பரமாத்மா' என்ற அறிவு எப்படித் தோன்றும்?

9. வாலி ராமனிடம் அடிபட்டு, சித்தமிழந்து புலம்பிப் பலவிதமாய் ராமனைத் தூஷித்தபோது, 'நீ எதிரிலிருந்தால் நான் உன்னைக் கொன்றிருப்பேன்' என்றான். இந்த எண்ணமுள்ள வாலி ராமனைச் சரணமடைவானா?

10. தேவதுரோகி, பிதுர்துரோகி, சகோதரதுரோகி, பெரியோர்களுக்கு துரோகி, காலில் விழுபவனைக் கொல்லும் பாபி, தன் பலத்தால் கர்வமடைந்தவன், துக்கத்தால் பீடிக்கப்படாதவன், சத்துருபயமில்லாதவன், யுத்தவெறிபிடித்தவன் முதலியவர்கள் எப்பொழுதும் சரணாகதி யடையமாட்டார்களென்கிறார் வால்மீகி.

மேலும் வாலி குற்றவாளியாதலாலும், குற்றவாளியைத் தண்டிக்காத பாபத்தை அரசன் அடையவேண்டு மாதலாலும், அவனை யழிப்பதாய்ப் பிரதிக்ஞை செய்திருப்பதால், அப்பிரதிக்ஞை மீறினால் நரகமடையவேண்டு மாதலாலும் ராமன் வாலியை

அழிக்காமல் விடமாட்டார் என்று வால்மீகி உறுதியாகச் சொல்லுகிறார். சித்தாந்த புத்தகத்தைப் பார்க்கவும்). சுக்ரீவன், "உமது பத்தினியை நான் தேடிக்கொடுக்கிறேன்" எனச் சபதம் செய்தான். ராகவன் "இனி உனது சுகதுக்கம் என்னுடையது" என்று சொல்ல, சுக்ரீவனும் அவ்விதமே சொன்னான். இவ்விதம் இருவரும் சிநேகம் செய்துகொண்டபோது சீதையின் இடது கண்ணும், வாலியின் இடது கண்ணும், ராவணனது இடதுகண்களும் துடித்தன. இது சீதைக்கு மங்களத்தையும், வாலிக்கும், ராவணனுக்கும் மரணத்தையும் சூசகம் செய்தன.

இவ்விதம் இருவரும் சிநேகம் செய்துகொண்ட வுடனே சுக்ரீவன் ஸாலமரத்தின் கிளையொன்றை ஒடித்து ராகவனுக்கு ஆசனங்கொடுக்க, ஹனுமான் பூத்ததான ஒரு சந்தனமரக்கிளையை ஒடித்து லக்ஷ்மணனுக்கு ஆசனம் கொடுத்தான். (லக்ஷ்மணன் இதைப் பெற்றுக்கொண்டதற்கு ஆதாரம் ஒன்றுமில்லை). பிறகு ராகவன் சீதையை நினைத்து துக்கத்துடன், "சுக்ரீவா, நீ சீதையைக் கண்டாயா? ராவணன் அவளைத் தூக்கிக்கொண்டு இவ்வழியாகச் சென்றானோ? உமக்குத் தெரிந்தால் அவனிருப்பிடத்தைச் சொல்லும். இப்பொழுதே அவனை யமலோகமனுப்புகிறேன்" என்று சொல்ல, சுக்ரீவன், "ராகவா, அவனிருப்பிடம் எனக்குத் தெரியாது. அவனது பலம், குலம் முதலிய விஷயங்களையும் நான் அறிந்ததில்லை. தாங்கள் சீதைக்காக வருந்தவேண்டாம். அவள் பாதாளத்திலிருந்தாலும், வேறு எங்கேயிருந்தாலும் நான் அவளைக் கொண்டுவருகிறேன். காமஜாதியில் பிறந்த நானே துக்கத்தைச் சகித்துக்கொண்டிருக்கையில், மனுஷ்ய ஜாதியிற்பிறந்த தாங்கள் இவ்விதம் துக்கப்படலாமா? ஆதலால் துக்கத்தை விட்டு விடுங்கள்" என்றுசொல்லிப் பின் சிறிதுநேரங்கழித்து, "சிலநாட்களுக்குமுன் யாரோ ஒருவன் இவ்வழியாய் ஒரு பெண்ணைக் கொண்டுபோனான். அப்பொழுது அப்பெண், "ராமா, லக்ஷ்மணா" என்று கத்திக்கொண்டேபோனாள். நீங்கள் ராமலக்ஷ்மணர்களாதலால், அனுமானத்தால் அவள்தான் சீதையென்றெண்ணுகிறேன். அப்பெண் இந்த மலையில் நின்றுகொண்டிருந்த எங்கள் ஐவர் மத்தியில் ஒரு ஆபரணமுடிச்சைப் போட்டாள். நாங்கள் அதைப் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறோம்" என்றுசொல்லி அதைக் கொண்டுவந்து அவரிடம் கொடுத்தான். ராமன் அதை ஆவலோடு வாங்கி அவிழ்த்துப் பார்த்தபொழுது அந்த ஆபரணங்கள்

ஸீதையுடையவை எனவறிந்து, துக்கத்துடன் "லக்ஷ்மணா, இவற்றைப் பார்த்தாயா?" என்றுகேட்க, லக்ஷ்மணன், "இந்தக் கேயூராதி ஆபரணங்கள் ஒன்றும் எனக்குத் தெரியாது. நான் நாள்தோறும் ஸீதையை நமஸ்கரிப்பதால், எப்பொழுதும் அவள் பாதங்களிலுள்ள இந்தப் பாதசரம் மட்டும் அவளுடையதெனத் தெரியும்" என்று சொல்ல, ராமன் பின்னும் ஸீதையை நினைத்துத் துக்கப்பட்டுக்கொண்டே யிருக்க, சுக்ரீவன் அவரைத் தேற்றினான். பின் சுக்ரீவன் தன் பத்தினியைப்பற்றி நினைத்து துக்கிக்க, ராமன் அவனைத்தேற்றி, "நீர் கவலைப்படவேண்டாம். உம்து சத்ருவும், பிராதாவுமான வாலியை நான் பாணங்களால் அடிக்கிறேன். உமக்கும் வாலிக்கும் விரோதம் வரக் காரணம் என்ன? சொல்லும்" என்று கேட்க, சுக்ரீவன் முதலில் பிறந்த கதையைச்சொல்லிப் பின் விரோதம் வரக் காரணத்தைச் சொன்னான். அக்கதையைப் பின்வருமாறு சொன்னான்.

ஒரு சமயம் பிரம்மதேவர் யோகத்திலிருக்கும்போது, அவருடைய கண்களிலிருந்து கண்ணீர்வடிய, அதைக் கையிலெடுத்துச் சற்று தியானித்து கீழே விடவே, அது ரிஷரஜஸ் என்ற வானரமாய் ஜனித்து (புத்திரஜனனம் ஸ்திரீ புருஷ சம்பந்தமில்லாமலே பாயசத்தாலும், கண்ணீராலும், வாக்கியத்தாலும், ஸ்பரிசத்தாலும், கொட்டாவியினாலும், தபசாலும், மந்திரத்தாலும், மனதினாலும், பூமியிலிருந்தும், கும்பத்திலிருந்தும், சமுத்திரத்திலிருந்தும் உண்டாகலாம் என்ற விஷயத்தைச் சித்தாந்த புத்தகத்தில் காணவும்). பிரம்மதேவர் அவனிடம், "நீ பகல் காலங்களில் வெளியே சஞ்சரித்துவிட்டு இராக்காலங்களில் இங்குவந்து சேரவேண்டும்" என்று சொல்ல அவனும் அவ்விதமே செய்து கொண்டிருந்தபொழுது ஒருநாள் ஆகாரத்தைச் சாப்பிட்டுவிட்டு தீர்த்தத்திற்காக ஒரு குளத்திற்குச் சென்றான். அந்நீரில் தெரிந்த தன் நிழலைக்கண்டு தன் ஜாதிக்கு இயற்கையான வானரபுத்தியைக்கொண்டு அந்தக் குளத்தில் பிரவேசித்தான். (ஜாதிசுபாவமான புத்தி சில சமயங்களில் யாருக்கும் வருமென்பது கவியின் அபிப்பிராயம்). உடனே வானரரூபம் மாறி, அவனுக்கு மானிடப்பெண் ரூபம் வந்தது. (அப்பெண்ணுக்கு வாலில்லை). அச்சமயம் ஆகாயத்தில் இந்திரனும், சூரியனும் சென்றுகொண்டிருந்தனர். இந்திரன் அப்பெண்ணை முதலில் கண்டு 'இவள் இப்பொழுது உண்டானவளாதலால், நான் இவளையடைந்து பிரம்மாவின்

ஆக்ஞையால் ஒரு வானரத்தை 'உண்டுபண்ணுவேன்' என நினைத்து அவளிடம் நெருங்கியபோது அவனுடைய வீரியம் அவளது தலையில் விழுந்தது. தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும் வீரியப்பிரதானமே தவிற, ஸ்தானப்பிரதான மில்லையாதலால் உடனே அவள் தலையிலிருந்த வீரியத்திலிருந்து ஒரு வானரம் வெளிவந்தது. தலைமயிருக்கு வாலம் என்று பெயராதலால் இந்திரன் அக்குழந்தைக்கு வாலியெனப் பெயரிட்டான்.

பிறகு சூரியன் அப்பெண்ணைக் கண்டு, இந்திரன் அப்பெண்ணை யடையாததால், தான் அடையலாமென அவளிடம் சென்றபொழுது, அவளை யடைவதற்குள் அவனது வீரியம் அவளது (க்ரீவமான) கழுத்தில் விழுந்தது. உடனே அவ்விடத்திலிருந்து ஒரு வானரம் பிறக்க, அதற்கு அவன் சுக்ரீவன் எனப் பெயரிட்டான். சுக்ரீவனுக்கிருந்த பிரம்ம தேஜஸையும், வாலிக்கு இருந்த க்ஷத்திரிய தேஜஸையும் கண்ட இந்திரன் வாலிக்கு சுக்ரீவனால் ஆபத்துண்டாகலாமெனப் பயந்து, தன் கழுத்திலிருந்த சிறந்ததொரு மாலையை வாலி கழுத்தில் போட்டுச்சென்றான். அந்த மாலை அழிவில்லாதது. மார்பில் தரித்தால் பிராணன், தேஜஸ், ராஜ்யலக்ஷ்மி இவைகளை ரக்ஷிக்கும் தன்மையுடையது. (எதிராளியின் பாதி பலத்தையோ, முழு பலத்தையோ கிரகிக்கும் வரம் வாலிக்கும் கிடையாது. அவனுக்குப் போடப்பட்ட மாலைக்கும் கிடையாது. இவ்விஷயத்தை தர்மஸ்தாபனமான வாலிவத சித்தாந்த புத்தகத்தில் பார்த்துக்கொள்ளலாம்). 'இருகுழந்தைகளும் ஒற்றுமையாயிருக்கட்டுமென் றெண்ணமல், சுக்ரீவன் வாலியைக் கொன்றுவிடுவானோவெனப் பயந்து இந்திரன் வாலிக்கு மாலை போட்டதால், இனி இவர்கள் ஒற்றுமையாயிருக்க மாட்டார்கள். ஆதலால் சுக்ரீவனைக்காக்க நாமும் தக்க ஏற்பாடு செய்ய வேண்டும்' என எண்ணி சூரியன் தன்னிடம் நவவியாகர்ணபாடம் வாசித்துவந்த ஹனுமானிடம், "நீ எனக்கு சிஷ்யனாதலாலும், நீ சிரஞ்சீவி யாதலாலும், எப்பொழுதும் என் பிள்ளையைக் காப்பாற்றவேண்டும்" என்று அவனிடம் சுக்ரீவனை ஒப்புவித்தான். பிறகு அவர்களிருவரும் சென்றுவிட்டனர். பெண்ரூபத்திலிருந்த ரிஷரஜஸ் தன்னுடைய இரண்டு குட்டிகளோடும் இராக்காலத்தை அக்குளக்கரையிலேயே கழித்து, விடிந்து எழுந்ததும் பழைய ரூபம் உண்டாயிற்று. உடனே அவன் குட்டிகளுடன் பிரம்மதேவனிடம் செல்ல, அவர் ஒரு தூதனைக் கூப்பிட்டு,

"குட்டிகளுடன் இந்த வானரத்தை அழைத்துக்கொண்டுபோய் பூலோகத்தில் சிருஷ்டிக்கப்பட்டிருக்கும் கிஷ்கிந்தா பட்டணத்திற்குச் சென்று அங்கு இவனைச் சகல வானரங்களுக்கும் எஜமானனைகப் பட்டாபிஷேகம் செய்துவா" என்று சொல்ல அவனும் அவ்விதமே செய்து, தேவலோகஞ் சென்றான். கொஞ்சகாலம் ரிஷரஜஸ் அதைப் பரிபாலனம் செய்து, பின் மூத்தவனை வாலிக்குப் பட்டாபிஷேகம் செய்து, சுக்ரீவனைக் கைபிடித்து, "ஏ, வாலியே! நீ இவனைக் காப்பாற்று. கைவிட்டுவிடாதே," என்று சொல்லித் தானும் தேவலோகத்திற்குச் சென்றான். பிறகு வாலி ராஜ்யபரிபாலனம் செய்துவந்தான். அவன் மூர்க்கனாதலால், சுக்ரீவனைத் தம்பிபோல் நடத்தாமல் வேலைக்காரன்போல் நடத்தி வந்தான்.

இவ்விதம் சுக்ரீவன் தங்கள் பிறப்பைப் பற்றிச் சொல்லி முடித்தபின், ராமன் அவர்களின் விரோதத்திற்குக்காரணமென்னவென்று கேட்க, சுக்ரீவன் சொன்னதாவது:—

மேலே சொல்லப்பட்ட பிரகாரம் நான் வாலிக்கு வேலைக்காரன்போலிருந்தபோது, ஒருநாள் மயனுடைய மூன்று குழந்தைகளில் மூத்தவனை மாயாவி தனக்கு வாலியைக் கொல்லத்தக்க பலம் இருக்கிறதென்று கர்வத்தோடு கிஷ்கிந்தா கோட்டைவாசலுக்கு வந்து வாலியைப் போருக்கழைத்தான். (மயன் தன்னால் சிருஷ்டிக்கப்பட்ட சுயம்பிரபா இருக்கிற குகையில் ஹேமை யென்னும் தேவதாசியோடு ஐநூறு வருஷங்கள் சுகமாய் வாழ்ந்திருந்தபோது அவனுக்கு மூன்று குழந்தைகள் பிறந்தனர்). இந்திரனால் சண்டைக்கென்றே கொடுக்கப்பட்ட மாலையைப் போட்டுக்கொண்டுவாலியும்சண்டைக்குப்புறப்பட்டான். சண்டைக்கழைத்த மாயாவி சாமானியனல்லவாதலாலும், காயம் படாமலும், ஆபத்தில்லாமலும் காக்கும் சக்தி வாலியணிந்திருந்த மாலைக்கில்லையாதலாலும், நானும் துணையாகச் சென்றேன். எங்களைக் கண்டதும் அந்த அசுரன் பயந்து ஓட, வாலி அவனைத் துரத்திக்கொண்டே ஓடினான். நானும் பின்னால் ஓடினேன். அப்பொழுது அந்த அரக்கன் ஒரு குகையுள் புகவே, வாலியும் பின்தொடர, நானும் கூடவே சென்றேன். அப்பொழுது வாலி என்னிடம், "நான் உள்ளே சென்று அவனைக் கொன்றுவரும்வரையில், நீ வெளியில் காவலாயிரு" என்றான். உடனே நான், "ஓடுகிறவன் குகையில்

பிரவேசித்ததைக் கவனித்தால் அவனுக்கு உள்ளே உதவிக்கு யாராவது இருக்கவேண்டுமெனத் தெரிகிறது. ஆதலால் தாங்கள் தனியாகப் போவது உசிதமல்ல நானும் வருகிறேன்" என்று சொல்ல, அவன் மிகவும் கோபங்கொண்டு, உன் பாதத்தின்மேல் பிரமாணமாய் நீ வரக்கூடாது" என்று சொல்லிவிட்டு உள்ளே சென்றான். பின் ஒரு வருஷம் வரையில் யாதொரு சங்கதியும் தெரியவில்லை. அதற்குப் பிறகு அண்ணாவின் குரலும் அநேக ராக்ஷசர்களின் குரலும் கேட்டது. பிறகு அந்தசப்தமும் கேட்கவில்லை. கொஞ்சகாலத்திற்குப் பிறகு குகையிலிருந்து இரத்த வெள்ளம் நுரையுடன் வந்தது. அதைக் கண்ட நான் சந்தேகங்கொண்டிருக்கும்போது பின்னும் தோன்றிய சில சின்னங்களால் வாலி இறந்துவிட்டானென எனக்குத் தோன்றியது. (ஒரு எண்ணம் மனதில் உண்டானால், அது ஸ்திரமாகத் தோன்றுமே தவிர, முதலில் உண்டான எண்ணம் சரியா, பிசகாவென யோசிக்கும் குணம் புத்திக்கு அப்பொழுது தோன்றாது). இரத்தம் வெள்ளமாக வந்ததாலும், வாலி திரும்பி வராததாலும், அங்கே காணப்பட்ட சின்னங்களால் ராக்ஷசர்கள் வாலி அணிந்திருந்த மாலையைப் பிடுங்கிக்கொண்டு அவனைக் கொன்றுவிட்டதாக எனக்குத் தோன்றியதாலும், ராக்ஷசர்கள் வெளியேவர முடியாமல் குகைக்குள்ளிருந்தே மடியட்டும் என்ற எண்ணத்துடன் ஒரு பெரிய பாறையை அக்குகை வாயிலில் வைத்து மூடிவிட்டு, வாலிக்குச் செய்யவேண்டிய கருமங்களைச் செய்துவிட்டு, மிகுந்த துக்கத்துடன் ஊரையடைந்தேன். மந்திரிபிரதானிகள் விஷயத்தைத் தெரிந்துகொண்டு வருத்தப்பட்டனர். பின் அவர்கள் என்னைச் சமாதானம் செய்து, "நீயும் போய்விட்டால் நாங்கள் என்னசெய்வோம். ஆகையால் நீதான் இப்பட்டணத்தை யாளவேண்டும்" என்று சொல்லி எனக்குப் பலவந்தமாய்ப் பட்டாபிஷேகம் செய்தனர்.

தமையன் இறந்தபின் அவன் மனைவியைத் தம்பி யடைவது எங்கள் ஜாதிமுறையாதலால், நான் என் தமையன் மனைவி தாரையோடும், என் மனைவி ருமாவோடும் இராஜ்யபரிபாலனம் செய்துகொண்டிருந்தேன். இப்படியிருக்க, குகையினுள்சென்ற வாலி தானணிந்திருந்த மாலையின் விசேஷத்தால் அங்கிருந்த எல்லா ராக்ஷசர்களையும் கொன்றுவிட்டு, குகையின் வாசலை யடைந்து, அதுமூட்டப்பட்டிருந்ததைக் கண்டு, சுக்ரீவனைப் பலமுறைக் கூப்

பிட்டும், வழிதிறக்கப்படாததால், தன்கைகளாலும் கால்களாலும் பாறையைத் தள்ளிவிட்டு, ஊருக்கு வந்துசேர்ந்தான். அண்ணு ஊருக்குத் திரும்பிவந்ததை யறிந்த நான் களிப்புடன் அவனை எதிர்கொண்டழைத்து, நமஸ்கரித்துச் சகல விஷயங்களையும் சொல்லி, ராஜ்யத்தைப் பெற்றுக்கொள்ளும்படி வேண்டினேன். ஆனால் அவன் மிகக் கோபத்துடன் என்னையும், மந்திரிகளையும் தூஷித்து என்னை அடித்தான். அவனைக் கொல்லக்கூடிய பலம் எனக்கிருந்தும், அவன் என் தமையனுதலால் நான் அவனை நேரி டக்கொல்வது தகாது என்றெண்ணி வாளாயிருந்தேன். அவன் மேலும் என்னை யடிக்கவே, நான் அந்த அடியைப் பொறுக்கமுடி யாமல் பலவிடங்களில் ஓட, அவனும் என்னைத் துரத்திவந்து அடித்தான். பிறகு நான் அவனையே யடைந்து, "நீயே எனக்கு நாதன். என்னைக் காக்கவேண்டும்" என்று சொல்லி, என்தலையி லிருந்த கிரீடம் அவனது பாதத்தில் படும்படி அவனை வணங்கி யும், அவன் எனக்குக் கிருபைகாட்டாமல், என்னைக் கொல்லவே யோசித்தான். அப்பொழுது இந்த ஹனுமான், "சமீபத்தில் ரிஷியமுகபர்வதமிருக்கிறது. அங்குசென்றால் நாம் பிழைக்கலாம். ஏனென்றால் இந்த வாலி அங்கு வரமாட்டான்" என்றுசொல்ல, நான் அவனுடன் இங்கு வந்துசேர்ந்தேன். வாலி இங்கு வரக்கூ டாததால் நான் இதுவரையில் பிழைத்திருக்கிறேன், என்று இவ் விதம் சொல்லி சுக்ரீவன் கதையை முடிக்கவே, ராமன், "வாலி ஏன் இவ்விடம் வரக்கூடாது? அக்காரணத்தைச் சொல்லும்" என்று கேட்க, சுக்ரீவன், "ராமா, முன்புசொன்ன மாயாவியின் தம்பியான துந்துபி யென்பவன் ஆயிரம் யானையின் பலத்தை யுடையவன். அவன் சமுத்திர ராஜனையும், பர்வத ராஜனையும் யுத்தத்திற்கு அழைத்தவன். அவ்வளவு பலமுள்ள துந்துபி கிஷ்கிந்தைக்கு வந்து, வாலியைச் சண்டைக்கழைத்தான். உடனே அவன் தனக்குத் தன் பிதாவான இந்திரனுல் கொடுக்கப்பட்ட மாலையை யணிந்துகொண்டு யுத்தத்திற்குப்புறப்பட இருவருக்கும் மகா கோரமான யுத்தம் நடந்தது. துந்துபி அடித்த ஒவ்வொரு அடியும் வாலியின் உயிரை வாங்கக்கூடியதாயிருந்தும், வாலி இற வாமலிருந்ததால், 'இவனிடத்தில் ஏதோ விசேஷமிருக்கிறது. அதனுல்தான் அவனிறக்கவில்லை. அந்த விசேஷத்தை யறியும் வரையில் சண்டை செய்வதில் பிரயோசனமில்லை' என நினைத்து துந்துபி யுத்தம் செய்வதில் உற்சாகம் குன்றியிருந்தான். இத னுல் அதிக தைரியத்தை யடைந்த வாலி, துந்துபியின் காலைப்

பிடித்துமேலேதூக்கி அதிகவேகமாய்ச்சுழற்றி பூமியில் அறைந்து அவனைத் தூக்கிஎறிந்தான். அந்த சரீரம் கிஷ்கிந்தையிலிருந்து ஒரு யோசனை தூரத்திலிருந்த மதங்கரிஷியின் ஆசிரமத்திலுள்ள விருக்ஷங்களை முறித்து அந்த ஆசிரமத்தில் விழுந்து, இரத்தமய மாக்கிற்று. இவ்விதமாகத்தன்னது ஆசிரமம் அசுத்தமடைந்ததைக் கண்ட ரிஷி கோபங்கொண்டு, ஞானத்தால், அவ்விதம் செய்தது வாலியெனவறிந்து, "இதுமுதல் அந்த வாலி இந்த ஆசிரமத்தி லிருந்து ஒரு யோசனை தூரத்திற்குள் வந்தால் அவன் தலை வெடித்துவிடும். அவனைச் சேர்ந்தவர்கள் யாராவது இந்த வனத் திலிருந்தால், இன்றிரவுக்குள் ஓடிவிடட்டும். நாளைமுதல் அவர் கள் இங்கிருந்தால், அவர்கள் மலைகளாகிவிடுவார்கள்" என்று சபித்தார். இதையறிந்த அங்கிருந்த வானரர்கள் பயந்து, வாலி யிடத்தில் போய் விஷயத்தைச் சொல்ல, அன்றிரவு சாபமில்லா ததால், வாலி உடனே மதங்கரிடம் சென்று அவரை வணங்கினன். மதங்கர் தன் ஞானத்தால் வாலியின் கர்வத்தையும், கர்வத்தால் அவன் பெரியோர்களை அவமதித்துப் பாபமான காரியங்களைச் செய்வதையும் அறிந்து, அவனைத் திரஸ்கரித்தார். அதுமுதல் வாலி இங்கு வருவதில்லை. ஆதலால் இந்த வனத்தில் மதங்கரால் சபிக்கப்பட்ட எல்லைக்குள் உள்ள ரிஷியமுகத்திலும், மலையத் திலும் நான் வசித்துவருகிறேன். ஆனல் நீர் எவ்விதமாவது வாலியை வதித்து என்னைக் காக்கவேண்டும்" என்று வேண்டி னன். அதுகேட்ட ராமன், "சுக்ரீவா; நீ அஞ்சவேண்டாம். இந்திரன் வஜ்ராயுதத்தால் பர்வதத்தைப் பிளப்பதுபோல, சரவ ணப்பொய்கையில் பிறந்தவைகளும், கணுக்குறுகியவைகளும், கழுகு இறக்கை பூண்டவைகளும், அதிக வேகமுள்ளவைகளு மான பல பாணங்களால் வாலி என்னல் அடிக்கப்பட்டுக் கீழே விழுவதை நீ பார்க்கலாம்" என்றுரைத்தார். அப்பொழுது சுக் ரீவன், "நான் யுத்தத்தில் உமது பலத்தைக் கண்டதில்லையாத லால், அதி பலமுள்ள வாலியைக் கொல்லத்தக்க பலம் உமக்குண் டாவெனச் சந்தேகிக்கிறேன்" என்று சொல்லவே, லக்ஷ்மணன் கோபங்கொண்டு, "என் அண்ணு எந்தக் காரியத்தைச் செய்தால் அவருக்கு வாலியைக் கொல்லத்தக்கபலம் உண்டென்று நீர் தெரிந் துகொள்ளுவீர் சொல்லும்" என்று கேட்டான். சுக்ரீவன், "வாலி துந்துபியைக் கொன்று தூக்கியெறிந்ததால், நீரும் இதோ தெரிகிற அவனுடைய எலும்புக்கூட்டை ஒரு பாதத்தால் எடுத்து 200 விற்கிடைதூரம் எறிந்தால், வாலியை எதிர்த்துக் கொல்லும்

சக்தி உமக்கு உண்டென்று நான் தெரிந்துகொள்வேன். மேலும் இதோ தெரிகிற ஏழு ஸாலமரங்களில் ஒன்றை நீர் ஒரு பாணத்தால் பிளந்தால், நீர் வாலியைக் கொல்லக்கூடும் என்றறிவேன்" என்றான். உடனே ராமன் தனது கால் கட்டைவிரலால் மலைபோலிருந்த துந்துபியின் எலும்புக்கூட்டை யெடுத்து பத்துயோசனை தூரத்தில் விழும்படி எறியவே, சுக்ரீவன், "ராகவா, இது வாலியால் எறியப்பட்டபொழுது பச்சையாயிருந்தது. இப்பொழுது இது உலர்ந்திருப்பதால் அவ்வளவு கனமாயிருக்காது. இதிலிருந்து உமது பலத்தை யறியமுடியாது. இது உலர்ந்தது என்று நான் முன்னமேயே அறிந்துங்கூட நீரும் என்னைப்போல் துக்கப்படுவதால், இந்த எலும்புக்கூட்டையாவது எறியமுடியுமாவென்று அறிவதற்காகவே நான் சொன்னேன். வாலி ஏதோ ஒருதடவை தான் இந்தக்கூட்டை எடுத்தெறிந்தான். ஆகையால் இது இருக்கட்டும். வாலி தினந்தோறும் தனக்கு முன்தினமிருந்த பலமிருக்கிறதா வென்று பரீக்ஷை செய்வதற்காக இந்த ஸப்தஸாலமரங்களில் ஒவ்வொன்றை தினந்தோறும் உலுக்குவான். அப்படி உலுக்கும்போது அம்மரத்திலுள்ள இலைகள் யாவும் உதிர்ந்துவிடுவன போலிருக்கும். முதல்நாள் உலுக்கின வேகத்துடனேமறுநாளும் உலுக்கினால் தன்பலம் குறையவில்லையென்று உறுதிகொள்வான். சற்று சிரமமடைந்தால் தேகபலம் குன்றிவிட்டதாக எண்ணுவான். யாரும் எப்பொழுதும் தனக்கு அதிகமான பலமுடைய வஸ்துக்களில்தான் தனது பலத்தைச் சோதிப்பார்களாதலால், இந்த மரம் வாலியின் பலத்தைவிட அதிக பலமுடையதென்பது நிச்சயம். இந்த மரத்தை நீர் ஒரே பாணத்தால் பிளந்தால், உமக்கு வாலியை நேரில் கொல்லச் சக்தியுண்டென்றறிவேன்" என்று சொன்னான். உடனே ராமன் சுக்ரீவனைத் திருப்திசெய்து அவன் கவலையைப் போக்கவேண்டுமென நினைத்து, தன் வில்லை நாணேற்றி, காதுபரியந்தம் இழுத்து அதில் சிறந்ததொரு அஸ்திரத்தைப் பூட்டிவிடவே, அது ஏழு மரங்களையும், பக்கத்திலிருந்த பாறையையும் பிளந்து, பாதாளத்திற்குச் சென்று திரும்பிவந்து ராமனது அம்பறாப்பொதியையடைந்தது (இவ்விதம் அதிவேகமாக வந்த அஸ்திரத்தைக் கண்ணுரைக்கண்ட வால்மீகி சகல அஸ்திரங்களையும் அறிந்தவர்களில் சிறந்தவராக இராமரை வர்ணிக்கிறார். புருஷரில் சிரேஷ்டரென்றும், சூரனென்றும், அதிக பௌருஷமுள்ளவனென்றும் ராமரைப் புகழும் வால்மீகி தன் வாயால் 'இராமர் வாலியை மறைந்தடித்தார்' என்று சொல்வாரா? அவரே

அப்படிச் சொல்லாதிருக்கையில், சாதாரண ஜனங்களின் வாக்கியத்தை யனுசரித்து அவர்மேல் அக்குற்றம் சாட்டுவது நியாயமல்ல— இதைத் தர்மஸ்தாபனமான வாலிவத சித்தாந்த புத்தகத்தில் விவரமாய்க் காணலாம்). இதைக் கண்ட சுக்ரீவன் மிகவும் ஆச்சரியத்துடன், "புருஷர்களுள் சிரேஷ்டமானவனே! தேவர், கந்தர்வர், யக்ஷர், வித்யாதரர், உரகர், பந்நகர், அசுரர், ராக்ஷசர் முதலிய சகலரையும் யுத்தத்தில்கொல்ல உமக்கு சக்தியிருக்கிறது. அப்படியிருக்க அல்பனான இந்த வாலி உமக்கு எம்மாத்திரம்?" என்று சொல்லக் கேட்டு ராமன் சந்தோஷித்து, "இப்பொழுதே நீ யுத்தத்திற்குப் புறப்படு. உன் பத்தினியை அவன் அபகரித்திருப்பதால், உன்னை முன்னிட்டுத்தான் நான் சண்டை செய்ய வேண்டும். ஆதலால் நீ உடனே சென்று அவனை யுத்தத்திற்குக் கூப்பிடு: நான் அவனை இப்பொழுதே கொல்கிறேன்" என்றார். சுக்ரீவன் உடனே ராமலக்ஷ்மணர்களுடனும், சகல வானரர்களுடனும் வாலி வசித்துவந்த கிஷ்கிந்தைக்குச் சென்று, ராமராக்ஞைப்படி எல்லோரையும் நிறுத்திவிட்டு, சுக்ரீவன் மட்டும் வாலியின் கோட்டை வாயிலில் நின்றுகொண்டு அவனை யுத்தத்திற்கழைத்தான். அதைக்கேட்டு கோபங்கொண்ட வாலி சுக்ரீவனைக் கொல்லவேண்டுமென்றெண்ணி அவனை யெதிர்த்தான். இவ்விதம் இவர்கள் கோரமான யுத்தம் செய்துகொண்டிருந்த போது நடுவில் தான் அடிப்பது கூடாது என்ற தர்மத்தை அனுசரித்த ராமன் தூரத்திலிருந்து கவனித்துக்கொண்டிருந்தார். வாலியும், சுக்ரீவனும் எல்லா விஷயங்களிலும் ஒரேமாதிரி யிருந்ததாலும், அவர்களுக்குள் வித்தியாசத்தைக் கண்டறிந்து வாலி யின்னார் என்று சொல்ல அங்கு யாரும் இல்லாததாலும் சண்டை முடிவிலும் ராமன் வாலியை எதிர்க்கவில்லை. ஆதலால் மற்றொரு யுத்தத்தில் இருவருக்கும் வித்தியாசம் தெரிவதற்காகச் சுக்ரீவனுக்கு ஒரு அடையாளம் செய்து, பின் வாலியை எதிர்ப்போமென்றெண்ணி இராமன் அவ்விடத்தை விட்டகன்றார். வாலியின் அடி பொறுக்காமல் சுக்ரீவன் ரிஷியமுகத்தை நோக்கி ஓட, வாலியும் ரிஷியமுக எல்லைபரியந்தம் அவனைத் துரத்தியடித்தான்.

இவ்விதம் அடிபட்ட சுக்ரீவன் ராமனையடைந்து, "ராமா, இப்படிக் கைவிடலாமா?" என்று விசனத்துடன் கேட்க, ராமன் அவனைக் கட்டிக்கொண்டு, "அப்பா, சுக்ரீவா, நீ பட்ட அடியெல்லாம் நான்பட்ட அடியென்று எண்ணுகிறேன். ஆனால் உங்களிரு

வருக்கும் வித்தியாசம் தெரியாததால், நான் வாலியை யடிக்கமுடிய வில்லை. அடையாளம் தெரிவதற்காக நான் இப்பொழுது உனக்கு ஒரு கொடியைப் போடுகிறேன். (இருவர் யுத்தம் செய்யும்போது நடுவில் புகுந்து அடிப்பதற்காகவல்ல. வாலி யார், சுக்ரீவன் யார் என்றறியவே). நீ மறுபடியும் சென்று அவனுடன் யுத்தம்செய். பிறகு நீ கேட்டுக்கொண்டபடியே நான் அவனுடன் யுத்தம்செய்து அவனைக் கொல்கிறேன்" என்று சொல்லி லக்ஷ்மணனைக்கொண்டு ஒருகொடிமாலையைச் சுக்ரீவன் கழுத்தில் போடச்செய்ய, சுக்ரீவன் அந்த மாலையுடன் விபரீத காலத்தில் சூரியனைச் சுற்றி எப்படி நக்ஷத்திரங்கள் பிரகாசிக்குமோ அப்படிப் பிரகாசித்தான். (இது விஷயமாய் சொல்லப்படும் வியாக்யானங்கள் சரியல்ல. ஜோதி ஷாதி சாஸ்திரங்களுக்கும் ராமாயணம் கட்டுப்படாது. தர்ம ஸ்தாபனமான வாலிவத சித்தாந்த புத்தகத்தில் பார்க்க). இப் படிப்பிரகாசிக்கும் சுக்ரீவன் சகலருடனும் கிஷ்கிந்தைக்குச்சென்று வாலியைச் சண்டைக்கழைத்தான். வாலி சண்டைக்குப் புறப் படும்போது அவனது பத்தினியான தாரை அவனைத் தடுத்து, "ராமன் வந்திருக்கிறான். அவன் அதிக பலமுள்ளவன், சாதுக்க ளுக்கு இருப்பிடமானவன், அண்டினவர்களை யாதரிப்பவன். இப் பொழுது சுக்ரீவன் அவனை அண்டியிருப்பதால், அவன் உம்மை விடமாட்டான். அவனுடைய விரோதம் வேண்டாம். நீர் சண் டைக்குப் போகவேண்டாம். சுக்ரீவனுக்கு அவனது பத்தினி யையும் ராஜ்ய பாகத்தையும் கொடுத்துவிட்டால், ராமனிடம் விரோதமில்லாமலிருக்கலாம்" என்று சொல்ல வாலி, "உத்தம தர்மத்தை அனுஷ்டிக்கும் ராமன் என்னை யடிப்பதான பாபத்தைச் செய்யமாட்டான். மேலும் சத்ருவந்து சண்டைக்கழைக்கும் போது வீரனொருவன் பொறுக்கமாட்டான். யுத்தத்தில் பிரா ணனை விட்டாலும் விடுவானே தவிற சத்துருவுக்கு அடங்கமாட் டான். ஆதலால் நான் சண்டைக்குப் போவேன்" என்று (அழி கிற காலம் வந்துவிட்டதால்), இவ்விதம் சொல்லிவிட்டுத் தன் பிதாவான இந்திரனால் கொடுக்கப்பட்ட மாலையைப் போட்டுக் கொண்டு யுத்தத்திற்குப் புறப்பட்டான். யுத்தகளத்தையடைந்த வாலி ராமலக்ஷ்மணர்களைக் கண்டும், தன்னை எதிர்த்தவனை எதிர்க் கவேண்டுமென்ற முறைப்படி (வாலிவத சித்தாந்த புத்தகத்தைப் பார்க்க) சுக்ரீவனை எதிர்க்க, இருவரும் ஒருவரை ஒருவர் கொல்ல வேண்டுமென்ற எண்ணத்துடன் மும்மரமாக யுத்தம் செய்தனர். நன்றாக அடையாளம் தெரிந்தும், வாலியால் சுக்ரீவன் அடிபடுவ

தைக் கண்டும் இருவர் சண்டை செய்யும்போது நடுவில் அடிக்கக் கூடாது என்ற தர்மத்தைக் கடைப்பிடித்து ராமன் வாளாயிருந் தார். வாலியால் அடிபட்டு கோபத்துடன் சுக்ரீவன் ஒரு ஸால மரத்தைப்பிடுங்கி அதனால் வாலியை யடிக்க, அதிகமானபாரத்தை ஏற்றப்பட்ட கப்பல் புயல்காற்றில் நங்கூரத்தையும் பிடுங்கிக் கொண்டு நிலைதடுமாறி மோதுவதைப்போல வாலி அந்த அடியைப் பொறுக்கமுடியாமல் நடுநடுங்கினன். இவ்விதம் அடிபட்ட வாலி அதிக கோபங்கொண்டு சுக்ரீவனைப் பலமாக அடிக்கவே, சுக்ரீவன் சுற்று களைத்துப் பின் மறுபடி கோரமான யுத்தத்தை ஆரம்பித் தான். (இப்படி இரண்டாவது யுத்தத்தில் இரண்டாவது யுத்தம் உண்டாயிற்று)

அப்பொழுது சுக்ரீவன் மரங்களையும் மலைகளையும் கொண்டு யுத்தம்செய்து களைத்து இனித் தன்னால் முடியாதென்று தன் தீனஸ்வரத்தால் வெளிப்படுத்தினன். அதைக் கவனித்துக் கொண்டிருந்த ராகவன், இருவர் சண்டையின் நடுவில் தான் பிர வேசிக்கக் கூடாதென்று சண்டையின் முடிவை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாலும், மேலும் தன்னுடன் சண்டை செய்யாத வனைக் கொல்லக்கூடாதென்ற தர்மத்தைக் கொண்டிருப்பதாலும், வாலியைச் சண்டையில் கொல்வதாகச் சுக்ரீவனிடம் செய்த பிர திக்ஞையை நிறைவேற்ற வேண்டியிருப்பதாலும், தன் வில்லை யெடுத்து நாணேற்றினர். அந்த ஓசையைக் கேட்ட திக்குகள் செவிடுபட, பக்ஷிகளும், மிருகங்களும் பயந்து ஓட, யுகாந்தம் போல் எல்லாம்பிரமிக்க, அதுகேட்ட வாலி, ராமனுடன் சண்டை போடவே மாலையுடன் வந்தவனதலால், ராமனை யெதிர்த்து, அவர்மேல் மரங்களையும், மலைகளையும் வீசியெறிந்தார். வாலியுடன் யுத்தம் புரியவே சூரியகாந்தியை நிகர்த்த பாணங்களைப் பொறுக்கி யெடுத்து வந்த ராமன், அவைகளால் வாலி தன்மேலெறிந்த மரங்களையும், மலைகளையும் சேதித்துவிட, ராமனைக் கொல்வதற் காக கரன், தாடகை முதலியவர்கள் எவ்விதம் கோபத்துடன் வந் தார்களோ அதேவிதமாய் வாலியும் ராமனை எதிர்த்தோடிவந்தான். ராமன் அவனை ஒரே பாணத்தால் அடித்தார். (உத்தம கதியைக் கொடுக்கும் சக்தி பாணத்திற்காவது, அஸ்திரத்திற்காவது கிடை யாது. இதைச் சித்தாந்த புத்தகத்தில் அறியலாம்). அந்த அடிபட்டவுடன் வாலி கீழே விழுந்து, சித்தமிழந்து, ராமனைப் பார்த்து, "நீ தான் ராஜகுமாரனா? உன்னைத்தான் பார்க்கப்பார்க்க

இன்னும் பார்க்கவேண்டுமென்று சொல்லுகிறார்களா! என்னை அநியாயமாய் அடித்த நீதானு தர்மிஷ்டன். மகாபாபியான நீ தசரதன் குலத்தில் ஏன் பிறந்தாய்! பத்தினியை இழந்ததால், உன்னறிவையும் இழந்தாயோ? என்னிடம் சொன்னால், நான் ஒரே நாளில் ராவணனைக் கொன்று சீதையை மீட்டுக்கொண்டு வந்திருப்பேனே. நீ மூர்க்கன், லுப்தன், இந்திரியங்களை ஜயிக்காதவன். நீ எதிரிலிருந்தால் நான் உன்னைக் கொன்றிருப்பேன். நீ யமனைப் பார்த்திருப்பாய்'' என்று சொல்லிப் பலவிதமாய்த் தூஷித்தான். (புத்தி யிழந்தால் இல்லாததெல்லாம் சொல்லப்படும். இதை சித்தாந்த புத்தகத்தில்பார்க்க). ராமன், ''வாலியே, தர்மம், அர்த்தம், சமயம், காமம், லௌகிகம், இவைகள் தெரியாமல் ஏன் நீ என்னைத் தூஷிக்கிறாய்? தம்பி உயிருடன் இருக்கையில், உன் குலதர்மத்தை மீறி அவன் பத்தினியை நீ அபகரித்த அதர்மத்திற்காகவே நான் உன்னைத் தண்டித்தேன். தர்மிஷ்டனை பரதன் அரசாளும்போது நீ அதர்மம் செய்யலாமா? உனக்கும் எனக்கும் ஒவ்வொரு விஷயத்திலும் விரோதம் உண்டு. நான் என் பிரதிக்ஞையை விடமாட்டேன். நான் ஒருவனை யழிப்பதாகப் பிரதிக்ஞை செய்தால், அவன் சரண்புகுந்தாலும் அழிக்காமல் விடேன். ஏனெனில் சத்தியமே பிரதானமாகும். தர்மம் இரண்டாவதுதான். சத்தியத்திற்கு விரோதமானது தள்ளத்தகுந்தது. சத்தியத்திற்கு மேல்பதம் கிடையாது. ஆதலால் நான் சத்தியத்தை விடமாட்டேன். தனுர்வேத மறியாத சாதாரண ஜனங்கள் மாமிசத்திற்காக மிருகங்களைக் கண்டபடி யடிப்பார்கள். தனுர்வேத மறிந்தவர்களோ வேட்டையிலும், எதிர்த்துத்தான் மிருகங்களைக் கொல்லுவார்கள். நீ குரங்காதலாலும், குற்றவாளி யாதலாலும், நீ என்னுடன் சண்டை போட்டாலும், சண்டை போடாமல் போனாலும் நான் உன்னைக் கொல்லலாம். ஆனால் நான் உன்னை யுத்தத்திலேயே எதிர்த்துக்கொன்று தர்மத்தை ஸ்தாபித்தேன். தர்மம் என்பது பரமசூக்ஷ்மம். ஆத்மா ஒன்றுதான் சுபாசுபத்தை அறியக்கூடியது. தேவதைகள் மனுஷ்யரூபத்துடன் உலகத்தில் சஞ்சரிக்கிறார்கள் என்பதை நீ யறியாய்போலும். நான் உன்னைக் கொன்றது பெரிதல்ல. எனக்கு முன்னிருந்த பெரியோர்கள் செய்ததைத்தான் நானும் செய்தேன். என் மூதாதையான மாந்தாதா காலத்தில் சிரமணன் என்பவன் (இவன் பௌத்தனல்லன்) உன்னைப்போல் தம்பி பத்தினியை அபகரித்ததால் அவர் அவனைக் கொன்றதுபோல் நீ உன்

குலதர்மத்தை விட்டதால் நானும் உன்னைக் கொன்றேன். சாஸ்திரப்படி குற்றவாளியைத் தண்டிக்காத குற்றத்தை அரசன் அடையவேண்டுமாதலால், (குற்றவாளியை எப்படியும் தண்டிக்கலாம் என்பது கிடையாது. நேரிடவே எந்தக்குற்றவாளியையும் தண்டிக்கவேண்டும்) குற்றவாளியான உன்னைத் தண்டியாவிடில் அந்தப் பாபத்தை நானடைய வேண்டுமாதலின் நான் உன்னைத் தண்டித்து என்னைக் காத்துக்கொண்டேன். சிரச்சேதத்திற்குப் பெரிய தண்டனை இல்லாததால் உன்னை இத்துடன் விட்டேன். இதற்குமேல் தண்டனை இருந்தால் அதையும் செய்வேன்'' என்று சொன்னார். இதுகேட்ட வாலி, ''ராமபாணம் எனது இருதயத்தைப் பிளந்துவிட்டதால், நான் அறிவிழந்து உம்மைத் தூஷித்து விட்டேன். என்னை மன்னிக்கவேண்டும். அங்கதனைக் காக்க வேண்டும்'' என்று ராமரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, சுக்ரீவனைப் பார்த்து, ''நான் உனக்கு அபராதம் செய்துவிட்டேன். அதற்காக நான் வருந்துகிறேன்'' என்று சொல்லி, அங்கதனைப் பார்த்து, ''நீ சுக்ரீவன் சொற்படி நடந்துவா'' என்றுரைத்துத் தனது மாலையைக் கழற்றிச் சுக்ரீவனுக்குப் போட்டுப் பிராணனை விட்டான் (வாலிக்கு முக்தியில்லை. ராமனால் அடிபட்டதால், தம்பி பத்தினியை அபகரித்த பாபம் மட்டும் ஒழிந்ததே தவிற பிதுர்துரோகமான பாபம் போகவில்லை. பிதாவால் கைவிடப்பட்ட பிதுர்துரோகியான பிள்ளையை எந்த தெய்வமும் காப்பாற்றாது. ஆதலால் ராமாவதாரப் பூர்த்தியில் எல்லா வானர்களும் தாங்கள் தாங்கள் பிறந்தவிடத்தில் லயத்தை யடைந்ததுபோல வாலி தன் பிதாவான இந்திரனிடத்தில் லயத்தை யடையவில்லை. அவன் பிள்ளை அங்கதனுக்கும் புண்ணியலோகமில்லை. யுத்த களத்தில் அடிபட்டதால் வீரசுவர்க்கமட்டும் கிட்டிற்று— இந்த விஷயத்தைச் சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்). யுத்தகளத்தில் இறந்தவனுக்கு ஒரேநாளில் சகல கர்மங்களையும் செய்யவேண்டுமாதலால், அங்கதன்மூலம் சுக்ரீவன் வாலிக்குச் செய்யவேண்டிய கர்மங்களைச் செய்துமுடித்து ராமனிடம் சென்றான். அப்பொழுது ஹனுமான் சுக்ரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்று ராமனை வேண்ட, ராமன், ''நான் சுக்ரீவனைச் சரணடைந்திருப்பதால், அவனெனக்கு நாதனாயிருக்கிறான். மேலும் நான் 14 வருஷங்கள் பட்டணப் பிரவேசம் செய்வதில்லையென்று சங்கல்பம் செய்துகொண்டிருப்பதால் நீரே சுக்ரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேண்டும்'' என்றுசொல்ல ஹனுமானும் பட்டணத்

திற்குச் சென்று ருமா, தாரா இருவருடன் சுக்ரீவனைச் சிம்மா சனத்தில் உட்காரவைத்து, அஷ்டவசுக்கள் ஸ்ரீதேவியுடன் கூடின இந்திரனுக்குப் பட்டாபிஷேகம் பண்ணினால் எப்படியோ அப் படிப் பட்டாபிஷேகம் செய்தான்.

அதற்குப்பின் சுக்ரீவன் வானரர்களுடன் ராமனிடம் வரவே, அவர், "இது மழைக்காலமானபடியால் இக்காலம் கழிந்தபின் வந்துசேரும். இது ஆடிமாதமாதலால், கார்த்திகை மாதத்தில் சகல சேனைகளுடன் ராவண வதத்திற்குச் சித்தமாய் வந்து சேரும்" என்று சொல்ல, சுக்ரீவனும் அவ்விதமே தன் பட்டணத் திற்குச் சென்று, அங்கதனிடம் ராஜ்யபாரத்தை ஒப்புவித்துத் தான் அந்தப்புரத்தை யடைந்து தாரா, ருமா முதலியவர்களுடன் காமசுகத்தில் ஈடுபட்டுச் சந்தோஷித்திருந்தான். இப்படியிருக்க, ராமன் மழைக்காலத்தில் பிரசிரவணம் என்ற மலையில் வசித்து வருகையில் சீதையை நினைத்து துக்கித்தார். இவ்விதம் மழைக் காலம் கழிய, ராமன் லக்ஷ்மணனைப் பார்த்து, "லக்ஷ்மணா, சுக்ரீ வன் எனக்குக் கிருபை புரியவில்லையல்லவா, அவன் நம்மை மதிக் கவில்லை. ஏனெனில் நான் என் ராஜ்யத்தையும், பத்தினியையு மிழந்து தீனனாயிருக்கிறேன். வீடும் வெகுதூரத்திலிருக்கிறது. மேலும் நான் அவனைச் சரணமடைந்ததாலும் அவன் கிருபை செய்யவில்லை. நாம் சீதையைக் கண்டுபிடித்துக் கொடுக்கும்போ துதானே ராமன் அவளை அடைய முடியும் என்று எண்ணிவிட் டான் போலும், ஆதலால் நீ சென்று அவனை அழைத்துவா. வாலியைக் கொன்ற பாணத்தைப் போன்ற பாணம் இன்னம் ராமன் கையில் உண்டென்றும், வாலி அதர்மம் செய்து அடிபட் டதுபோல் சுக்ரீவனும் அதர்மம் செய்தால் அடிபடுவானென்றும் நான் சொன்னதாகச் சொல்" என்று சொன்னார். உடனே லக்ஷ் மணன் கோபத்துடன், "நான் இப்பொழுதே சுக்ரீவனைக் கொன் றுவிடுகிறேன்" என்று சொல்ல ராகவன், "நான் அவனுடன் அக்னிசாக்ஷியாய் சினேகம் செய்துகொண்டதால் அவனைக் கொல் லக்கூடாது. ஆதலால் நீ சென்று அவனைச் சமாதானமாய் எப் படி அழைத்துவர முடியுமோ அப்படியே அழைத்துவா" என் றுக்ஞாபித்தார். லக்ஷ்மணன் உடனே கையில்பிடித்த வில்லுடன் கிஷ்கிந்தையடைய, அவனைக்கண்ட வானரர்கள் பயந்தோடினர். லக்ஷ்மணன் முதல்கட்டு, இரண்டாம்கட்டு முதலிய பலகட்டுகளைத் தாண்டிச் செல்ல, அங்கதனும் ஹனுமானும் அவனைக்கண்டு வணங்

கிறார்கள். லக்ஷ்மணன் அங்கதனிடம், "சீக்கிரம் சென்று சுக்ரீவனை எழுப்பும். ராமாக்ஞையால் நான் வந்து காத்திருப்பதாகத் தெரிவியும்" என்று சொல்ல, அங்கதனும் அவ்விதமே செய்தான். சுக்ரீவன் எழுந்தான். ஆனால் மறுபடி காமத்திலீடு பட்டதால் வரத்தாமதமாயிற்று. ஆதலால் லக்ஷ்மணன் கோபித்து வில்லை நாணேற்ற, அந்த சப்தத்தைக்கேட்ட சுக்ரீவன் அதிக துக்கத்தை யடைந்து, பக்கத்திலிருந்த தாரையிடம், "லக்ஷ்மணன் கோபங்கொண்டிருப்பதால், நீ சென்று அவனைச் சமாதானம் செய்து அழைத்துவா" என்று சொல்ல, அவளும் லக்ஷ்மணனை நாடிச்சென்றாள். அவளது வருகையைக் கண்ட லக்ஷ்மணன், "நான் பெண்களிருக்கும் அந்தப்புரம் வந்துவிட்டேன் போலிருக்கிறது. இது தகாது" என நினைத்து வெட்கத்தால் தலைகுனிந்து நின்றான். தாரை அவனைப் பார்த்து, "உமது கோபத்திற்குக் காரணமென்ன்? வாலிவதம் முடிந்த உடனேயே சீதையைக் கண்டுபிடித்து வரச்சொல்லியிருந்தால் அப்பொழுதே கண்டுபிடித்தாயிருக்குமே. நீங்களே சுக்ரீவனுக்கு ஒரு பத்தினியோடு மற்றொருவளையும் கொடுத்துவிட்டு, சுகித்திருப்பதற்கு நான்குமாத காலத்தையு மளித்து, காமஜாதியான குரங்கு காமத்தில் ஈடுபட்டிருப்பதற்காக ஏனோப்பிரமாதமாய்க் கோபிக்கிறீரே! விசுவாமித்திரர், பராசர் முதலிய ரிஷிகளும்கூடத் தபசை விட்டுக் காமத்தில் ஈடுபடவில்லையா? மேலும் எமது கணவரும் சும்மாவிருக்கவில்லையே. வானர சேனைகளைத் திரட்டி வருவதற்காக எல்லா திக்குகளிலும் வானரர்களை அனுப்பியிருக்கிறார். தங்கள் வரவை அரசர் எதிர்பார்க்கிறார். வாரும் போவோம்" என்று சொல்லி சபாமண்டபத்திற்கு அழைத்துச் சென்றாள். அங்கு ரத்னமயமான சிம்மாதனத்தில் சகல வைபவத்துடன் வீற்றிருந்த சுக்ரீவன் லக்ஷ்மணனைக் கண்டு பயத்தால் எழுந்திருந்து, தேகம் வியர்க்க நின்றுகொண்டு அவனை அஞ்சலிபந்தம் செய்தான். சுக்ரீவன் இவ்வளவு வைபவத்துடனிருப்பதைக் கண்ட லக்ஷ்மணன் கோபத்துடன், "சுக்ரீவா, உமது தமையனான வாலியைக்கொன்ற பாணத்தை யொத்தபாணம் இன்னும் தன் கையிலிருப்பதாகவும், வாலி சென்ற வழி இன்னும் அவனைப்போல் அதர்மம் செய்தவர்களுக்காகத் திறந்து வைக்கப்பட்டிருப்பதாகவும், என் அண்ணன் உம்மிடம் சொல்லச் சொன்னார். சத்தியத்தையும், தர்மத்தையும் விடலாகுமாவென்று கேட்கச் சொன்னார்" என்று சொல்லக்கேட்ட சுக்ரீவன், "உத்தமா, நான் சொன்னகாலத்தில் வராதது குற்றமே.

மன்னிக்கவேண்டும். ஒரு அஸ்திரத்தால் ஸப்தஸாலமரங்களேயும் பக்கத்திலிருந்த பர்வதத்தையும், பூமியையும் பேதித்த பராக்கிரமமுள்ள ராமருக்கு என் தயவு எதற்காகவேண்டும்? இதரர்களால் சுலபமாக யுத்தத்தில் வதிக்கமுடியாத பௌருஷமுள்ள வாலியையெதிர்த்து யுத்தத்தில் நேர்முகமாகக்கொன்றதால் மூன்றுலோகங்களிலும் கீர்த்திபெற்ற இந்த ராமருக்கு என் தயவால் என்ன ஆகவேண்டும்" என்றுரைத்தான். அப்பொழுது லக்ஷ்மணன், "சுக்ரீவா, உலகத்தில் குற்றவாளி ஒருக்காலும் தன் குற்றத்தை ஒத்துக்கொள்ளமாட்டான். அப்படி ஒருவன் குற்றத்தை உணர்ந்து ஒத்துக்கொண்டால் அவன்தான் உத்தமன். நீர் உத்தமன். பலம், பௌருஷம் முதலியவற்றில் எனது தமயனுக்கு நிகரானவர். உமது உத்தம குணத்தைத் தெரிந்துகொண்டுதான் தெய்வமானது உம்மை என்னண்ணவுக்கு எஜமானனுகை ஏற்படுத்தியது. பத்தினியைப் பிரிந்த துக்கத்தால் என்னண்ண உம்மைக் கோபித்தார். அவர்படும் துக்கத்தைச் சகிக்காமல் நானும் உம்மைக் கடிந்தேனே தவிற வேறில்லை. ஆதலால் நீர் இதைப் பொறுத்துக்கொள்ளவேண்டும். இனித் தாமதிக்காமல் உடனே புறப்படும்" என்று வேண்டினன். உடனே சுக்ரீவன் வானரவீரர்களுடன் புறப்பட்டு ராமரிருப்பிடத்தை யடைந்தான். ராமர் அவனிடம், "சத்தியத்தையும், தர்மத்தையும் விட்டுவிடக்கூடாது" என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது ஏராளமான வானர சேனைகள் பல திசைகளிலிருந்து வரக்கண்ட சுக்ரீவன் பரம சந்தோஷத்துடன் ராமனை நோக்கி, "இவ்வளவு சேனைகளும் தம்முடையது. சீதையைத் தேடுவதற்கு ஏற்பாடு செய்யலாம்" என்று சொல்ல ராமன், இவைகளை ஆக்ஞைசெய்ய என்னுல் முடியாது. நீரே வேண்டுவன செய்யும்" என்று தெரிவித்தார். சுக்ரீவன் விநதனென்ற தலைவனை யழைத்து, "நீ உனது அநேக வானரர்களுடன் கிழக்கே சூரியன் உதிக்கும் உதயகிரி வரையில் சென்று மத்தியிலுள்ள ஆயிரக்கணக்கான யோசனைகளிலுள்ள பல வனங்கள், வனந்திரங்கள், தீவுகள், பர்வதங்கள் முதலிய சகல இடங்களிலும் சீதையைத் தேடி, ராவணனிருப்பிடத்தையும் கண்டுபிடித்துக்கொண்டு முப்பது நாட்களுக்குள் திரும்பி வந்துவிடவேண்டும்" என்று அவனை அனுப்பிவிட்டு, அங்கதனைக் கூப்பிட்டுத் தெற்கில் அனேக யோசனைக் கப்பாலுள்ள யமபட்டணபரியந்தம் வானர வீரர்களுடன் சென்று சீதையைத் தேடிக்கொண்டு ராவணனிருப்பிடத்தையும் கண்டுகொண்டு முப்பதுநாட்

களில் வரவேண்டுமென்றறிவித்து, மேற்கே சென்று சீதையைத் தேடுவதற்கு வானர வைத்தியரான சுஷேணனை யனுப்பிவிட்டுச் சதவலியென்ற தலைவனை விளித்து அவனுடைய அநேகமாயிரம் வானரர்களுடன் வடதிசையில் உத்தர சமுத்திரம் வரையில் சென்று மத்தியிலுள்ள சகல வனங்கள், மலைகள் முதலிய இடங்களில் சீதையைத் தேடிக்கொண்டு முப்பது நாட்களில் வரவேண்டுமென்றாக்ஞாபித்தனுப்பிப் பின் ஹநுமானைத் தனித்தழைத்து, "உத்தமா, நீ எவ்விதத்தில் ராமனை என்னிடம் சேர்ப்பித்து, வாலிவதத்தைச் செய்வித்து, எனக்குச் சகல அநுகூலத்தைச் செய்தாயோ, அவ்விதமே இப்பொழுது நீர் என் வார்த்தையைக் காப்பாற்றவேண்டும். நீர் ஆகாயத்திலும், பூமியிலும் எங்கும் சஞ்சரிக்கும்படியான யோக்கியதை யுடையவரானதாலும், சிறந்த பலமுடையவராதலாலும், நீர்தான் சீதையைத் தேடி வரவேண்டும்" என்று சொன்னார். அதைக்கண்ட ராகவன் ஹநுமானிடம் தனது ராமநாமம் வரையப்பட்ட கணையாழியைக் கொடுத்து, "நீ எந்தவிடத்தில் சீதையைக் காண்கிறாயோ அந்தவிடத்தில் அவளிடம் இக்கணையாழியைக் கொடுத்தால் நீ என்னிடமிருந்து வருவதாக அவளறிந்துகொள்வாள்" என்றுரைத்தார். பிறகு சகல வானரர்களும் ஹிமாசலத்திற்கும் விந்தியமலைக்கும் மத்தியிலுள்ள சராவதியென்ற நதிக்கரையிலிருந்து சகல திக்குகளிலும் புறப்பட்டனர். அவ்வரவர்கள் தங்கள் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட திசைகளில் பலவிடங்களில் சீதையைத் தேடிச்சென்றனர். கிழக்கு, வடக்கு, மேற்குத் திக்குகளிற் சென்றவர்கள் எங்கும் சீதை காணப்படவில்லை யென்றும், ராவணனுமில்லையென்றும் திரும்பி வந்துவிட்டார்கள். தெற்கில் சென்றவர்கள் விந்திய மலையில் ஒரு ராக்ஷசனைக் கண்டு அவன்தான் ராவணனோ வென்றெண்ணி அவனைக் கொன்றுவிட்டுப் பின் பலவிடங்களில் தேடியலைந்து கொண்டிருக்கையில் அதிக தாகத்தால் பீடிக்கப்பட்டு, ஒரு குகையையும், அதனுள்ளிருந்து நனைந்த இறக்கைகளுடன் வரும் பக்ஷிகளையுங் கண்டு, உள்ளே தீர்த்தமிருக்குமென்றெண்ணி உள்ளே சென்றனர். பல மாதங்கள் சென்றபின் வெளிச்சத்தையும், பழங்களுடன் கூடின விருக்ஷங்களையும், ரமணீயமானதொரு தடாகத்தையும், அற்புதமானதொரு கட்டடத்தையும், அதிலொரு அழகான ஸ்திரீ ஓர் ஆசனத்திலிருந்துகொண்டு தவம் செய்வதையும் கண்டனர். ஹநுமான் அவளைப் பார்த்து, "அம்மா, நீங்கள் யார்?" என்று வினவ, அவள், "நான் மேருஸாவர்ணி யென்றவரின்

புத்திரி. நான் இங்கு ஹேமையென்ற தேவதாசிக்குக் கைங்கரியம் செய்துகொண்டிருந்தேன். அவள் இப்பொழுது இங்கில்லை. நான் மட்டும் இவ்வனத்தில் வசிக்கிறேன். நீங்கள் யார்? இங்கு எதற்காக வந்தீர்கள்''? என்று கேட்டாள். ஹனுமான், "நாங்கள் ராமதூதர்கள். ராமபத்தினியைத் தேடிவரும்போது தாகத்தால் வருந்தி இந்த குகைக்குள்ளிருந்து நனைந்த இறக்கைகளுடன் வெளியே வந்த பக்ஷிகளைக் கண்டு உள்ளே தண்ணீர் இருக்கு மென்று இங்கு வந்தோம். வரவர ஒரே இருளாய் இருந்தது. கடைசியில் இங்கு வந்தோம். இங்கு வருவதற்குள் எவ்வளவோ காலமாகிவிட்டதுபோல் காண்கிறது. நாங்கள் மறுபடியும் வந்த வழியில் செல்வதானால் வெகுகால மாகுமாதலால் தயவுசெய்து எங்களை எப்படியாவது சீக்கிரம் வெளியே போகும்படி செய்ய வேண்டும்'' என்று வேண்ட சுவயம்பிரபையென்ற அந்த ஸ்திரீ சந்தோஷத்துடன், "நீங்கள் எல்லோரும் உத்தமமான தீர்த்தத் தைக் குடியுங்கள். பழங்களையும் சாப்பிடுங்கள். கவலை வேண் டாம். உங்களெல்லோரையும் வெளிப்படுத்துகிறோம்'' என்று சொல்லவே அவர்கள் யாவரும் ஆகாரத்தை உட்கொண்டனர். அந்த ஸ்திரீ பின் யாவரையும் கண்களை மூடிக்கொள்ளச் சொல்ல எல்லோரும் அவ்விதமே செய்தனர். உடனே அவள் எல்லோ ரையும் வெளிப்படுத்தித் திக்குகளைக் காட்டிவிட்டு மறைந்தனள். அப்பொழுது அங்கதன் வானரர்களைப் பார்த்து, "சுக்ரீவன் நம்மை யமபட்டணம் வரையிற் சென்று தேடச் சொன்னான். அதில் கால்பாகம்கூட நாம் இன்னும் தேடவில்லை. காலமும் பல மாதங்கள் ஆகிவிட்டன. சீதையைக் காணமல் போனால் அவன் நம்மைக் கொல்வது நிச்சயம். ஆதலால் நாம் இங்கேயே உயிர் துறப்போம்'' என்று சொல்ல, எல்லோரும் சீதையைக் கண்டு பிடிக்க முடியாத துக்கத்தாலும், சுக்ரீவனிட மிருந்த பயத்தாலும் தங்கள் பிராணனை விடுவதற்காகத் தர்பத்தைப் பரப்பிப் படுத் தனர். யுவராஜாவான அங்கதனும் படுக்க ஆரம்பித்தபோது அந்தப் பர்வதக் குகையிலிருந்து ஒரு கழுகு வானரர்களைச் சாப் பிடவேண்டுமென்ற எண்ணத்துடன் வெளிவந்தது. அதைக் கண்ட அங்கதன், 'இதைப்போன்ற ஜடாயுவென்ற கழுகுப் பக்ஷி ராமனுக்குபகாரம் செய்து பிராணனை விட்டது. நம்மால் அது கூட முடியவில்லை' என்று சொல்லிக்கொண்டு துக்கத்துடன் படுக்க, அவன் சொன்னதைக் கேட்டு அந்தக் கழுகு, "யாரப்பா ஜடாயு பிராணனை விட்டதாகச் சொன்னவன்? விஷயத்தைப்

பூர்த்தியாகச் சொல்" என்று கேட்க, அங்கதன் ஜடாயு ராவண னுடன் சண்டைசெய்து கொல்லப்பட்ட விஷயத்தை வெளிப்படுத் தினன். அது கேட்டு, ஜடாயுவின் தமையனை சம்பாதியென்ற அந்தக் கழுகு அதிக துக்கமடைந்து, தன்னுடைய இறக்கைகள் ஏற்கனவே சூரிய கிரணங்களால் எரிந்துபோனபடியால் தன்னைச் சமுத்திரக் கரையில் கொண்டுபோய் விடும்படி வேண்ட அங்கத னும் அவ்விதமே செய்தான். அங்கு சம்பாதி தன் தம்பிக்குத் தான் செய்யவேண்டிய தர்ப்பண காரியங்களை முடித்துக்கொண்டு முன்னிருந்த இடத்திற்கே கொண்டுபோய்ச் சேர்க்கும்படி வேண் டவே, அங்கதன் அவ்விதமே சேர்த்தான். பின் சம்பாதி அவர் களை யாரென்று கேட்க, அவர்கள் தங்கள் விஷயத்தைச் சொன் னார்கள். அப்பொழுது சம்பாதி, "ஏ, வீரர்களே! நானும் என் தம்பியும் ஏற்கனவே போட்டிபோட்டுகொண்டு ஆகாயத்தில் சூரிய மண்டலம் வரையில் பறந்தபோது சூரிய கிரணங்களால் என் இறக்கைகள் எரிந்துவிட நான் இந்தப் பர்வதத்தில் விழுந்தேன். என் தம்பி ஜலஸ்தானத்தில் விழுந்தான். நான் அவன்மேல் சூரிய கிரணங்கள் படாமல் தடுத்ததால் அவன் இறக்கைகள் எரிக் கப்படவில்லை. நான் வெகுகாலம் பிரக்ஞையில்லாமலிருக்கையில் கினேகிதரான ஒரு ரிஷி 'ராமபத்தினியைத் தேடிக்கொண்டு வான ரவீரர்கள் வருவார்கள். நீ அவர்களுக்குச் சீதை இருப்பிடத் தைச் சொன்னால், உனக்கு இறக்கைகள் முளைக்கும்' என்றார். அதன்படியே நீங்களும் வந்திருக்கிறீர்கள். சீதை இலங்கையில் இருக்கிறாள். எங்களுக்கு வெகுதூரம் பார்வையுண்டாதலால், நான் அவளைப் பார்க்கிறேன். நான் வயோதிகன். மேலும் நான் பிரஜைகளைக் காக்கச் செல்லவேண்டும்; நீங்கள் சமர்த்தர்கள் அல்லவா? நீங்கள் இலங்கைக்குச்சென்று சீதையைக் காணுங்கள்" என்று சொல்லவே, அந்த ரிஷியின் வாக்குப்படி அவனுக்கு இறக் கைகள் முளைக்க, அவன் பறந்துசென்றான். சீதையிருப்பிடம் தெரிந்துவிட்டதால் எல்லோரும் சந்தோஷித்தனர். ஆனால் நடு வில் 100யோசனை தூரமுள்ள கடலிருப்பதால், இதில் 'யாரால்எவ் வளவுதூரம் தாண்டமுடியும் சொல்லுங்கள்' என்று அங்கதன் கேட்க ஒருவன் தன்னால் பத்துயோசனை தாண்டமுடியுமென்றும், மற்றொருவன் இருபது யோசனையென்றும் இப்படியே ஒவ்வொ ருவனும் கிரமமாய்ச் சொல்லிக்கொண்டுவர, ஜாம்பவான் தான் கிழவனாதலால் 90 யோசனை தாண்ட முடியுமென்றான். அங்க தன், "நான் 100 யோசனை தாண்டுவேன். ஆனால் திரும்பி

வருவது சந்தேகம்" என்று சொல்ல, ஜாம்பவான், "நீ யுவராஜா வாதலால் நீ செல்லக்கூடாது. ஆனால் இந்த சமுத்திரத்தைத் தாண்டக்கூடியவனைச் சொல்லுகிறேன்" என்றுசொல்லி ஹனுமா னிடம் சென்று, "உத்தமா, நீ சமர்த்தனல்லவா! உன்னை ஸ்தோத் திரம்செய்தால் உனக்குப் பழைய பலம் வந்துவிடுமல்லவா! புஞ்சி கஸ்தலை யென்ற அப்ஸரஸ் அஞ்சனாதேவியாக ஜனித்துக் கேசரி யென்ற வானரனுக்கு வாழ்க்கைப்பட்டிருக்கும்போது ஒரு நாள் பழைய அப்ஸரஸ் ரூபத்துடன் பர்வதத்தில் விளங்கிவர, அவளை வாயுபகவான் ஆலிங்கனம் செய்து, "எனக்குச் சம்மான அற்புத பலமும் அபார வேகமுமுள்ள ஒரு வீரன் உனக்குப் பிறப்பான்" எனச் சொல்லி மறைந்தார். உடனே அவள் ஒரு வானரத்தைப் பெற்றாள். நீதான் அக்குழந்தை. குழந்தையாயிருந்த உனக்குக் காய் கிழங்குகள் கொண்டுவருவதற்காக அவள் குகையில் செல்ல, அப்பொழுது சூரியோதய காலமாயிருந்ததால், அதை ஒரு சிவப் புப்பழமென்றெண்ணி நீ அதைப் பிடிக்கச் செல்ல, குழந்தை யென்று சூரியனும் பேசாமலிருந்தான். அப்பொழுது சூரியனைக் கிரஹிக்கவந்த ராகு அக்குழந்தையைக் கண்டு இந்திரனிடம் சென்று முறையிட்டான். இந்திரன் ஐராவதத்திலேறிக்கொண்டு கோபத்துடன் வர, நீ ஐராவதத்தின்மேல் பாய்ந்தாய். அதனால் அதிக கோபங்கொண்ட இந்திரன் உன்னை வஜ்ராயுதத்தாலடிக்க, அந்த அடியால் உனது ஒரு கன்னத்தில் குழியாகி நீ கீழே விழுந் தாய். அப்பொழுது ஒரு பாறையிலடிபட்டு மற்றொரு கன்னத்தி லும் குழியாயிற்று. அப்படி அடிபட்டதால்தான் உனக்கு ஹனு மான் என்ற பெயர் உண்டாயிற்றல்லவா? கீழே விழுந்தவுடன் நீ மூர்ச்சையடைந்ததால் வாயுபகவான் உன்னை உடனே தூக்கிக் கொண்டு, கோபத்தால் உலகில்எங்கும் வாயுவில்லாமலிருக்கும்படிச் செய்துவிட்டுக் குழந்தையுடன் ஒரு குகையில் மறைந்துவிட்டார். தேவர்கள் மிகக் கஷ்டமடைந்து பிரம்மதேவனைப் பிரார்த்தித் தனர். சகல தேவர்களுடன் பிரம்மா அக்குகைக்கு வந்து, "வாயு பகவானே, நீர் கவலைப்படவேண்டாம். உமது குழந்தையை நான் பிழைக்கச் செய்கிறேன். குழந்தையுடன் வெளியில் வாரும்". என்று சொல்லவே, அவரும் குழந்தையுடன் வெளியே வந்தார். பிரம்மா அக்குழந்தையைத் தனது கையால் தடவிவிட, அக்குழந் தையும் எழுந்தது. உடனே பிரம்மா தேவர்களைப் பார்த்து, "எல்லோரும் இவருக்கு வரங்களைக் கொடுங்கள். இவரால் பல காரியங்கள் நடைபெறவேண்டும்" என்று சொல்ல, தேவர்களும்

அவ்விதமே பரம சந்தோஷத்துடன் வரம் கொடுத்தார்கள். ஒவ்வொருவரும் தங்கள் அஸ்திரங்களாலும், ஆயுதத்தாலும் ஹனுமானுக்கு சாவில்லை யென்று சொல்லி சிரஞ்சீவித்வத்தையும் கொடுத்தனர். பிரம்மா சந்தோஷித்து, "என் அஸ்திரம், பாசம் முதலியவற்றாலும் உமக்கு வதம் கிடையாது" என்று சொல்லிவிட்டுச் சென்றார். (பிரம்மா ஹனுமானிடம் 'ஒரு யுத்தத்தில் எனது அஸ்திரமான பிரம்மாஸ்திரம் வந்தால் அதற்கு நீ ஒரு தடவை கட்டுப்படவேண்டும்' என்று கேட்டுக்கொண்டதாக சிலர் சொல்வது உண்மையல்ல— சித்தாந்த புத்தகத்தைப் பார்க்கவும்) இப்படி எல்லா தேவர்களிடமும் வரங்கள் பெற்ற நீர் உமது குரங்குஜாதி வழக்கப்படி பல விடங்களில் பல பெரியோர்களிடம் சேஷ்டைகள் செய்ததால், அப்பெரியோர்களான ரிஷிகள் 'உமது பலம் உமக்குத் தெரியக்கூடாது' என்று சபித்துப் பின், 'நீர் குழந்தையாயிருக்கும்போது சூரியனைப் பிடித்த கதையை யாராவது உமக்குச் சொல்லி ஞாபகப்படுத்தினால் உமது பழைய பலம் உமக்கு வரட்டும்' என்று சொல்லியிருக்கின்றனர். இப்பொழுது நான் அவ்விஷயத்தை உமக்கு ஞாபகப்படுத்தியதால், உமது முழுபலத்தை யடைந்துவிட்டீர். நீர் சுக்ரீவனது ஆக்ஞையால் பயந்திருக்கும் இத்தனை வானரர்களை ரக்ஷிக்கவேண்டும்" என்று வேண்டினார். ஹனுமானும் அதிக பலத்தைப்பெற்றுச் சமீபத்திலிருந்த மகேந்திர மலையிலேறிக்கொண்டு, வானரர்களுக்கு அபயப்பிரதானம் செய்து, சமுத்திரத்தைத் தாண்டுவதற்குத் தயாராக இருந்தார்.

---

ஓம்.

ஸ்ரீராமஜெயம்.

# சுந்தரகாண்டம்.

இவ்விதம் சாக்ஷாத் ஹனுமான் தன்முழுபலத்துடன் தன்து தேகத்தை விருத்திசெய்துகொண்டு வானரர்களை நோக்கி, "நான் இப்பொழுதே இலங்கைக்கு அதிவேகமாய்ச் செல்வேன். அங்கு சீதைக் காணப்படாவிட்டால் அதே வேகத்துடன் தேவலோகம் செல்வேன். அங்கும் சீதையில்லாவிடில் பாதாளம் போய்ப் பார்ப்பேன். எங்கும் சீதையைக் காணவிட்டால், திரும்பவும் இலங்கைக்கு வந்து, அதைப் பிடிங்கிக்கொண்டு ராவணனையும் கட்டிக் கொண்டுவருவேன்" என்று சொல்லித் தனதிருகைகளையும் கூப்பிக்கொண்டு, சூரியனையும், வாயுவையும், பிரம்மதேவனையும், மகேந்திரனையும், சர்வ பூதங்களையும் நமஸ்கரித்துக் கைகளைநீட்டிக் கொண்டு, காதுகளை நெறித்துக்கொண்டு சற்று உட்கார்ந்த பாவத்திலிருந்துகொண்டு மலையிலிருந்து கிளம்பினார். இவர் உட்கார்ந்து கிளம்பும்போது பர்வதம் அப்படியே கீழே அமிழ்ந்து விட்டது. பிறகு அவர் மேலேஎழ, மலையும் மேலே கிளம்பிற்று. சகல தேவர்களும் பார்த்துக்கொண்டிருக்க, ஹனுமான் மிகவும் வேகமாகச்சென்றார். அவருடைய நிழல் அப்பொழுது சமுத்திர ஜலத்தில் 30 யோசனை நீளமும் 10 யோசனை அகலமுமுள்ளதாயிருந்தது. அவரது கை, கால் வேகத்தால் காற்று மிக வேகமாய் வீச, சமுத்திரஜலம் அல்லோலப்படுவதைக் கண்ட சமுத்திர ராஜன் எதனால் இவ்விதம் சமுத்திரம் பாடுபடுகிறது எனக் கவனித்து, ஹனுமானுடைய காற்றுவேகம் என்றறிந்து, ராமனுடைய வமிசத்தில் ஆதியிலிருந்த சாகரர்களால் தனக்குச் சாகரம் எனப் பெயர் உண்டானதால், இப்பொழுது ஆகாயத்தில் ராமனுக்கு உதவிசெய்வதற்காகச் செல்லும் ராமதூதனுக்கு உபகாரம் செய்தால், அது ராமனுக்கே செய்த உபகாரமாகுமென்றெண்ணி, இந்திரனுக்குப் பயந்து, தன்னுள் மறைந்திருந்திருப்பவனும் பர்வதராஜன் பிள்ளையுமான மைநாகபர்வதத்தைப் பார்த்து, "நீ இப்பொழுது சீக்கிரமாய்ச் சென்று ஆகாயத்தில் பிடிப்பில்லாமல் ராம காரியமாகச் செல்லும் ஹனுமானை உனது சிகரத்தில் இறங்கிச்

சிரம பரிகாரம் செய்துகொண்டு போகச்சொல். அப்படி அவருக்கு உபகாரம் செய்வது ராமருக்கே செய்வதுபோலாம்" என்றுரைக்க மைநாகமும் அங்கீகரித்துச் சந்தோஷத்துடன் அதிவேகமாகக் கிளம்பிற்று. சமுத்திரத்திலிருந்து இப்படி வேகமாகக் கிளம்பிவரும் பர்வதத்தைக் கண்ட ஹனுமான், 'இது ராம காரியத்திற்குத் தடையாக வருகிறது. இது நமது வழியை மறிப்பதற்குள் நாம் அப்புறம் சென்றுவிடவேண்டும்' என்றெண்ணி மேலும் அதி வேகமாய்ச் செல்ல, அதைக் கண்ட மைநாகம் இன்னும் அதிவேகமாய்க் கிளம்பிற்று. ஆனால் அது மேலே வருவதற்குள், ஹனுமான் அதைத் தாண்டிவிட்டார். அப்பொழுது மைநாகத்தின் கொடிமுடியானது அவரது கெட்டியான மார்பில்பட்டு முறிந்துவிழுந்தது. உடனே மைநாகம் அழகான மானிடரூபத்தை யெடுத்துக்கொண்டு கைகளைக்கூப்பி, ஹனுமானை அஞ்சலிபந்தம் செய்து, "உத்தமனே, நான் உம்மைத் தடுக்கவந்தவனல்லன். உமது சிரமத்தைத் தீர்த்துக்கொள்ளச் சற்றுநேரம் நீர் என்மேல் தாங்கிப் போகவேண்டுமென்ற எண்ணத்துடன் தான் நான் மேலே கிளம்பினேன்" என்று சொல்ல, ஹனுமான், "நான் ராமகாரியமாய்ச் செல்கிறேன். மிகவும் சீக்கிரம் செல்ல வேண்டும். எனக்குச் சிரமமில்லை. நான் திரும்பிவரும்போது உம்மைத் திருப்தி செய்விக்கிறேன்" என்றுரைத்து அந்த மலையைத் தன் கையால் தொட்டுவிட்டுச் சென்றார். அவரது சாமர்த்தியத்தை யறியவேண்டுமென்று தேவதைகள், நாகங்களுக்கு மாதாவான ஸுரஸாதேவியைக் கூவி, "அவரைப் பரீக்ஷித்து வாரும்" என்று சொல்லியனுப்ப, அவள் ஒரு ராக்ஷசிரூபத்துடன் ஹனுமான் செல்லும் வழியில் இருந்துகொண்டு, "ஏ, வானர சிரேஷ்டனே, நீர் ஈசுவரனால் எனக்குணவாக அனுப்பப்பட்டிருக்கிறீர். ஆதலால் என் வாயில் பிரவேசித்துத்தான் செல்ல வேண்டும்" என்று சொல்லித் தன் வாயை 10 யோசனை அகலம் திறந்தாள். ஹனுமான் முதலில் இவளைக்கண்டதும் தன் சரீரத்தைச் சுருக்கிக்கொண்டு, அவள் 10 யோசனை திறந்ததும், தான் 20 யோசனையாகத் தன் சரீரத்தை உயர்த்த, அவள் மேலும் அதிகமாக விருத்தியாகி வரவரத் தானும் விருத்தியாகிக் கடைசியாக அவர் 90 யோசனையாக, அவள் 100 யோசனை தன் வாயைத்திறந்தாள். உடனே அவர் அதிவேகமாய்த் தன் சரீரத்தைக் கட்டைவிரல் பிரமாணமாக்கி, அவள் வாயில் குதித்து வெளியே வந்து அவளைப் பார்த்து, "அம்மா, தாக்ஷாயணி, நான் உம்மை

நமஸ்கரிக்கிறேன்'' என்று சொல்லிப் புறப்பட்டார். ஸுரஸாவும், "மங்களத்துடன் சென்றுவாரும்'' என்று வாழ்த்தி மறைந்தாள். (ஹனுமார் 90 யோசனையும், ஸுரஸா 100 யோசனையும் விருத்தி யடைந்தது பிரக்ஷிப்தம் அல்ல. அதிகபாடம் அல்லவென் பதைச் சித்தாந்த புத்தகத்தில் காண்க).

பிறகு ஹனுமான் வேகமாய்ச் செல்லும்போது, நிழலைப் பிடித்து இழுத்து அதன்மூலம் வஸ்துக்களைப் பிடித்துண்பவளான அங்காரகை (சாயாக்ராஹி) என்பவள், ஹனுமானுடைய நிழலைப் பிடித்து அவரை விழுங்குவதற்காக இழுத்தாள். ஹனுமான் தனது உடலை மிகவும் சிறியதாகக் குறுக்கிக்கொண்டு, அவள் வாயில் பிரவேசித்து, (தன் இஷ்டப்படி ரூபம் எடுக்கும் சக்தியுள் ளவராதலால்) வயிற்றில் சென்று, அங்கு தன் சரீரத்தை விருத்தி செய்துகொண்டு அவள் வயிற்றைக் கிழித்து அவளைக் கொன்று விட்டு, அங்கிருந்து கிளம்பி இலங்கையின் வெளிப்புறத்திலிருக் கும் பர்வதத்தின்மேல் குதித்தார். பிறகு இலங்கையைக் கவ னித்து, 'இதில் பிரவேசிக்க முடியாதுபோலிருக்கிறதே' வென்று சற்று யோசித்து, 'நாம் ஏழுபேர் வரையில் இந்த இலங்கையில் பிரவேசிக்க முடியும்' என்று தீர்மானித்துப் பின், 'சீதை உயிருட னிருக்கிறாளாவென்பதை முதலில் அறியவேண்டும். ராக்ஷசர்கள் நிரம்பியிருக்கும் இடத்தில் யாவரு மறியாமல் எவ்விதம் நான் சீதையைத் தனித்துக் காணமுடியும்' என்று யோசித்துக் கடைசி யாக, 'பிரதோஷகாலத்தில் இலங்கையில் பிரவேசிப்பேன்' என்று தீர்மானித்தார்.

பிரதோஷகாலம் வந்ததும் பூனையின் பிரமாணத்தையொத்த ரூபத்துடன் இலங்கையின் வடக்குக் கோட்டைவாயில் வழியாகப் பிரவேசித்தார். அப்படிப் பிரவேசிக்கும்போது அந்தப் பட்ட ணத்தின் அதிஷ்டான தேவதையான லங்காதேவி அவரைக் கண்டு கோபத்துடன், "ஏ, வானரா! நீ யார்? இங்கு எதற்காக வந்தாய்?'' என்று கேட்க ஹனுமான், "இந்த லங்காபட்டணம் அதிக விமரிசையுடையது என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அதைப் பார்த்துப் போகலாமென்று வந்த என்னைத் தடுக்கும் நீ யாரம்மா?'' என்று வினவ, "தேவர்களாலும் வரமுடியாத இப் பட்டணத்தில் நீ பிரவேசிக்கவாவது?'' என்று பகர்ந்து கோபத் துடன் தன் கையால் அவரை ஓங்கி அறைந்தாள். அதை

அலட்சியம்செய்து ஹனுமான், 'நாம் இவளைத் திருப்பியடித்தால், இவள் தாங்கமாட்டாள். ஆனால் இவளை அடிக்காமலும் இருக்கக் கூடாது. எப்படி யடித்தால் இவள் இறக்கமாட்டாளோ அப்படி அடிப்பேன்' எனத் தீர்மானித்துத் தனது இடதுகைவிரலால் தெறித்துவிட, அத்தேவதை அதைப் பொறுக்க முடியாமல் கீழே விழுந்து, "ஏ, உத்தமா, எனக்கு பிரம்மாவின் சாபம் ஒன்றுண்டு. 'எக்காலத்தில் ஒரு வானரம் உன்னை அடிக்குமோ அப்பொழுது லங்கைக்கு நாசம் வந்ததாகத் தெரிந்துகொள்' என்று தெரிவித்திருப்பதால், அந்த அழிவுகாலம் இப்பொழுது வந்துவிட்டது. நீர் க்ஷேமமாய்ச் சென்று சீதையைக் கண்டுவாரும்" என்றுரைத்து மறைந்தாள்.

பின்பு ஹனுமான் வெகு சந்தோஷமாய்த் தனது இடது காலை உள்ளேவைத்துப் பட்டணத்தில் பிரவேசித்து, ஒவ்வொரு ராக்ஷசனுடைய வீட்டிலும், அஸ்வசாலை, கோசாலை, ரதசாலை, உத்யாவனம், அந்தப்புரம் முதலிய பலவிடங்களிலும் ஒருதடவைக்குப் பலதடவை தேடி, சீதையைக் காணுமல் கவலையடைந்து, ராவணனின் அந்தப்புரத்திற்குச் சென்று, ராவணனது ஸ்திரீகள் எல்லோரையும் கண்டு, 'இவள் சீதையல்ல, இவள் சீதையல்ல' எனத் தள்ளிப் பின்பு 'நான் இவ்விதம் பெண்கள் கூட்டத்தில் புகுந்தேனே. என் விரதத்திற்குப் பங்கம் வந்ததோ!' என்று சற்றுலோசித்துப் பின் ராவணனையும் மந்தோதரியையும் கண்டு, அவள்தான் சீதையோவெனச் சந்தேகித்துப் பின் அவள் சீதையல்லவென்று தீர்மானித்துப் பின்னும் எல்லாவிடங்களிலும் அன்றிரவுக்குள் தேடியும் சீதைக் காணப்படவில்லை. 'என்ன செய்வேன்? சீதையைக் காணேமே! எங்குசென்றுதேடுவேன்?' என்று துக்கப்படும்போது, அசோகவனம் தென்படவே, 'இது நாம் பாராத இடம் அல்லவா! இங்கு நான் கட்டாயம் சீதையைக் காண்பேன்' என்றெண்ணி ராமன், லக்ஷ்மணன், சீதை, ருத்திரன், யமன், வாயு, சந்திரன், சூரியன், மருத்துக்கள் முதலியவர்களைச் சேவித்து அசோகவனத்தில் பிரவேசித்தார். அங்கு மரத்திற்கு மரம் தாவி ஒவ்வொரு இடமாகத் தேடிக்கொண்டுவந்து விருக்ஷங்களுக்கு ராஜவிருக்ஷம்போல் விளங்கிவந்த சிம்சுபா விருக்ஷத்தைக் கண்டு, அதன்மேலேறிக்கொண்டு கீழே பார்க்கையில் மேடைகளில் ஏகாக்ஷி முதலிய விகாரமான ராக்ஷசிகள் உட்கார்ந்திருப்பதையும், அவர்களிடையே உபவாசத்தால் மெலிந்த தேகமுள்ள

வளான சீதை வீற்றிருப்பதையும் கண்டார். (இந்திரன் சீதைக்குப் பாயசம் கொண்டுவந்து கொடுக்கவில்லை— சித்தாந்த புத்தகத்தைப் பார்க்க). ராமன் சொன்ன அடையாளங்களால் அவள் தான் சீதையெனத் தீர்மானித்து, 'இவ்வளவு ராக்ஷசிகளிடையில் அவளை யெப்படித் தனித்துக் காண்பது' என்று யோசித்துக் கொண்டிருக்கையில், சில ஆபரணங்களின் சப்தம்கேட்டு, அது என்னவென்பது கவனிக்க, ராவணன் பல ஸ்திரீகளால் சூழ்ப் பட்டுவருவதைக் கண்டார். 'நானிங்கிருப்பதை இவன் கண்டால் நமது காரியம் கெட்டுவிடுமாதலால் இவன் கண்ணுக்குப் புலப் படாமல் இருக்கவேண்டும்' என்றெண்ணி இலைகளின் மத்தியில் நன்ருக மறைந்துகொண்டு கவனித்தார். ராவணன் வருவதைக் கண்ட சீதை திடுக்கிட்டெழுந்து, குத்திட்டு உட்கார்ந்து, தன் வஸ்திரத்தால் உடம்பு முழுவதையும் மூடிக்கொண்டு, தலை குனிந்து கண்ணீரை ஆருகப்பெருக்கி துக்கப்பட்டுக்கொண்டிருந் தாள். ராவணன் அவளை நெருங்கி, "ஏ, சீதே, நீ ராமனை நினைத்து துக்கிப்பதை விட்டுவிடு. நான் உனக்குச் சகல வைப வத்தையும் கொடுக்கிறேன். இந்த லங்காராஜ்யத்தையே உனக் குப் பட்டாபிஷேகம் செய்து உனக்கு நான் கைங்கரியம் செய்கி றேன். நீ எனக்குப் பட்டமஹிஷியாய் வந்துவிடு" என்று ரைக்கச் சீதை மிகுந்த சீற்றங்கொண்டு ஒருத் துரும்பைக் கிள்ளிப்போட்டு, "நீ என்னிடத்தில் வைத்த மனதை மாற்றிவிட்டு உன் மனைவிகளிடத்தில் மனதைக்கொள். நீ என்ன இழிவான காரியம் செய்தாய்! நீ வீரனுகில் ராமனிருக்கும்போது என்னை எடுக்கமாட்டாயா! நீ பிழைத்திருக்க வேண்டுமாளுல் என்னை ராமனிடத்தில் விட்டுவிட்டு அவரிடம் சரண் புகுந்தால், அவர் உனக்கு உயிர்ப்பிச்சை யளிப்பார். நீ என்னிடம் இவ்விதம் தாறு மாருய்ப் பேசுவதற்குத் தண்டனையாக நானே உன்னை எரித்து விடுவேன். ஆனல் அவ்விதம் செய்ய எனக்கு என் நாதன் உத்தி ரவில்லை" என்று அவனைத் தூஷித்தாள். ராவணன் கோபங் கொண்டு ஏகாக்ஷி முதலிய ராக்ஷசிகளைக் கூப்பிட்டு, "நீங்களெல் லோரும் இவளைப் பயமுறுத்துங்கள். இவள் என் சொற்படி நடப்பதற்கு வேண்டிய முறையில் இவளைத் துன்புறுத்துங்கள். ஆனல் கொன்றுவிடாதீர்கள்" என்று கட்டளையிட்டுச் சென்ருன். இவன் கட்டளைப்படியே ராக்ஷசிகளும் தங்கள் ஆயுதங்களையெடுத் துக்கொண்டு சீதையைப் பயமுறுத்தச் சீதைப் பலவாறு துக்கித் தாள். அப்பொழுது அவர்கள் ராமனை இகழ்ந்தும் ராவணனைப்

புகழ்ந்தும் பேசினர். சீதை, "நான் ராமனைத் தவிர மற்ற யாரையும் மனதினுலும் நினைக்கமாட்டேன்" என்று சொல்ல, ராக்ஷசிகள் அவளை இன்னும் அதிகமாகத் துன்புறுத்தினர்கள். அப்பொழுது திரிசடையென்பவள் (இவள் விபீஷணன் மக ளல்ல— சித்தாந்த புத்தகத்தைப் பார்க்க) அவர்கள் செய்கை யைக் கண்டித்து, "சீதை ராமனுடன் மங்களஸ்நானம் செய்து விமானத்திலேறிக்கொண்டு வடக்கே போவதாயும், ராவணன் கருத்த ரூபமுள்ள ஒரு ஸ்திரீயால் தெற்கே அழைத்துப் போகப் படுவதையும்; கும்பகர்ணன் ஒட்டகத்தின்மேலும், இந்திரஜித்து முதலேமேலும் ஏறிக்கொண்டு தெற்கே செல்வதையும், ராக்ஷசர்க ளனைவரும் தலைகீழாய்க் கோமயக்குழியில் விழுவதையும், ஒரு வானரன் இந்த இலங்கையை எரிப்பதையும், விபீஷணன் இந்த ராஜ்யத்தை யாளுவதையும் என் கண்ணுர நான் கனவில் கண் டேன். இவளை விட்டுவிடுங்கள்" என்றுசொல்ல, ராக்ஷசிகள் தங்களைச் சேர்ந்தவளின் வார்த்தையென்றங்கீகரித்துச் சீதையை விட்டுவிட்டு எல்லோரும் படுத்துக்கொண்டு தங்கள் நினைவுடன் தூங்கிக்கொண்டிருந்தனர். அப்பொழுது சீதை மகா துக்கத்து டன், 'நான் ராமலக்ஷமணர்களுக்குக் கவலையை உண்டாக்கிவிட் டேன். என்னுலல்லவோ அவர்கள் துன்பப்படுகின்றனர். இன் னும் இரண்டுமாதம் சென்றுல் ராவணன் என்னைக் கொல்வது நிச் சயம். ஆதலால் நானுகவே இப்பொழுது உயிரை விடுவேன்' என எண்ணிப் பின், 'நாதா, நான் உயிரைவிடும் சமயத்திலும் உமது முகமண்டலத்தைத் தரிசிக்கும் பாக்கியத்தை நான் பெற வில்லையே' எனப் பலவிதமாய்ப் பிரலாபித்துப் பின்னும் சற்று யோசித்து, 'என் உயிரைவிடவும் எனக்குச் சுவதந்திரமில்லையே. நான் என்னசெய்வேன். மானிடஜன்ம மெடுக்கலாகாது. அதிலும் பெண் ஜன்மம் ஆகாது' என்றுசொல்லி மறுபடியும், 'ராவணன் என்னைக் கொல்வதற்குள், நானுகவே உயிர் துறப்பதே நன்று' என்றெண்ணி அந்த சிம்சுபாவிருக்ஷத்தின் பின்புறம் சென்று, ஒரு கிளையைத் தழைத்து அதில் தனது நீண்ட கேசபாரத்தினுல் சுருக்குப் போட்டுக்கொண்டு, கழுத்திலும் போட்டுக்கொள்ளப் போனதைக் கண்ட ஹனுமான், 'நாம் வேடிக்கைபார்க்க வரவில் லையே! தன் பர்த்தாவைப் பிரிந்து தபிக்கும் இவளுக்கு இவளது பர்த்தாவான ராமரின் கதையைச் சொன்னுல்தான் துக்கம் போகும்' என நினைத்துச் சகல ஜனங்களும் பேசுகிற சம்ஸ்கிருத பாஷையில் ராமகதையை வர்ணித்துச் சொல்லக் கேட்ட சீதை,

'ராவணனது பட்டணத்தில் ராமகதையேது. இது என்ன ஆச்சரியமாயிருக்கிறதே' என்று சப்தம் வந்த திசையை நோக்க, மரத்தில் ஹனுமானைக்கண்டு, 'இது என்ன கனவா?' என்று சந்தேகித்துப் பின் அது உண்மையான தோற்றம் என்றறிந்து ஹனுமானைக் கவனித்தாள். அவர் சீதையிடம், "அம்மா, நான் ராம தூதன். வேதங்கள், வேதாந்தங்கள், பிரம்மாஸ்திரம் முதலிய யாவற்றையுமறிந்த உமது பர்த்தாவான ராமர் உம்மை க்ஷேமம் விசாரித்தார்" என்று சொல்லக்கேட்ட சீதை, "நீ ராமனிடமிருந்து வந்தவனாகில், அவருடைய அங்க அடையாளங்களைச் சொன்னால், நான் நம்புவேன்" என்றுரைக்க ஹனுமான் அவருடைய சகல அங்க அடையாளங்களையும் சொல்லி ஸ்ரீ ராமநாமம் வரையப்பட்ட மோதிரத்தைக் கொடுத்தார். அதை சீதை களிப்புடன் பெற்றுக்கொண்டு, அதிலுள்ள ஸ்ரீ ராமநாமத்தைக் கண்டு மிகுந்த பிரேமையுடன் அதைக் கண்களில் ஒத்திக்கொண்டு, அப்பொழுதே தான் ராமனை யடைந்துவிட்டதாய்ச் சந்தோஷித்தாள்.

அப்பொழுது ஹனுமான், "அம்மா, நீர் என் தோளில் ஏறிக்கொண்டால், நான் தங்களை ராமனிடத்தில் கொண்டுபோய் விடுகிறேன்" என்றுரைக்க சீதை, "நான் ராமரைத் தவிர மற்றவரை என் மனதிரத் தொடமாட்டேன். தவிரவும் இவ்வளவு குட்டையாயிருக்கும் நீ என்னை எவ்விதம் தூக்கிச்செல்ல இயலும்? நீ உனது குரங்கு குணத்தைக் காண்பிக்கிறாயே" என்று சொன்னாள். உடனே ஹனுமான் அவள் தன்னை யறிதற்பொருட்டுத் தனது பயங்கரமான விஸ்வரூபத்தை யெடுத்து, "அம்மா, நான் அபார பலமுடையவன். யாரும் என்னை ஒன்றும் செய்யமுடியாது" என்றார். அப்பொழுது சீதை, 'ஆஞ்சனேயா, அதிருக்கட்டும். நீ என்னைக்கொண்டுபோகும்போது ராக்ஷசர்கள் எதிர்த்தால் அவர்களுடன் சண்டைபோடுவாயா, என்னைக் காப்பாற்றுவாயா என்னசெய்வாய்? ஆதலால் அந்த எண்ணம் வேண்டாம். ராமரே வந்து என்னை அழைத்துச்செல்லட்டும்" என்றுசொல்ல ஹனுமான் தனக்கு ஏதாவது அடையாளம் கொடுக்கும்படி வேண்ட, சீதை வஸ்திரத்தில் முடிந்துவைத்திருந்த சூடாமணியைக் கொடுத்துக் காகாசுர விருத்தாந்தத்தையும் சொல்லி, "நீ ராமனிடம் இந்தச் சூடாமணியைக் கொடுத்து இக்கதையையும் சொல். மேலும் நானும் என் நாதரும் தனித்திருந்த காலத்தில் என் நெற்றியில் பொட்டு கலைந்திருந்தபோது என்நாதர் மனோசிலை

யென்ற பச்சிலையைக்கொண்டு என் கன்னத்தில் பொட்டுவைத்த விஷயத்தையும் சொல்லலாம்'' என்றாள். அதைக் கேட்டுக் கொண்ட ஹனுமான் தான்போய்வர உத்திரவு கேட்டார். சீதை, ''இன்று தங்கி நாளை செல்லலாம்'' என்று சொல்ல, ஹனுமான் பேசாமல் கேட்டுக்கொண்டிருந்து அவ்விடத்தைவிட்டுச் சற்று வெளியே வந்து, ''நான் சீதையைக் கண்டாகிவிட்டது. ராம னிடம் சென்றால், 'ராவணனுக்கு என்னபலம். எந்த பலத்தால் அவன் சீதாபஹரணம் செய்தான்?' என்று கேட்டால், 'அதெல் லாம் எனக்குத் தெரியாது' என்று எப்படிச்சொல்வது? ஆதலால் நான் இப்பொழுதே ராவணனது பலத்தை யறிவேன்'' என்று யோசித்து, அசோகவனத்தை யழிக்கவே, காவலாளிகள் எதிர்க்க, அவர்களனைவரையும் கொன்றார். இவைகளைக் கண்ட ராக்ஷச ஸ்திரீகள் அவனது ரூபத்தைக் கண்டு பயந்து சீதையிடம் வந்து, ''இதோ இவ்வனத்தை யழிப்பவன் உன்னிடம் பேசிக்கொண்டி ருந்தானே, இவன்யார்?'' என்றுவினவ, ''இந்த அசோக வனத்தை யழிக்கும் இந்த ரூபத்தை நான் அறியவில்லை. இது பயங்கரமா யிருப்பதால் நானும் அஞ்சுகிறேன். பாம்பின்கால் பாம்புக்கே தெரியும். என்னைச் சேர்ந்தவனை நானேயறிவேன்'' என்று சீதை சத்தியத்தையே சொன்னாள். (சீதை பொய்யே பேசவில்லை. இவ்விஷயத்தில் எவ்வித வியாக்கியானமும் சரியல்ல— சித்தாந்த புத்தகத்தைப் பார்க்க). உடனே அவர்கள் ராவணனிடம்சென்று ''ஒரு வானரம் அசோகவனத்தை யழித்தது. அது சீதையிடம் பேசிற்று. அதைப்பற்றி நாங்கள் அவளைக் கேட்டோம். அவ ளுக்குச் சொல்ல இஷ்டமில்லை'' என்று அறிவிக்க, ராவணன் உடனே பஞ்சசேனாதிபதிகளை யனுப்பினான். அவர்கள் ஹனுமா னால் கொல்லப்பட, சப்தமந்திரி புத்திரர்களை யனுப்ப அவர்களும் கொல்லப்பட்டனர். ''வானரர்களில் மகா பலிஷ்டர்களான வாலி, சுக்ரீவன், ஜாம்பவான், நீலன், மைந்தன், த்விவிதன் முதலிய வரை நமக்குத் தெரியும். ஆனால் இங்கு வந்திருக்கும் வானரம் இவர்களனைவரையும்விட அதிக பலமுள்ளவனாகக் காணப்படுகி றான். என்னசெய்வது?'' என்று கவலைப்பட்டுத் தன் பிள்ளை யான அக்ஷனை யனுப்பி ஹனுமானைப் பிடித்துவர ஏவினான். அக்ஷன் ''நான் அவனைப் பிடித்துவருகிறேன்'' என்று கோபத் துடன் யுத்தகளத்தை நாடிச்செல்ல, அவனைக்கண்ட ஹனுமான் அவனிடம் சற்று பரிதாபம்கொண்டான். ஆனால் அக்ஷன் உக் கிரமாகச் சண்டை செய்யவே, தானும் உக்கிரமாக யுத்தம்புரிந்து

அவனைக் கொன்றார். இதையறிந்த ராவணன் அதிக கோபத்து டன் தனது மற்றொரு பிள்ளையான இந்திரஜித்தை ஏவினான். அவன் தனது சகல ஆயுதங்களுடன் ஹனுமானை எதிர்த்துப் பல பாணங்களைப் பிரயோகித்தான். ஹனுமான் எல்லா பாணங்களை யும் நாசம் செய்துவிட்டதால், அவனைக் கொல்ல முடியாதென அறிந்து, அவனைக் கட்டுவதற்காக பிர்ம்மாஸ்திரத்தை விட, அது ஹனுமானைக் கட்டிவிட்டது. (ஹனுமானைக் கட்டும் சக்தி பிரம் மாஸ்திரத்திற்குக் கிடையாது. தனது பிர்ம்மாஸ்திரத்திற்கு ஒரு தடவை கட்டுப்பட வேண்டுமென்று ஹனுமானிடம் பிரம்மா கேட்கவுமில்லை— சித்தாந்த புத்தகத்தைப் பார்க்க). உடனே ஹனுமான் கீழேவிழ, ராக்ஷசர்கள் சணல் கயிற்றினால் கட்டினார் கள். பிர்ம்மாஸ்திரம் விட்டுவிட்டது. அதைக்கண்ட இந்திர ஜித்து, 'இந்த ராக்ஷசர்கள் காரியத்தைக் கெடுத்துவிட்டார்களே, என்ன செய்வது?' என்று துக்கத்துடன் சற்று ஒருபுறமாய் விலகி நிற்க, அப்பொழுது ராக்ஷசர்கள் ஹனுமானை ராவணனுக்கு எதிரில் கொண்டுபோய் நிறுத்தினார்கள்.

ராவணன் ஹனுமானைக் கண்டு, 'நந்தி இவ்வித வானர ரூபத் தில் வந்தானோ அல்லது பாணாசுரனோ' என்று சந்தேகித்து, பயங் கொண்டுத் தனது மந்திரியிடம், "மந்திரீ! இவன்யார், யாருடைய தூதன் எனக் கேள். ஏதோ காரியமாய் வந்தால், வந்தகாரியத் தைப் பார்த்துக்கொண்டு போகாமல், அசோகவனத்தை யழித்து, அநேகரைக் கொல்லவேண்டிய காரணத்தையும் கேள்" என்று ரைக்க, மந்திரியான பிரகஸ்தன், "ஏ, ஆஞ்சநேயா, நீ யாருடைய தூதன்? எதற்காக வந்தாய்? உண்மையைச் சொல். பொய் புகன் றால் உன் தலை போய்விடும்" என்று கேட்டான். ஹனுமான் மந்திரியைப் புறக்கணித்து, ராவணனை நோக்கி, "ஏ, ராக்ஷசேஸ் வரா, நான் ராமதூதன். சீதையைத் தேடவந்தவன். சீதை யைப் பார்த்தாகிவிட்டது. உம்மைக் கண்டு பேசிப் போக விரும் பினேன். ஆனால் ஸாம, தான, பேத தண்டோபாயங்களில் தண்டோபாயம் தவிற மற்றபடி உம்மைக் காண முடியாதென எனக்குத் தோன்றியதால் நான் இவ்விதம் தண்டோபாயத்தால் உம்மைக் காணவந்தேன். என்னை யெதிர்த்து வந்த எல்லாரும், என்னைக் கொல்லவே வந்தனரேயன்றி, ஒருவராவது, 'நீ யார்? எங்கு வந்தாய்?' என்று கேட்கவில்லை. ஆதலால் என்னைக் காத் துக்கொள்ளவே நான் அவ்வீரர்களைக் கொன்றேனே தவிற

மற்றபடி உமது சேனையை யழிக்கும் எண்ணம் நமக்கில்லை. நான் ராமதூதன். ராமன் விஷ்ணுவின் பலத்திற்குச் சமானமான பல முள்ளவன். எவனாலும் கொல்ல முடிந்தவனல்லன். ராமனால் கொல்லத்தக்கவனை யாரும் ரக்ஷிக்க முடியாது' என்றுரைத்ததால் அதிக கோபங்கொண்ட ராவணன் அவன் தலையை வாங்கும்படி உத்திரவிட்டான். அப்பொழுது சபையிலிருந்த விபீஷணன், "இவன் தூதனாதலால், கொல்லக்கூடாது" என்று சொல்ல ராவணன் "ஆனால் என்ன செய்வது?" என்று வினவ, "தூததண்டனையை இவனுக்குச் செய்யலாம். அதாவது மொட்டையடிப்பது, அங்கஹீனம் செய்வது முதலியன. குரங்கு ஜாதிக்கு வால் பிரதானமாகையால் இவன் வாலில் நெருப்புவைத்து விடலாம்" என்று கூறினான். ராவணனும் அப்படியே வாலில் நெருப்பு வைக்க உத்திரவு செய்தான். உடனே ராக்ஷசர்கள் கந்தத்துணிகளை ஹனுமான் வாலில் சுற்றிக்கட்டி நெருப்புவைத்தனர். ராக்ஷசிகள் மூலம் இவ்விஷயத்தை யறிந்த சீதை யவனை நெருப்புசுடாமலிருக்க அக்னிபகவானைப் பிரார்த்தித்தனள். அக்னியும் சுடாமலிருந்தது. அப்பொழுது ராவணன் ஹனுமானது தேஜஸைக் கண்டு பயந்து அவனை வீதியில் கொண்டுபோய்த் துரத்திவிடும்படி ஆக்ஞாபித்தான். அவ்விதமே வீரர்கள் அவனை இழுத்துச் செல்ல, கொஞ்சதூரம் சென்றதும் அவன் அவர்களை யடித்துவிட்டுப் பக்கத்திலிருந்த வீடுகள் ஒவ்வொன்றிலும் புகுந்து மூன்றிடங்களில் நெருப்பு வைத்தான். இவ்விதம் விபீஷணன் வீடு தவிற மற்றெல்லா வீடுகளையும் எரித்துவிட்டு ஹனுமான் சந்தோஷத்துடன் சமுத்திரக்கரையை யடைந்து வாலை ஜலத்தில் நனைத்தான். அப்பொழுது 'நான் சீதையையுமல்லவா இலங்கையில் எரித்துவிட்டேன்! என்ன மூடச்செய்கை! இனி என்ன செய்வேன்' என்று கவலையுற்று 'நான் தற்கொலை செய்துகொள்வதே உசிதம்' என நினைத்துப் பின்னும் யோசித்து, 'அவள் உத்தமியாதலால் எரிந்திருக்கமாட்டாள்' என்று எண்ணும்பொழுது ஆகாயத்தில் தேவகணங்கள் "சீதை அசோக வனத்தில், சிம்சுபாமரத்தடியில் க்ஷேமமாயிருக்கிறாள்" என்று தெரிவிக்கக் கேட்டதும் ஹனுமான் பரம சந்தோஷத்துடன் அங்குசென்று சீதாதேவியைக் கண்டு தான் சென்றுவர உத்திரவு கேட்க, சீதை, நான் இந்த மாதத்திற்கு மேல் உயிருடனிருக்கமாட்டேனென்று ராமனிடம் சுக்ரீவனெதிரில் தெரிவி" என்றாள். ஹனுமானும் அவளைச் சமாதானப்படுத்தி, அங்கிருந்து புறப்பட்டுச்

சமுத்திரத்தைத் தாண்டி வரும்போது வழியில் மைநாகபர்வதத்தைத் திருப்திசெய்து அக்கரையில் சேர, 'கண்டேன் சீதையை' என்று ஹநுமானுடைய சப்தத்தைக் கேட்ட வானரர்கள், 'இவர் காரிய சித்தியுடன் வந்திருக்கிறார்' என்று ஆனந்தித்து, அவர் தங்களுக்கு உயிர்பிக்ஷை கொடுத்தவராதலால் அதிப் பிரேமையுடன் அவரைக் கட்டி ஆலிங்கனம் செய்துகொண்டனர். ஜாம்பவான் அவர் போய்வந்த விருத்தாந்தத்தைக் கேட்க, ஹநுமான் எல்லோருக்கும் சகல விஷயங்களையுமுரைத்தார். எல்லோரும் சந்தோஷித்தனர். அங்கதன் ஆக்ஞைப்படி எல்லோரும் உடனே புறப்பட்டு ராமனிடம் செல்லும்போது வழியில் மதுவனத்தை யடைந்ததும் சகல வானரரும் அங்கதன் உத்திரவை எதிர்நோக்க, அவர்களது எண்ணத்தை யறிந்த அங்கதன் மதுவனத்தில் மதுபானஞ்செய்து செல்லலாமென்று வுரைத்தான். உடனே வானரர்கள் தங்களிஷ்டப்படி அந்த வனத்தில் சஞ்சரித்து, மதுபானஞ்செய்து, அங்குமிங்குந் தாவி, வனத்தை யழித்துக்கொண்டிருந்தனர். அவ்வனத்தின் காவல்காரனான ததிமுகன் அவர்களைத் தடுக்க, அவனையும், அவனைச்சேர்ந்தவர்களையும் வானரர்கள் அடித்துவிட்டனர். அதனால் கவலையடைந்த வானர வீரனான ததிமுகன் சுக்ரீவனிடம் சென்று மதுவனம் அழிக்கப்பட்டதைப் பற்றி முறையிட, அதைக்கேட்ட சுக்ரீவன் சந்தோஷித்து, ராகவனை யணுகி, "உத்தமா, வானரர்கள் சீதையைக் கண்டுவிட்டதால் தான் மதுவனத்தில் குதூகலமாயிருக்கின்றனர். ஹநுமான் தான் சீதையைக் கண்டுபிடித்திருப்பானென்று நான் எண்ணுகிறேன்" என்றுசொல்லித் ததிமுகனிடம், "நான் வானரர்களை உடனே வரச்சொன்னதாய்ச் சொல்லும்" என்றுரைத்தனுப்பினான். ததிமுகனும் அங்கதனிடம் சுக்ரீவன் சொன்ன விஷயத்தைச் சொல்ல, எல்லோரும் உடனே புறப்பட்டுச் சுக்ரீவனிருப்பிடத்தை யடைந்தனர். பிறகு ஹநுமான் ராமனிடம் சென்று, சீதை யனுப்பிய சூடாமணியைக் கொடுக்க, அதைப் பெற்றுக்கொண்ட ஸ்ரீராமர் அதைக் கண்களில் ஒத்திக்கொண்டு அப்பொழுதே சீதையை யடைந்ததாயெண்ணி, சீதை சொல்லி யனுப்பிய விஷயங்களை யறிந்துகொண்டு சந்தோஷத்துடன் விளங்கினார்.

ஓம்.

ஸ்ரீராமஜெயம்.

# யுத்தகாண்டம்.

---

ஹனுமான் லங்கைக்குச் சென்றுவந்த சகல விஷயங்களையும் கேட்டு மிகுந்த சந்தோஷத்தை யடைந்த ஸ்ரீராமர் ஹனுமானைக் கட்டிக்கொண்டார். (ஹனுமானுக்களித்த ஆலிங்கனம் தான் சிரேஷ்டமானது என்பது சரியல்ல— சித்தாந்த புத்தகத்தில் காணவும்.) பிறகு, "இதுவே சிறந்த முகூர்த்தமாயிருக்கிறது. இப்பொழுதே நாமெல்லோரும் புறப்படுவோம்" என்று ராகவன் தெரிவிக்க, சுக்ரீவன் சகலருடன் புறப்படவும், யாவரும் தெற்கு சமுத்திரக்கரையை யடைந்தனர்.

இது நிற்க, லங்கை ஹனுமானால் அழிக்கப்பட்டுவிட்டதால், விஸ்வகர்மாவைக்கொண்டு அதை முன்னிருந்தபடியே சிருஷ்டிக்கச் சொல்ல அவரும் அப்படியே செய்தார். ஆனால் ஹனுமானால் யுத்தத்தில் கொல்லப்பட்டவர்கள் சிருஷ்டிக்கப்படவில்லை. இவ் விதம் யாவரும் உண்டாக்கப்பட்டவுடன் ராவணன் வீரர்களை மந் திராலோசனை மண்டபத்திற்கு வருமாறு அழைத்தான். எல் லோரும் வந்தவுடன் வீர்யவானான ராவணன் அவர்களை நோக்கி, "ஏ, வீரர்களே! ராமன் நம்முடன் யுத்தம்புரிய பெரிய வானர சேனையுடன்வந்து தெற்கு சமுத்திரக்கரையில் தங்கியிருப்பதாகத் தெரிகிறது. நான் மூன்று உலகங்களையும் ஜயித்தவன். எனக்கு மனுஷ்யனாலும் பயங்கிடையாது. கேவலம் இந்த மனுஷ்யனுக் குப் பயந்து சீதையைக் கொடுக்கமாட்டேன். ஆனாலும் 'நாம் இப்பொழுது என்ன செய்யவேண்டும்' என்று சற்று ஆலோசிப் போம்" என்று சொன்னவுடன் எல்லோரும் தங்கள் தங்கள் ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு, யுத்தத்திற்குச் சித்தராகி, ஒவ் வொருவனும் தன்னைமட்டும் அனுப்பினால் ராமாதிகளைக் கொன்று வருவதாகத் தனது பிரதாபத்தைச் சொன்னான். அச்சபையிலி ருந்த விபீஷணன் அதைக் கேட்டு ராவணனைப் பார்த்து, "ராக்ஷ சேஸ்வரா, இவர்கள் சொல்வதைக் கேட்டு ஏமாந்துவிடாதேயும். ராமாதிகளைக் கொல்ல இவர்களால் முடியாது. இவர்கள் யாவரும்

இருக்கும்போதே ஒரு வானரம் இந்தப்பட்டணத்தை யழித்த போது இவர்கள் ஒன்றும் செய்ய முடியாமல் பார்த்துக்கொண்டிருக்கவில்லையா? அந்த ஒருவானரத்தை வெல்லமுடியாத இவர்களா அதைப்போல அநேக வானரர்களையுடைய ராமாதிகளைக் கொல்லக் கூடியவர்! கைதட்டினால் ஓடக்கூடிய குரங்குஜாதியைப் பக்கபலமாகக்கொண்டு மூன்று உலகங்களை வென்ற ராவணனை வெல்லவந்திருக்கும் ராமன் சாதாரண மானிடனென்று நானெண்ணவில்லை" என்று ராமனது பலத்தை வர்ணிக்கவே, ராவணன் சபையைக் கலைத்துவிட்டான். பிறகு ராவணன் அந்தப்புரத்தை யடைய, உத்தமனும், ராவணனுக்கு ஹிதத்தையே சொல்பவனுமான விபீஷணனும் அங்கு சென்றான். ராவணன் ஆசனங்கொடுத்து, அவனை உபசரித்து, வந்தவிஷய மென்னவென்று விசாரிக்க, விபீஷணன், "ஏ, பிரபோ, நான் ஏற்கனவே சபையில் பேசின விஷயத்தைத்தான் மறுபடியும் சொல்லப்போகிறேன். நீர் எப்பொழுது சீதாபஹாரணம் செய்து, லங்கைக்குக் கொண்டுவந்தீரோ, அதுமுதல் பட்டணத்தில் விபரீதம் ஏற்பட்டுவருகிறது. பக்ஷிகள் அடிக்கடி ஆகாயத்தில் பயங்கரமாய்ச் சப்திக்கின்றன. பசுக்கள் இரத்தமயமான பாலைக் கறக்கின்றன. வைஸ்வதேவத்தை யுத்தேசித்துக் கொடுக்கப்பட்ட அன்னத்தை ஸ்வானங்கள் கிரஹித்துச் செல்கின்றன. ஊரில் இரத்தமழை பொழிகிறது. ஆதலால் சீதையை விட்டுவிடுவது உசிதம்" என்று சொல்லிக் கொண்டிருக்கையில் துஷ்டனான ஒரு மந்திரி அங்குவரவே, 'இனி நமது வார்த்தை செல்லாது' என எண்ணி விபீஷணன் அவ்விடத்தை விட்டகன்றான். பின் ராவணன் மறுபடியும் சபைகூட்ட, அன்றையதினம் எழுந்திருக்கும் முறையுள்ள கும்பகர்ணனும், மற்ற யாவரும் சபைக்கு வந்தனர். வீரர்கள் ஒவ்வொருவனும் தான் சென்று ராமாதிகளைக் கொன்றுவருவதாகச் சொல்லி கர்ஜித்தனர். அப்பொழுது கும்பகர்ணன், "ஏ, ராஜனே, இவ்வீரர்கள் சொல்வதைக் கேட்டு ஏமாறாதேயும். இவர்களால் இதுமுடியாது. நான் சென்று என் கையிலிருக்கும் இச்சூலத்தால் அவர்களைக் கொன்று உமக்கு ஜயத்தை யளிப்பேன். பிறகு நீர் சீதையை யடைந்து சுகித்திருக்கலாம்" என்றான். அதைக்கேட்ட மஹாபார்சுவான், "நீர் சீதையைப் பலாத்காரமாக அடைந்துவிடலாமே" என்று சொல்ல, ராவணன், "பிரம்மா, 'நீ எந்தக் குல ஸ்திரீயையும் பலாத்காரமாயனுபவித்தால் உனது தலை நூறுசுக்கலாய் வெடித்துவிடும்' என என்னைச் சபித்திருப்பதால் நான்

அவ்விதம் செய்ய முடியாது. அது இருக்கட்டும். நான் வீரனு தலால், இப்பொழுதே எனது பாணங்களால் ராமனையழிப்பேன்" என்று கர்ஜிக்க, விபீஷணன் ராவணனைப் பார்த்து, "ஏ, வீரனே, இந்தக் கும்பகர்ணனாகட்டும், நீர்தானாகட்டும், இந்திரஜித்துத் தானாகட்டும், மற்றவர்கள் யார்தானாகட்டும், இவ்வளவுபேர்க ளாலும், என்னாலும் இந்த ராமனைக் கொல்லமுடியாது. ராமன் கையிலிருந்து பாணங்கள் புறப்பட்டு ராக்ஷசர்கள் தலைகளையறுத்து உருட்டுவதற்குள்ளாகவும், வானரர்கள் கொள்ளிக்கட்டைகளைக் கொண்டுவந்து இலங்கையை மறுபடி எரித்துவிடுவதற்குள்ளாக வும் சீதையை இராமனிடம் ஒப்புவிப்பது நலம்" எனப்புகன் றான். இதைச் செவியுற்ற இந்திரஜித்தன் கோபித்து, "ஏ, ராஜ னே, உமது தம்பிவார்த்தையைக் கேட்டீரா! நமது குலத்திற் பிறந்த யார்தான் இவ்விதம் பேசுவர்? இவன் இக்குலத்திற் பிறந் தவனல்லன். கேவலம் அற்ப மனுஷ்யனுக்குப் பயந்த இவன் இக்குலத்திலிருந்தும், இச்சபையிலிருந்தும் எடுபடவேண்டிய வன்" என்றான். உடனே விபீஷணன் ராவணனை நோக்கி, "ராஜனே, தனித்த கோபுரத்திலிருந்துகொண்டு, ஞானவிருத்தர், யோகவிருத்தர், சீலவிருத்தர் முதலியவர்களுடன்தான் மந்திரா லோசனை செய்யவேண்டுமே தவிற இவனைப்போல் பாலியர்களை வைத்துக்கொண்டால் ஆபத்து நேரிடும். எதிரிபலம், நமது பலம் முதலியவற்றை நன்றாக ஆராய்ந்து, எதிர்த்தால் ஜயிக்குமா என்று யோசித்துத்தான் எக்காரியத்தையும் செய்யத் துணிய வேண்டும். விஷயத்தை யோசிக்காமல், சண்டைக்குப் புறப்படும் இவன் சத்துருவே தவிற புத்திரனல்ல. ராமாதிகள் அபார பல முள்ளவர்கள். அவர்களைச் சுலபமாகக்கொல்ல முடியாது. ஆகை யால் யோசித்துச் செய்யும். குழந்தையான இவனைச் சபையிலி ருந்து நீக்கிவிடும்" என்றுரைக்க, ராவணன் (காலத்தால் பீடிக்கப் பட்டவனாதலால்) அவனைப்பார்த்து, "ஏ, துஷ்டா, நீ எனக்குத் தாயாதியல்லவா! தாயாதிக்காரர்கள் கபடமான எண்ணமுடைய வர்கள். ஆதலால் நீதான் என்னைக்கொல்ல இச்சிப்பாய். பிள்ளை தகப்பனைக் கொல்ல நினைப்பானா? நீ உடனே இவ்விடத்தைவிட் டுச்செல். இங்கிருந்தால் கொல்லுவேன்" என்று கோபத்துடன் சொல்லவே, விபீஷணன் நான்கு மந்திரிகளுடன் வெளிக்கிளம்பி ஆகாயத்தில் நின்றுகொண்டு, ராவணனைப் பார்த்து, "நீ பூஜிக்கத் தகுந்தவனாயிருந்தாலும், நீ தர்மத்தை விட்டு என்னைத் தியாகம் செய்ததால், நான் உன்னைவிட்டுச் செல்கிறேன். எங்கு சென்றால்

என்னைத் தியாகம் செய்யாமல் ஏற்றுக்கொள்வார்களோ அங்கு செல்கிறேன். நானில்லாமல் நீ சுகமாயிரு" என்று சொல்லித் தன் தபசாலும், ஞானத்தாலும், ராமனைப் பரமாத்மாவென வறிந்து அவரைச் சரணமடையப் புறப்பட்டான். (விபீஷணன் ராக்ஷஸகுலமே அல்லவாதலால் ராமனை நாடிவந்தான். இவ்விஷயத்தை சித்தாந்த புத்தகத்திலும், இதேபுத்தகத்தில் உத்தரகாண்டத்தில் விபீஷண ஜனனக் கட்டத்திலும் காணலாம்).

(இந்திரஜித்தனால் ராக்ஷச குலத்தில் பிறந்தவனல்லன் என்று சொல்லப்பட்டவனும், சூர்ப்பநகையினாலும் ராமனிடத்தில் தார்மிஷ்டன், ராக்ஷசசேஷ்டை கிடையாது என்று சொல்லப்பட்டிருப்பவனுமான விபீஷணன் தவஞ்செய்து, பிரம்மாவிடமிருந்து வரம் வாங்கிய காலத்தில் பிரம்மா, "நீ ராக்ஷச யோனியில் ஜனித்ததால் உனக்கு அந்த ராக்ஷசத்தன்மை வரும். உனக்கு அது வராமலிருக்கும்படியும், நீ சிரஞ்சீவியாயிருக்கவும் வரம் கொடுத்தோம்" என்றார். மேலும் அவன் தவஞ்செய்தபோது கடவுள், "தார்மிஷ்டா, உனக்கு என்ன வேண்டும்?" என்றுகேட்க, விபீஷணன், "பிரபோ, மிகுந்த ஆபத்துகாலத்திலும் என் புத்தி அதர்மத்தில் செல்லக்கூடாது. என் புத்தி எது எதில் பிரவேசிக்கிறதோ, அது அது அப்படியப்படியே தர்மமாகவேண்டும்" என்று கேட்டான். பிரம்மாவும் அப்படியே வரமளித்தார். இவ்விதம் வரம்பெற்ற விபீஷணன் ராக்ஷச குலமே அல்லவாதலாலும், யாதொருவிதமான பிராத்ருபாவ மில்லையாதலாலும், விபீஷண ஜனனமே ராவணவதம் செய்யும் ராமகார்யத்திற்காகவே ஆதலாலும், ராமனும் ராக்ஷசவத உபாயத்தை யறிவதற்கே விபீஷணனைச் சேர்த்துக்கொண்டதாலும், இதற்காகவே விபீஷணன் தெய்வகதியால் ராவணனிடமிருந்து விடுபட்டதும் ராமனை யடைந்ததாலும், இவன் சிறந்த தார்மிஷ்டனென்று வால்மீகி நிரூபிக்கிறார். தவிரவும் விபீஷணன் ராவணனது குலத்தைச் சேர்ந்தவனானால் மூத்தவன் பிதாவென்ற நியாயப்படிக் கொல்லத்தகாதவனாயிருக்க அண்ணனான ராவணனைக்கொன்ற பிரம்மஹத்தி பாபத்தை அவன் அடையவேண்டும். ஆனால் அவன் எவ்வித பாபத்தையும் அடையாததாலும், அவன் ராவணனது குலத்தைச் சேர்ந்தவனல்லன். இவ்விதம் தார்மிஷ்டனென நிரூபிக்கப்பட்ட விபீஷணன் ராவணனால் விடுபட்டுத் தனது நான்கு மந்திரிகளுடனும் ராமனையடைய, அவர் அவர்களைத் தன்னுடன் சேர்த்துக்கொண்டதற்கு முதல்

காரணம் ராவணனுதிவத உபாயத்தை யறிவித்துத் தனக்குச் சகாயம் செய்வதற்காகவேயாம். இரண்டாவது காரணம் சரணமடைந்தவனை ரக்ஷிக்கவேண்டுமென்ற ஸ்வதர்மமாகும்). ஆகாயத்தில் வந்துகொண்டிருந்த விபீஷணன் முதலிய ஐவரைக்கண்ட வானரர்கள் அவர்கள் விரோதிகள் என நினைத்து அவர்களைக் கொல்ல சுக்ரீவன் அனுமதியை வேண்டினர். மரங்களையும் மலைகளையும் எடுத்துக்கொண்டு தயாராக விருக்கும்படி சுக்ரீவன் ஆக்ஞாபிக்க, அவர்களும் அவ்விதமே தயாராகி, 'கொல்லலாமா?' என்று கேட்டனர். அப்பொழுது சுக்ரீவன், "சற்றுபொறுங்கள்" என்று சொன்னான். இப்படி சுக்ரீவனும், வானரர்களும் பேசிக்கொள்வதை விபீஷணன் கேட்டு, ஆகாயத்தில் நின்றுகொண்டு வீரிட்டுக்கதற, வானரர்கள் அவன் என்ன சொல்லுகின்றான் என்று கவனித்தனர். விபீஷணன் அவர்களை நோக்கி, "ராக்ஷசர்களுக்கு அரசனான ராவணன் என்ற துஷ்டனுடைய தம்பியென்று என்னைச் சொல்வார்கள். உங்கள் ஏஜமானனான ராமனுடைய பத்தினியை அவன் அபகரித்தான். அது அதர்மமென நான் எவ்வளவோ ஹிதமாகச் சொல்லியும் அவன் கேட்கவில்லை. அவன் என்னை அவமானப்படுத்திவிட்டான். சர்வலோக சரண்யனும், மகாத்மாவாயும், ரகுவம்சத்தில் பிறந்தவனுயுமுள்ள ராமனைச் சரணமடைய நான் வந்திருக்கிறேன். இதுவிஷயத்தை அவரிடம் தெரிவியுங்கள்" என்றுரைக்கக் கேட்ட சுக்ரீவன் வானரர்களைப் பேசாமலிருக்கச் சொல்லிவிட்டு ஸ்ரீராகவனிடம் சென்று, "ராவணனது தம்பி விபீஷணன் என்பவன் தங்களிடம் சரணமடைய வந்திருக்கிறான். சத்துருபக்ஷத்திலிருந்து வந்திருப்பதால் கொல்லத்தகுந்தவன். லங்கையிலிருந்து வந்திருப்பதால் யோக்யனுயிருப்பானென்று நம்பமுடியாது. நீங்கள் புத்திமானுதலால், மந்திரிகளுடன் கலந்துகொண்டு வேண்டுவன செய்யுங்கள்" என்று சொன்னான். அதைக்கேட்ட ராகவன், மந்திரிகளான வானரர்களிடம் யோசனை கேட்க, அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்தனர். அப்பொழுது ஹனுமான், சிறியோரும், பெரியோருமான நால்வர் தனக்குமுன் தங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லியிருக்க, அவைகள் சமயத்திற்குத் தகுந்ததாயில்லாததால், தகுந்த காரணங்களால் அவைகள் அங்கீகரிக்கத் தகுந்ததல்லவென்று தெரிவித்து, "இந்த விபீஷணன் யோக்யனென்த் தெரிகிறது. இவன் ராவணனுக்குப் புத்திசொல்லி, அதனால் தியாகம் செய்யப்பட்டிருப்பான். மனதில் களங்கமிருந்தால்

கட்டாயம் முகத்தில் தெரியும். அப்படி முகத்தில் களங்கம் தோன்றுததால் இவன் தர்மத்தில் இருப்பவனென்று தெரிகிறது. அப்படிப்பட்டவன் சரணமடைவதால், ரக்ஷிக்கத்தகுந்தவனே" என்றார். ராகவன் சுக்ரீவனை நோக்கி, "இவன் நம்மை நம்பி, மித்திரபாவத்துடன் வந்திருப்பதால் இவனை விடலாகாது. தவிரவும் காலில் விழுந்தவனை விட்டால், சரணாகதனைக் கைவிட்ட நிந்தனைக்குள்ளாகவேண்டும். மேலும் எவனொருவன் சரணாகதனைக் காப்பாற்றாமல் விடுகிறானோ அந்த சரண்யன் செய்த புண்ணியம் முழுவதும் அந்த சரணாகதனே யடையும் என்பதும், அந்தச்சரணாகதன் செய்த பாபமுழுவதும் சரண்யனை யடையுமென்பதும் சாஸ்திரப் பிரமாணம். சரணாகதனைக் காப்பாற்றாத சரண்யன் இகத்தில் அபகீர்த்தியையும், பரத்தில் நரகத்தையும் அடைகிறான். நான் எந்தக் கூட்டத்தை யழிப்பதாய்ச் சபதம் செய்துகொண்டிருக்கிறேனோ அந்த ராக்ஷச வம்சத்தைச் சேர்ந்தவனல்ல இவன். ஆதலால் நான் இவனை விடமாட்டேன்" என்று சொல்லக் கேட்ட சுக்ரீவன், "உத்தமா, ஆபத்து சமயத்தில் அண்ணனைக் கைவிட்டு வந்த இவன் என்னதான் செய்யமாட்டான்? இவன் யோக்கியனென்று எப்படி நம்புவது?" என்று கேட்டான். அப்பொழுது ராமன் லக்ஷ்மணனைப்பார்த்து, "நீ என்னைக் காப்பதில் எவ்வளவு தீவிரமாயிருக்கிறாயோ, அப்படியே சுக்ரீவனும் எனது சுகத்தைத் தன்னுடையதாகப் பாவித்து என்க்ஷேமத்தில் கண்ணுங் கருத்துமாயிருக்கிறான் பார்த்தாயா?" என்று மந்தஹாஸத்துடன் புன்னகை செய்தார் (இந்த இடத்தில் ராமன் லக்ஷ்மணனைப் பார்த்து மந்தஹாஸம் செய்ததற்கு, "இந்த சுக்ரீவன் மட்டும் தன் அண்ணாவான வாலியைக் கொன்றவனல்லவா?" என்று அர்த்தம் என்பர் சிலர். அது உசிதமல்ல. கவியின் ஹிருதயத்தைச் சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்). பின்பு அவர் சுக்ரீவனை நோக்கி, "சுக்ரீவா, எனது பாதுகைகளைத் தலையில் வைத்துக்கொண்டு, அவைகளையே தனக்குக் கதியாக நம்பி, எனக்காகச் சகலத்தையும் துறந்த பரதனுக்கு எந்தத் தம்பியும் ஒப்பல்ல. என் பிதாவுக்குப் பிறந்த பிள்ளைகளில் மகாதுக்கத்தை யனுபவித்தவன் நானேயாம். அப்படியிருக்க ஏதோ அல்பமான ஒரு வாலிவதம் செய்ததால், நீ எனக்காக எல்லாவற்றையும் தியாகம்செய்து, வானரர்களுடன் எனக்கு உதவிசெய்து, உயிரையும் கொடுக்கச் சித்தமாயிருக்கும் உனக்கு எவனும் ஒப்பல்ல" என்று அவனைப் புகழ்ந்து, "சரணாகதனைக் காப்பது எல்லோருக்கும் ஸ்வதர்ம

மாயிருப்பதால், நான் அதை விடமாட்டேன். கேவலம் ஒருபுரு கூடத் தன் பெண்புறுவைக் கொன்ற வேடனையும், அவன் தன் னைச் சரணமடைந்ததால் ரக்ஷித்தது. சிபிசக்கரவர்த்தியும், தன் காலில் விழுந்த பக்ஷியை ரக்ஷித்தான். பக்ஷிஜாதியைவிட நான் கேவலமானவனல்ல. ஆதலால் ஸ்வதர்மத்தை விடமாட்டேன்" என்றார். அதுகேட்ட சுக்ரீவன், "ராகவா, நீர் தூங்குங்காலத்தில், இரவில், இவன் நால்வருடன், ஆயுதங்கொண்டுவந்திருப்பதால், கொன்றுவிட்டால் என்ன செய்வது" என்று கேட்க, "சிறந்த அஸ்திரத்தால் காகாசுரனை மூன்று லோகத்திலும் விரட்டியடித்த ராமனுடைய ராமத்வயான பௌரஷத்தைச் சுக்ரீவன் பூர்ணமாக அறியாதவனாதலால், அதை வெளிப்படுத்துவேன்' என்று எண்ணி ராமன், "நான் தூங்கும்காலத்தில் என்னை எனது தர்மம் காப்பதால், யாரும் ஒன்றும் செய்யமுடியாது. விசுவாமித்திரர் முதலிய பெரியோர்களால் கொடுக்கப்பட்ட அஸ்திரங்களுடன் இருப்பதால் என்னைத் தேவர்களும் ஒன்றும்செய்ய முடியாது. நான் நினைத்தால் எனது விரலின் நுனியில் சகலத்தையுமழிப்பேன். ஒருவன் என்னை நமஸ்கரித்துவிடுவானேயாகில், 'நான் உன்னைச் சேர்ந்தவன்' என்று சொல்வானேயாகில், அவனை எப்பொழுதும் சத்துருக்களிடமிருந்து ரக்ஷிப்பது என் விரதம். சுக்ரீவா, நான் விபீஷணனை ரக்ஷித்துவிட்டேன். அவனை அழைத்துவா". என்று சொல்லி, சுக்ரீவன் மேலும் தடைசொல்லாமலிருப்பதற்காக "விபீஷணன் மட்டுமல்ல, ராவணனே வந்தாலும், நான் அவனை ரக்ஷிப்பேன்" என்றும் சொன்னார். (விபீஷணனை நேரில் கண்டு, அவன் சொன்ன விஷயங்களைக் கேட்டு வந்தது சுக்ரீவனாதலால், அவனே சென்றால், விபீஷணன் நிர்ப்பயமாய் வருவானென்றுதான் ராமன் சுக்ரீவனை யனுப்பினாரே தவிர சுக்ரீவன் விபீஷணனைச் சேர்த்துக்கொள்ளக் கூடாது என்றதற்காகவல்ல. இக்கிரந்தத்தில், ராமன் தன் பிதாவுக்குரிய கௌரவத்தைச் சுக்ரீவனுக்குக் கொடுத்துவருகிறார்— இதுநிற்க, ராமர், 'ராவணனே வந்தாலும் ரட்சிப்பேன்' என்றாரே, அப்படிச் செய்வாரா? என்று கேட்டால், ரட்சிக்கமாட்டார்' என்கிறார் வால்மீகி. ராவணன், இந்திரஜித்து, மூன்றுகோடிக் கந்தர்வர்கள், லவணாசுரன், வாலி இவர்கள் சரணாகதி செய்தால் ரட்சிக்கமாட்டார். மற்ற யார் வந்தாலும் ரட்சிப்பார்' என்கிறார். சித்தாந்த புத்தகத்தைப் பார்க்க).

அதுகேட்ட சுக்ரீவன், "உத்தமா, எனக்குச் சந்தேகமாயிருந்

ததாலும், உமது சுகதுக்கம் என்னுடையதாயிருப்பதால், முன்பு சமாதானமில்லாமல் அவனைச் சேர்த்துக்கொண்டு, அதனால் உமக்கு ஆபத்து வந்துவிட்டால் என்ன செய்வது என்ற பயத்தினாலும்தான் நான் தடுத்தேன். தாங்கள் சொல்லும் நியாயங்களை ஒத்துக்கொண்டேன். நான் இங்கிருந்துகொண்டே, பல வீரர்களைக்கொண்டு அவனைப் பரீட்சித்து, உத்தமனென்றறிந்தேன். இப்பொழுது என்மனம் திருப்தியடைந்தது. அவனைக் கட்டாயம் சேர்த்துக்கொள்வோம். இதோ சென்று அவனை அழைத்து வருகிறேன்" என்று விபீஷணனிடம் சென்று, "ஸ்ரீராகவன் உமக்கனுகிரகம் செய்துவிட்டார். நீர் வரலாம்" என்றான். உடனே விபீஷணன் ஆகாயத்திலிருந்து கீழே இறங்கிவந்து ராமனை நமஸ்கரித்து, "நான் சகலத்தையும் துறந்தவன். நீர் சகல லோகத்தாராலும் நமஸ்கரிக்கப்பட்ட பரமாத்மாவாதலால் உமது காலில் விழுகிறேன். என்னை ரட்சிக்கவேண்டும்" என்றான். (விபீஷணன் நிஷ்காம்ய பக்தியுடையவன், காம்யபக்தியுடையவனல்லன். இவ்விஷயமாய் அப்பயதீக்ஷிதர் முதலிய சிலர் செய்த வியாக்கியானங்கள் சரியல்ல— சித்தாந்த புத்தகத்தைப் பார்க்க). இவ்விதம் தன்னையடைந்த விபீஷணனை ராமர் சாத்வீக வார்த்தைகளால் தேற்றி, "ராவணாதி ராக்ஷசபலத்தைச் சொல்லும்" என்று கேட்டார். விபீஷணன் சகல விஷயங்களையும் கபடமற்றுச் சொல்லக்கேட்ட ராமர், "விபீஷணா, ராவணாதி சகல ராக்ஷசர்களையும் நான் அழிக்கிறேன். அவர்களை யழிக்காமல் என் தம்பிகள் மூவர்பேரில் பிரமாணமாய் அயோத்தியில் கால்வைக்க மாட்டேன், உன்னை லங்காதிபதியாக்குகிறேன்" என்று சபதம் செய்து, லக்ஷ்மணனைப் பார்த்து, "இப்பொழுதே சமுத்திர தீர்த்தத்தைக்கொண்டு இவனுக்கு லங்காபட்டாபிஷேகம் செய்" என்று சொல்ல, உத்தமரான லக்ஷ்மணனும் அவ்விதமே சகல வானர மத்தியில் சந்தோஷத்துடன் அவனுக்கு லங்காராஜ்ய பட்டாபிஷேகம் செய்தான். அதன்பிறகு ஹனுமானும், சுக்ரீவனும் விபீஷணனை யடைந்து, "உத்தமா, நீர் லங்கையிலிருந்து வந்தவராதலால், உமக்குத்தான் லங்கையை யடையும் உபாயம் தெரியும். ஆகையால் நாங்கள் இச்சமுத்திரத்தைத் தாண்டி லங்கைக்குப் போவதற்குத் தகுந்த உபாயத்தைச் சொல்லும்" என்று கேட்க, "இந்த ராமர்வம்சத்தில் பிறந்த சகர ராஜனது பிள்ளைகளான சாகரர்களால்தான் இந்த சமுத்திரம் உண்டானது. அதனால்தான் இதற்குச் சாகரம் என்ற பெயர் ஏற்பட்டது. அந்த வம்சத்தி

லேயே ராமன் பிறந்திருப்பதால், இவர் சமுத்திர ராஜனைச் சரணு கதிசெய்தால், அவர் ராமனுக்கு அனுகூலம் செய்வார்" என்ருர். அவ்விஷயத்தை ஹநுமானும் சுக்ரீவனும் ராமனிடம் தெரிவிக்க, ராமர் சந்தோஷித்து, "இது எனக்குத் திருப்திதான். நீங்கள் உங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லுங்கள்" என்று சுக்ரீவனை யும், லக்ஷ்மணனையும்கேட்க, அவர்கள், "அப்படியே செய்யலாம்" எனத் தெரிவித்தனர்.

இது இப்படியிருக்க, ராவணனால் ஏவப்பட்டு சுகன் கிளி வேஷத்துடன் சுக்ரீவனிடம் வந்து, "ராமன் உமது தமையனை வாலியைக் கொன்றுவிட்டதால், உமது தமையனுக்கு விரோதி யான ராமனை விட்டுவிட்டு உம்மைக் கிஷ்கிந்தைக்குச் சகல சேனை களுடன் போகும்படி எமது ராஜாவான ராவணன் உம்மிடம் சொல்லச்சொன்னர். அதற்குவேண்டிய உதவியை நான் உமக் குச் செய்கிறேன். உமது அபிப்பிராயத்தை யறிந்துவரச்சொன் ஞர்" என்ருன். அதுகேட்ட சுக்ரீவன், "ஏ, சுகா, 'வாலி அதர் மத்தைச் செய்து ராமனால் கொல்லப்பட்டான். இப்பொழுது ராவணனும் அதர்மம் செய்திருப்பதால், அவனும் கொல்லப்படு வான். அவன் எந்தலோகம் சென்ருலும் விடப்போகிறதில்லை' என்று நான் தெரிவித்ததாகச் சொல்" என்றுரைத்து அவனைக் கட்டிப்போடும்படிச் சொன்ன உடனே வானரர்கள் கட்டிப்போட் டார்கள்.

பிறகு ராமன், மா துர்வர்க்கங்களான 353 பேர்களால் தொட் டுத்தடவிக் கொடுக்கப்பட்டும், ஆலிங்கனம் செய்யப்பட்டும், அலங் காரம் செய்யப்பட்டு மிருக்கும் தனது வலது புஜத்தைத் தலைக்கு உயரமாய் வைத்துக்கொண்டு படுத்தார். 'நான் சமுத்திரத்தைத் தாண்டுவேன், இல்லாவிட்டால் பிராணனை விடுவேன்' என்று சொல்லிக்கொண்டு மூன்றுநாள் சமுத்திர ராஜனை உபாசித்தும், அவன் வாராததால், கோபித்து, லக்ஷ்மணனிடம், "வில்லைக் கொண்டுவா. இந்த சமுத்திரத்தை வற்றடித்து விடுகிறேன்" என்று சொல்ல, அவன் அவ்விதமே கொண்டுவந்தான். அந்த வில்லை வாங்கி, நாணேற்றிப் பல பாணங்களால் சமுத்திர ராஜனை யடிக்க, அப்பொழுதும் அவன் வாராததால், சீற்றங்கொண்டு, பிரம் மாஸ்திரத்தை வில்லில் பூட்டினர். அப்பொழுது சமுத்திர ராஜன் கங்கா, சிந்து முதலிய பத்தினிகளுடன் (சமுத்திர ராஜன்

வேறு வருணன் வேறு— சித்தாந்த புத்தகத்தில் காண்க). சமுத்திரத்திலிருந்து வெளிவந்து ராமனை அஞ்சலிபந்தம் பண்ணி, "அவரவர் குணம் அவர்களை விட்டு நீங்காது. நான் ஜடம், என்னையடித்து எழுப்பினுல்தான் எனக்குத் தெரியும். நான் முன்னமேயே வாராததற்கு மன்னிக்கவும்" என்று சொல்ல, ராமன், "நான் உனது நிமித்தமாக இந்த அஸ்திரத்தைப் பூட்டிவிட்டதால், இதற்கு என்ன வகை சொல்லுகிறுய்?" என்று கேட்டார். சமுத்திர ராஜன், "ராகவா, வடக்கு சமுத்திரக் கரையில் சில துஷ்டர்கள் என்னை உபத்திரவித்துக்கொண்டிருக்கின்றனர். உமது அஸ்திரத்திற்கு அவர்களை ஆகாரமாகக் கொள்ளலாம்" என்றுன். ராமனும் அங்கீகரித்து அஸ்திரத்தை விட, அது அவர்களைக் கொன்றுவந்தது. சமுத்திர ராஜன் அதன்பின் ராகவனைநோக்கி, "உமது பக்கத்திலிருக்கும் விஸ்வகர்மாவின் பிள்ளையான நளனை ஆக்ஞைசெய்தால், அவன் ஜலத்தில் கற்களைப் போட்டால் மிதக்கும். ஆனுல் போட்ட இடத்தில் இருக்காமல் அலை அடித்துக்கொண்டு போய்விடும். அவைகள் போட்ட இடத்தில் இருக்கும்படியான அந்த வரத்தை உமக்கு நான் கொடுத்து அவைகளைத் தாங்குகிறேன்" எனச் சொல்லி மறைந்தார். ராகவன் நளனை ஆக்ஞைசெய்ய, அவன் வானரர்களால் கொண்டுவரப்பட்ட மரங்களையும், மலைகளையும் சமுத்திரத்தில் போட்டு ஐந்து நாட்களில் சேதுவைக் கட்டினுன்.

அதன்பிறகு ராகவன் ஹனுமான்பேரிலும், லக்ஷ்மணன் அங்கதன்பேரிலும் ஆரோகணித்துக்கொண்டு இலங்கைக்கரையடைந்தனர். அப்பொழுது ராகவன் சுகனை விட்டுவிடச்சொல்ல, சுக்ரீவன் அவனை விடுவித்தான். சுகன் ராவணனிடம் ராமனது பௌருஷத்தைச் சொல்ல அவன் அதை அலக்ஷியம் செய்துவிட்டுச் சுக சாரணனென்ற இரு ராக்ஷசர்களை யழைத்து, "நீங்கள் சென்று ராமன் பலத்தையும், அவனது சேனைகளின் பலத்தையுமறிந்துவாருங்கள்" என்றுன். அவர்கள் குரங்கு வேஷத்துடன் வானர சேனையில் புகுந்து, ஒவ்வொரு வானரத்தையும் கவனித்துக்கொண்டு வருகையில் விபீஷணன் அந்தப் புதுக்குரங்குகளைக் கைப்பிடியாய்ப் பிடித்து ராமனெதிரில் கொண்டுவந்து, "உத்தமா, இவர்கள் ராக்ஷசர்கள். நமது பலத்தை யறியவந்தவர்கள்" என்று சொன்னபொழுது அவர்கள், "எங்களைக் காக்கவேண்டும்" என வேண்டினுர்கள். ராமன் விபீஷணனை நோக்கி, "இதனுல் கவலை

யில்லை. நீர் ஒவ்வொருவனது பலத்தையும், பக்க பலத்தையும் அவனிருக்கும் வனத்தையும், மற்ற சகல விஷயத்தையும் சொல்லும். அவர்கள் நன்றாயறிந்து ராவணனிடம் சொல்லட்டும். அவனும் நமது பலத்தை முழுவதையும் தெரிந்துகொண்டு சண்டைசெய்யட்டும்" என்றார். அதன்படியே விபீஷணன் ஒவ்வொருவரையும் காட்டி, அவனது பெயர், பலம் முதலிய விஷயங்களைச் சொல்லிக்கொடுத்து, அவர்களை அக்கூட்டத்திலிருந்து வெளியே கொண்டுவந்து விட, அவர்கள் பரம சந்தோஷத்துடன் ஆகாயத்தில் கிளம்பி, ராகவனைப் பார்த்து, எங்களுக்கு உயிர் பிச்சை கொடுத்ததால், நீர் க்ஷேமமாயிருப்பீர்" என்றுரைத்து ராவணனிடம் செல்ல, அவன் அவ்விருவருடன் ஒரு கோபுரத்தில் ஏறிக்கொண்டு, லங்கையின் வெளிப்புறத்திலிருந்த ராமசேனைகளைப் பார்க்க, அவர்கள் அவனுக்கு ஒவ்வொருவரையும் காட்டி, அவனது பெயர், பலம் முதலியவற்றைச் சொல்ல, ராவணன் சகல விஷயத்தையும் கேட்டுக்கொண்டு, அவர்களை நோக்கி, "நமது சாப்பாட்டைச் சாப்பிட்டுக்கொண்டு, நம்மையே தூஷிக்கிறீர்களே" என்று கோபிக்க, அவர்கள் சென்றுவிட்டனர். பிறகு ராவணன் மற்றும் சில சாரர்களை யனுப்ப, அவர்களும் வானரர்களால் துன்புற்று, ராமனால் ரக்ஷிக்கப்பட்டு, வானரசேனை பலத்தையறிந்து வந்தனர். அவர்களில் சார்தூலன் என்பவன் ராம பலத்தையும் வானரர் பலத்தையும் ராவணனிடம் தெரிவிக்க, அவன் வித்யுத்ஜிஹ்வனைக் கூப்பிட்டு, ராமன் தலைபோல் ஒரு தலையையும், அவனது வில்லைப்போன்றதொரு வில்லையும் அசோக வனத்திற்குக் கொண்டுவரச் சொல்லி, சீதை யிருப்பிடத்தை யடைந்து, "சீதே, விருத்திராசுரவதம்போல உனது பர்த்தாவின் வதமாகிவிட்டது" என்று சொல்லக் கேட்ட சீதை துக்கித்தாள். அப்பொழுது ராவணன் ஒரு ராக்ஷசியை விளித்து, வித்யுத்ஜிஹ்வனைக் கூப்பிடச் சொல்ல, அவன் ஒரு தலையையும், வில்லையும் கொண்டுவந்து வைத்துவிட்டுச் சென்றான். அதைக்கண்ட சீதை பலவாறு கதறி யழுதுகொண்டிருக்கையில் ஒரு ராக்ஷசன் வந்து ராவணனிடம், "பிரஹஸ்தன் என்ற சேனாதிபதி தங்களைப் பார்க்க வந்திருக்கிறான்" என்று சொல்லவே, ராவணன் சென்று விட்டான். உடனே அங்கு வைக்கப்பட்ட வில்லும், தலையும் மறைந்தன. மேலும் சீதை அதிகமாகத் துக்கித்துக்கொண்டிருக்க, ஸரமா யென்றவள் அவளைப் பார்த்து, "நீ கவலைப்படாதே இது ராக்ஷச மாயை. உண்மையான தலையானால் அது இருக்காதா?

ராக்ஷசர்கள் மாயை எங்களுக்குத்தான் தெரியும்" என்று சொல்லிச் சமாதானம் செய்தாள். அதுகேட்ட சீதை எதற்காக ராவணன் அப்பொழுது அவசரமாகச் சென்றானென்று அறிந்துவருமாறு அவளை யனுப்ப, அவள் சென்று வந்து யுத்தாரம்ப விஷயத்தைச் சொன்னாள். சீதை சந்தோஷித்தாள். இது நிற்க, ராவணனிடம் அவனது பாட்டனார் மால்யவான் சென்று, "விஷ்ணுவே ராமனாக வந்திருப்பதாக நான் எண்ணுகிறேன். அவன் விரோதம் வேண்டாம். சீதையை விட்டுவிடு" என்றுரைக்க, ராவணன் அவரை நிந்தித்தனுப்பிவிட்டான். இப்படியிருக்க, விபீஷணன் நான்கு திசைகளிலும் சென்று, திரும்பிவந்து ராமரிடம், "ராவணன் கிழக்குக் கோட்டை வாயிலில் பிரஹஸ்தனையும், மேற்கில் இந்திரஜித்தையும், தெற்கில் மஹோதர மகாபார்ச்சுவர்களையும், காவல்வைத்துத் தான் வடக்குக் கோட்டை வாயிலில் சுகசாரணர்களுடன் காவலிருக்கிறான். நகர மத்தியில் விரூபாக்ஷனை வைத்திருப்பதாகத் தெரிகிறது. தாங்கள் அதற்குத்தக்க ஏற்பாடு செய்யுங்கள்" என்று சொல்ல, ராமன் கிழக்குக் கோட்டைவாயிலில் நீலனையும், மேற்கே ஹனுமானையும், தெற்கே அங்கதனையும், சேனை மத்தியில் ஜாம்பவானையும் நிறுத்தித் தான் சுக்ரீவனுடன், லக்ஷ்மணனுடன் வடக்குக் கோட்டை வாயிலில் இருந்துவந்தார். பிறகு அவர் 'யாரும் குரங்கு ரூபம் தவிர வேறு ரூபத்துடன் யுத்தம் செய்யக்கூடாது' என்று வானரர்களிடம் சொல்லிவிட்டுச் சுக்ரீவன், ஹனுமான் முதலியவர்களுடனும், சில வீரர்களுடனும் சுவேலமலையிலேறி, லங்கையை கவனித்துக்கொண்டிருக்கையில், ராவணனும் கோபுரத்திலிருக்க, அவனது வைபோகத்தைக்கண்ட சுக்ரீவன் கோபித்து, அவனிருப்பிடத்தை யடைந்து, அவனுடைய குடை முதலியவற்றை முறித்து, அவனுக்கு உபசாரணை செய்பவர்களைக் கொன்று, அவனைக் கோபத்துடன் குத்தவே, இருவருக்கும் அந்த கோபுரத்தில் யுத்தாரம்பமாயிற்று. ஒருவரை மற்றவர் முஷ்டிகளால் குத்திக்கொண்டும், கைகளால் அறைந்துகொண்டும் இருவரும் சண்டை செய்யும்போது ராவணன் சுக்ரீவனைக் குத்த, அதனால் கோபங்கொண்ட சுக்ரீவன் ராவணனை யடித்து அவனது தலைகளிலிருந்த பத்துக் கிரீடங்களையும் உருட்டிவிட்டான். ராவணன் அவனை யடிப்பது கஷ்டமென நினைத்து, மாயையால் பல ராவணரூபங்களை யெடுத்துக் கொண்டு அவனை யெதிர்த்தான். சுக்ரீவன், 'நானும் இவனுக்கு மேல் அற்புத ரூபங்களுடன் எதிர்ப்பேன். ஆனால், கொஞ்ச

நாழிகைக்கு முன்தான் ராமன் மாயாயுத்தம் செய்யக்கூடாதென்று சொல்லியிருக்கிறார். நாம் ராமரது ஆக்ஞையை மீறக்கூடாது. நமக்கு இதுவரையில் கிடைத்த ஜயம் போதும்' என்றெண்ணிக் கொண்டு, அவ்விடத்தைவிட்டு ராமனிருப்பிடத்தை யடைந்தார். சுக்ரீவனைக் காணுமல் கவலைப்பட்டுக்கொண்டிருந்த ராமர், அவன் வந்ததும், "இதுவரையில் நீ எங்கு சென்றிருந்தாய்?" என்று கேட்க, சுக்ரீவன், "நீர் துக்கப்பட்டுக்கொண்டிருக்க, உமது பத்தினியை யபகரித்துச் சென்ற அந்த ராவணன் சகல வைபவங்களுடன் இருப்பதைக் கண்டு, கோபங்கொண்டு, நான் அவனிடம் சென்று, யுத்தம்செய்து, அவனைப் பங்கம்செய்து வந்தேன்" என்றான். அதுகேட்டு ராமர், "சுக்ரீவா, சத்துருவிடம் யுத்தத்திற்குச் செல்லலாமா? நீ சென்றவிடத்தில் ஒருவேளை அவனிடம் அகப்பட்டுக்கொண்டால் என் கதி என்னவாகும்? நீ போனபிறகு எனக்குத் தம்பியிருந்தும், சீதையிருந்தும் என்னபயன்? இனி நீ எந்த இடத்திற்கும் என் உத்திரவில்லாமல் போகக்கூடாது" என்று மித்திரபாவத்தில் தெரிவித்தார். அப்பொழுது ஆகாயத்திலுண்டான உற்பாதங்களைக் கவனித்து, லக்ஷ்மணனைப் பார்த்து "இவைகளைக் கவனித்தால் பயங்கரமான யுத்தம் நடக்கும்போல தெரிகிறது" என்று சொல்லி, ராஜதர்மத்தை யுத்தேசித்து, அங்கதனைக் கூப்பிட்டு, "நீ ராவணனிடத்தில் சென்று 'ராஜ்யமிழந்தவனே, சித்தமிழந்தவனே' என்று அவனைக் கூப்பிட்டு, 'எந்த பலத்தால் நீ தேவர்களையும், பெரியோர்களையும் துன்பப்படுத்தினையோ, எந்தபலத்தால் சீதையை அபகரித்தாயோ அந்தபலத்தை இப்பொழுது காட்டு பார்ப்போம். ராக்ஷசர்களே இல்லாமல் நான் என் பாணங்களால் அழிக்கப்போகிறேன். சீதையைக் கொண்டுவந்து விட்டுக் காலில் விழாவிட்டால், கணுக்குறுகிய பாணங்களால் நான் உன் உயிரை வாங்குவேன்' என்று நான் சொன்னதாகச் சொல்" என்றுரைத்தனுப்ப, அங்கதனும் ஆகாய வழியாகச் சென்று ராவணன் சபையை யடைந்தான். அவன், "நீயார்?" என்று கோபத்துடன் கேட்க, அங்கதன், "ஏ, ராவணா, இதரர்களால் கொல்லமுடியாத வாலியை யுத்தத்தில் கொன்ற கோசலாதிபதியான ராமனுடைய தூதன் நான். சீதையைக் கொண்டுவந்து விட்டு அவர் காலில் விழாவிட்டால், கணுக்குறுகிய பாணங்களால் உன்னை யழிப்பதாகவும், ஆதலால் நீ வரும்போதே உனக்கு ஆத்ம தர்ப்பணம் செய்துகொண்டு வரும்படியும் அவர் உன்னிடம் சொல்லச்சொன்னார்" என்றான். அந்த மாற்றத்தைச்

செவியுற்றுச் சீற்றங்கொண்ட லங்காதிபதி அவன் தலையை வாங்குமாறு பணித்தனன். அவனைக்கொல்ல, ஒரு கையை இருவராக நான்கு வீரர்கள் பிடித்துக்கொள்ள, அங்கதன் அவர்களைப் பிடித்துக்கொண்டு வேகமாய் ஆகாயத்தில் கிளம்பினான். அப்பொழுது கைக்கிருவராய் நால்வரும் தொங்க, அங்கதன் கைகளை வேகமாய் உதறிவிட்டான். உடனே அந்நால்வரும் கீழேவிழுந்து இறந்தனர். பிறகு அங்கதன் கர்ஜித்துப் பக்கத்தில் ஆகாயபரியந்தம் உயர்ந்திருந்த ஒரு கோபுரத்தை இடித்துத் தள்ளிவிட்டு, ராமன் சன்னிதானத்தை யடைந்து, "ராவணன் யுத்தத்தில் பிரேமையுடையவனாயிருக்கிறான்" என்று சொன்னான். அது கேட்ட ராமரும், வீரர்களை யுத்தத்திற்குத் தயாராக இருக்கும்படி ஆக்ஞாபித்தார். அவர்களும், மரங்களையும், மலைகளையும், எடுத்துக்கொண்டு தயாராக இருக்கும்போது, ரணபேரிகை யடிக்கப்பட, வானரர்களும், ராக்ஷசர்களும் கைகலந்து, ஒருவரை ஒருவர் கொல்லவேண்டுமென்று கோர்யுத்தம் செய்தனர். அப்பொழுது அங்கதன் இந்திரஜித்துடன்யுத்தம்செய்து அவன் ரதாதிகளையழித்து அவனை பங்கம்செய்யவே, மாயா யுத்தத்தில் சிறந்தவனான இந்திரஜித்து, மறைந்துகொண்டு சண்டையிடும் தாமஸீ என்ற வரத்தை பரமசிவத்தினிடமிருந்து பெற்றிருப்பதால், மறைந்துகொண்டு, மிருகங்களான வானரர்களையும், மனுஷ்யர்களான ராமாதிகளையும் அடித்தான். அப்பொழுது ராமன் வானரர்களைப் பார்த்து, "நீங்கள் யாவரும் மகாராஜனான சுக்ரீவனோடிருங்கள். மறைந்தடிக்கிற பாபியான இவன் பிரம்மாவிடம் வரம்பெற்றிருப்பதால், மூன்று லோகத்தையும் உபத்திரவிக்கிறான். (வால்மீகியும் இவனை மாயா யுத்தம்செய்யும் பாபியென்று பின்னால் கூறுகிறார்). இவன் நிந்திக்கத் தகுந்தவன். ஆனால் காலத்தை யனுசரித்து யாவரும் தற்சமயம் பொறுத்துக்கொள்ள வேண்டும்" என்று சொல்லிக்கொண்டே யிருக்கையில், ராமலக்ஷ்மணர்களையும் அடித்துப் பிறகு ராமரால் அனுப்பப்பட்ட எட்டு வானர வீரர்களையும் பல பாணங்களாலடித்து, ராமலக்ஷ்மணர்களையும், சகல வானரர்களையும் நாக பாசத்தால் கட்டிவிட்டான். இதில் கட்டப்படாத சுவதந்திரர்களான சில வானரர்களைப் பாணங்களாலடித்து நிற்கவைத்தான். அதற்குப் பிறகு அவன் தன் பிதாவான ராவணனிடம் சென்று, "நான் எல்லோரையும் நாகபாசத்தால் கட்டிவிட்டதால் யாரும் பிழைக்கமாட்டார்கள்" என்று கூறிச் சென்றுவிட்டான். அது கேட்டு ராவணன் சந்தோஷித்து, 'ராமன் முதலியவர்கள் கீழே

விழுந்து கிடப்பதைச் சீதை பார்க்கட்டும்' என்றெண்ணித் திரிஜடா என்ற ராக்ஷஸியிடம், "சீதையை நமது புஷ்பகவிமானத்திலேற்றிக்கொண்டுபோய், யுத்தகளத்தில் ராமாதிகள் விழுந்து கிடப்பதை யவளுக்குக் காட்டு" என்று கூறவே, திரிஜடாவும், சீதையை விமானத்திலேற்றிக்கொண்டு யுத்தகளத்தை நாடிச் சென்றாள். இதற்குள், ராக்ஷசர் யாவரும் இறக்கவில்லையென்று சீதை நினைத்துக்கொள்வதற்காக ராவணன், ராக்ஷசரின் பிரேதங்களையெல்லாம் எடுத்துச் சமுத்திரத்தில் எறிந்துவிடச் சொன்னான். (இப்படி தினந்தோறும் ராக்ஷசரின் பிரேதங்கள் எறிந்துவிடப்பட்டதால்தான் பின்பு சஞ்சீவி பர்வதம் வந்தகாலத்தில் ராவணன் கட்சியில் யாரும் எழுந்திருக்கவில்லை.)

இது நிற்க, விமானத்தில் வந்த சீதை, யுத்தகளத்தில் ராமர் முதலிய யாவரும் அடிபட்டிருப்பதைக் கண்டு மிகவும் துக்கமடைந்து கதறினாள். அப்பொழுது திரிஜடை, "சீதே, நீ கவலைப்படவேண்டாம். ஏனெனில் இது ஒரு புண்ணியவிமானம். பர்த்தாவிழந்த ஸ்திரீயை இது தாங்காது. உன் கணவர் இப்பொழுது மூர்ச்சித்திருக்கிறாரே தவிர இறக்கவில்லை" என்றுரைத்து அவளைச் சமாதானப்படுத்தி அசோகவனத்திற்கு அழைத்துச் சென்றாள். பிறகு ராமர் சற்று ஞாபகம் அடைந்து, லக்ஷ்மணனைக்குறித்து துக்கித்து மறுபடி பிரக்ஞை யிழந்தார். அப்பொழுது சுவதந்திரனை சுக்ரீவன் ராமாதிகளுக்காகத் துக்கிக்க, அப்பொழுது விபீஷணன் அவனைத் தேற்றி எல்லா இடங்களுக்கும்சென்று சகல சேனைகளையும் பார்த்துவிட்டுத்திரும்பிவந்தான். அதுவரையில் ராமாதிகள் எழுந்திராமலிருந்ததைக் கண்ட விபீஷணன் துக்கத்தால் புலம்ப, சுக்ரீவன் அவனைச் சமாதானம்செய்து சுஷேணனைப் பார்த்து, "நீ ராமலக்ஷ்மணர்களைத் தூக்கிக்கொண்டு கிஷ்கிந்தைக்குச் செல். நான் ராவணாதிகளைக் கொன்று சீதையைக் கொண்டுவருகிறேன்" என்றான். அப்பொழுது சுஷேணன் "பாற்கடலின் மத்தியிலுள்ள ஔஷதிபர்வதத்தில் சிறந்த மூலிகைகளிருக்கின்றன. அதை ஹநுமான் கொண்டுவந்தால் எல்லோரும் பிழைக்கலாம்" என்று சொல்ல, அச்சமயம் காற்று மிகவேகமாக அடித்தது. அது என்னவென்று கவனித்தபொழுது, கருடபகவான் வந்தார். அவரைக் கண்டதும் நாகபாசங்கள் விட்டுவிட்டதால் சகல வானரர்களும் எழுந்துவிட்டனர். உடனே கருடன் ராமலக்ஷ்மணர்களை யடைந்து, அவர்களைத் தன்கைகளால் தடவிக்

கொடுக்க, அவ்விருவரும் சிறந்த பலம், தேஜஸ், இவைகளுடன் எழுந்து அஞ்சலிசெய்துகொண்டு, "உம்மைப் பார்த்தால் நான் என் பிதா, பாட்டனார் முதலியவர்களின் ஞாபகத்தை யடைகிறேன். நீர் யார்?" என்று ராகவன் கேட்கக் கருடன் சந்தோஷித்து, "நான் உங்களுக்குப் பிராணனுயிருக்கப்பட்டவன். உங்களிட்டிருக்கும் சினேகபாவத்தால், நான் உங்களுக்கு உதவிசெய்ய வந்தேன். உம்முடைய காரியங்களை நீர் செய்துமுடித்த பிறகு என்னுடைய சிநேகபாவம் தெரியும். கத்ருவை சம்பந்தமான இந்த நாகங்கள் என்னைத்தவிற மற்றவரால் நீங்காது. ஆதலால் நான் வந்தேன். நான் சென்றுவருகிறேன். அனுமதிகொடும்" என்றுரைத்துச் சென்றுவிட்டார். பிறகு சுக்ரீவனுக்ஞையால் வானரர்கள் கர்ஜிக்கக் கேட்ட ராவணன், தூம்ராக்ஷனை யுத்தத்திற் கனுப்ப, அவன் அநேக வீரர்களுடன் சென்று யுத்தம்செய்தான். அப்பொழுது ராக்ஷசர்கள் வானரர்களால் அடிபடுவது கண்ட தூம்ராக்ஷன் கோபத்துடன் பாணங்களால் வானரர்களை யடித்து வீழ்த்தக்கண்ட ஹனுமான் கோபத்துடன் ஒரு மலையைத் தூம்ராக்ஷன் ரதத்தின்மேலெறியவே, ரதம் தவிடுபொடியாயிற்று. உடனே அவன் கதையால் ஹனுமானை யடிக்க, அவன் அதை லக்ஷ்யம் செய்யாமல், ஒருபாறையை யவன் தலையின்மேலெறிந்து அவனைக் கொன்றான். அதுகண்ட ராக்ஷசர்கள் ஓடிவிட்டனர். இதையறிந்த ராவணன் கோபங்கொண்டு சகலரையுங் கொன்று வருவதற்காக வஜ்ரதம்ஷ்டிரனை யனுப்ப, அவன் யுத்தகளத்திற் குச்சென்று பலரைக்கொன்றான். அங்கதன் ஒரு மரத்தைப் பிடுங்கி ராக்ஷசர்களை யடிக்கவே, வஜ்ரதம்ஷ்டிரன் பலபாணங்களால் அங்கதனை யடித்தான். அங்கதன் மரமொன்றை யவன் மேல் வீசியெறிய, அவன் பாணங்களால் அதைத் தடுத்துவிட்டான். பிறகு அங்கதன் ஒருபாறையால் அவன் ரதத்தையழிக்க, வஜ்ரதம்ஷ்டிரன் கீழே குதித்துக் கதையுடன் எதிர்த்தான். அங்கதன் அவனை மற்றொரு பாறையாலடிக்க, அவன் கீழேவிழுந்து, சற்றுநேரங்கழித்து மறுபடி எழுந்து கதையால் அங்கதன் மார்பிலடித்தான். அதை அங்கதன் அலக்ஷ்யமாய்த் தட்டிவிட, இருவருக்கும் கோரமான முஷ்டியுத்தம் நடந்தது. இவ்விதம் புத, அங்காரகயுத்தம்போல் உக்கிரமான யுத்தம் நடக்கையில் கீழே கிடந்த ஒரு கத்தியைக்கொண்டு அங்கதன் வஜ்ரதம்ஷ்டிரன் தலையை வெட்டிவீழ்த்தியதும், ராக்ஷசர்கள் பயந்தோடினர்.

பிறகு ராவணன் அகம்பனனைச் சேனையுடன் அனுப்ப, அவன் வரும்வழியில் பல உற்பாதங்களைக் கண்டும், அவைகளைப் பொருட்படுத்தாமல் யுத்தகளத்திற்குச் சென்று பல பாணங்களால் வானரர்களை யடிக்க, அவர்கள் பயந்து ஓடினார்கள். ஹனுமான் அவர்களைச் சமாதானம் செய்துவர, அகம்பனன் ஹனுமான் பேரிலும் பாணங்களைப் பிரயோகித்தான். ஹனுமான் கோபத்துடன் ஒரு மலையை அவன்மேல் வீசியெறிய, அவன் அதைப் பாணங்களால் பிளந்துவிட்டான். அதன்பின் ஹனுமான் ஒரு மரத்தைப் பிடுங்கி, அதனால் பலராக்ஷசர்களை யடிக்க, அகம்பனன் அதையும் கண்டித்து ஹனுமானைப் பாணங்களாலடித்தான். உடனே ஹனுமான் மற்றொருமரத்தால் அவன் தலைமேல் அடிக்க, அவன் கீழேவிழுந்திறந்தான். உடனே ராக்ஷச சேனைவீரர்கள் பயந்தோடக்கண்ட ராவணன் சிற்றமடைந்து சேனாதிபதியான பிரஹஸ்தனை யனுப்பினான். அவன் பலவீரர்களுடன் வருவது கண்ட ராமன் "இவன் யார்?" என்று விபீஷணனைக் கேட்க, "இவன் ராக்ஷச சேனாதிபதி. பிரஹஸ்தன் எனப் பெயரினன். இவன் இலங்கையிலுள்ள சேனைகளில் மூன்றிலொரு பாகத்தை யுடையவன். நல்ல சூரன்" என விபீஷணன் கூறிக்கொண்டிருக்கும்போதே வானரர்களும் ராக்ஷசர்களும் கைகலந்து பெரிய யுத்தம் செய்தனர். அப்பொழுது பிரஹஸ்தனது மந்திரிகளான நராந்தகன், கும்பஹநு, மஹாநாதன், ஸமுன்னதன் முதலிய நால்வரும் வானரர்களை யெதிர்க்கவே, த்விவிதன் என்ற வானரன் ஒரு பாறையால் நராந்தகனையும், ஒரு மரத்தால் ஸமுந்நதனையும், கொன்றான். (இந்த நராந்தகன் வேறு, ராவணன் பிள்ளை நராந்தகன்வேறு). பிறகு ஜாம்பவான் மாஹாநாதனை பாறையாலடித்துக் கொன்றான். தாரன் கும்பஹநுவை மரத்தாலடித்துவீழ்த்தினான். இவ்விதம் தனது மந்திரிகளான நான்கு வீரர்களும் இறந்ததைக் கண்ட பிரஹஸ்தன் பல வானரர்களை யடிக்க, வானர சேனாதிபதியான நீலன் அவனை யெதிர்த்தான். அப்பொழுது பிரஹஸ்தன் நீலனைப் பலபாணங்களாலடிக்க, நீலன் தன் கையிலிருந்த மரத்தால் பிரஹஸ்தன் குதிரைகளை யடித்துக்கொன்று அவன் கையிலிருந்த வில்லையும் பிடுங்கி முறித்துக் கோபத்தோடு கர்ஜித்தான். உடனே பிரஹஸ்தன் பயங்கரமான முஸலாயுதத்துடன் ரதத்தை விட்டுக் குதித்து ஓடிவந்து நீலனை நெற்றியிலடித்தான். நீலன் கையால் அவன் மார்பில் அறைந்தான். பிரஹஸ்தன் நீலனைவிரட்டவே, நீலன் ஒரு பாறையால் அறைந்து அவனைக் கொன்றான்.

தலைவன் விழக்கண்ட சேனைவீரர்கள் சிதறியோடினர். அதன் பின் ராவணன் தானே யுத்தம்செய்ய யுத்தகளத்திற்கு வருகையில் "இவன் யார்" என்று ராமன் விபீஷணனைக் கேட்க, "இவன்தான் ராவணன்" என்று விபீஷணன் சொல்லி, அவனுக்கருகிலிருந்த சில வீரர்களையும் காட்டினன். அவனது தேஜஸைக் கண்ட ராகவன், ஆச்சரியத்துடன் "இவன் எவ்வளவு தேஜஸ் உள்ளவனயிருக்கிறன்! சூரியன்போல் காண்முடியாதவனயிருக்கிறனே. தேவதானவர்களுக்குக்கூட இப்படிப்பட்ட தேஜஸ் இல்லையே. பூதங்களுடன் கூடிய அந்தகன்போல் பிரகாசிக்கும் இவன் தெய்வகதியால் என்னெதிரில் காணப்படுவதால் சீதையை யபகரித்ததால் உண்டான கோபத்தை இவனிடத்தில் செலுத்துகிறேன்" என்றுரைத்து வில்லில் உக்கிரகமான சரத்தைப் பூட்டினர். அதற்குள் ராவணன் வரும்போதே வானரக்கூட்டத்தை யழித்துக்கொண்டு வருவதைக்கண்ட சுக்ரீவன் கோபித்து ஒரு மலையை அவன்மேல் பிரயோகித்தான். அதை ராவணன் பாணங்களால் சேதித்துவிட்டுச் சுக்ரீவனையும் ஒரு பாணத்தாலடிக்க, அந்த அடி பொறுக்காமல் சுக்ரீவன் கதறிக்கொண்டு கீழேவிழுந்தான். அப்பொழுது எல்லா வானரர்களும் ராவணனை எதிர்த்து, அவனல் அடிபட்டு, பயந்து ஓடி, ராமனையடைந்து தங்களைக் காக்கவேண்டுமென்று வேண்டினர்கள். ராகவன் வில்லை யெடுத்துக்கொண்டு கிளம்பும்போது லக்ஷ்மணன் தான் சண்டைக்குப் போவதாய்த் தெரிவிக்கவே, "இவன் அதிக பராக்கிரமமுள்ளவன். உனது வில்லாலும் சௌரியத்தாலும் நீ உன்னை ஜாக்கிரதையாகக் காத்துக்கொள்." என்றுசொல்லி ராமன் லக்ஷ்மணனை யனுப்பினர். இதற்குள் ராவணன் பல வானரர்களை யடித்ததைக்கண்ட ஹனுமான் அவனை நெருங்கி, "ஏ, ராவண, தேவாதிகளால் உனக்கு சாவில்லை என்றுதான் உனக்கு வரமிருக்கிறதே தவிர வானரர்களிடம் பயமில்லையென்று வரம் கிடையாது. ஆதலால் இந்த எனது வலதுகை முஷ்டியானது உனது பிராணனை வாங்கப்போகிறது" என்றுசொல்லி அவனைக் குத்தச்சென்றன். அதுகேட்டு கோபத்தை யடைந்த ராவணன், "ஏ, வானர, நீ என்னைக் கொன்றுவிட்டு 'மகா பலமுள்ளவனன ராவணனைக் கொன்றுவிட்டேன்' என்ற கீர்த்தியைப் பெற்றுக்கொள். எனக்கு மிகுந்த சந்தோஷம். உன் பலத்தைத் தெரிந்துகொண்டு பிறகு நான் உன்னை யடிக்கிறேன்" என்றான். ஹனுமான், "ஏற்கனவே நான் உனது பிள்ளையைக் கொன்றதை ஞாபகம் வைத்துக்கொள்" என்றுரைத்து அவன்

மார்பில் குத்தவே, ராவணன் ஒரு முகூர்த்தகாலம் தன்னை மறந்திருந்த பின் பிரக்ஞையடைந்து தானும் தனது வலதுகரத்தால் ஹனுமான் மார்பில் ஓங்கிக் குத்தினன். ஹனுமானும் அக்குத்தால் முகூர்த்தகாலம் பிரக்ஞையிழந்து பிறகு பிரக்ஞையடைந்த பொழுது ராவணன் அவனைப் பார்த்து, "வானர, உன்பலம் கொண்டாடத்தக்கது. சத்துருவான நீ சிலாகிக்கத் தகுந்தவன்" என்று கூற ஹனுமான், "என்னால் அடிபட்ட நீ இன்னும் உயிருடனிருக்க எனது பலம் எவ்விதம் சிறந்ததாகும். அந்த பலம் உபயோகமற்றதே. நீ மறுபடி என்னை யடிக்கலாம். அதற்குப் பிறகு நான் உன்னை யடித்து யமபட்டணத்திற் கனுப்புகிறேன்" என்று சொன்னான். உடனே ராவணன் ஹனுமானை ஒரு குத்து குத்தவே, ஹனுமான் சற்றுநேரம் பிரக்ஞையிழந்தான். பிறகு ராவணன் நீலனை அக்கினியாஸ்திரத்தாலடித்து அவனுடன் சண்டையிடும்போது ஹனுமான் எழுந்து, இருவர் சண்டைசெய்கையில் நடுவில் பிரவேசிப்பது அதர்மமெனப் பேசாமலிருந்தான். ராவணன் நீலனையும் மற்ற வானரர்களையும் அடிப்பது கண்ட லக்ஷ்மணன், "நான் இதோ நிற்கிறேன்" என்றுரைக்க, ராவணன் லக்ஷ்மணனை ஏழுபாணங்களாலடித்தான். லக்ஷ்மணன் அவைகளைப்பலபாணங்களால் கண்டித்ததால், ராவணன் கோபங்கொண்டு லக்ஷ்மணனைப் பின்னும் பல பாணங்களால் அடித்து மேலும் தனக்கு பிரம்மாவால் கொடுக்கப்பட்ட சரத்தால் அவன் நெற்றியில் அடித்தான். அந்த அடியால் லக்ஷ்மணன் பிரக்ஞையிழந்து வில்லை நழுவவிட்டான். சற்றுநேரங்கழித்து பிரக்ஞையடைந்ததும், அவன் தனது வில்லை யெடுத்துக்கொண்டு ராவணன் வில்லை முறித்து, அவனை யடித்தான். அதனால் பிரக்ஞையிழந்த ராவணன் சிறிதுகாலத்திற்குப் பின் எழுந்து தனக்கு ஏற்கனவே பிரம்மதேவன் கொடுத்திருந்த சக்தியாயுதத்தை லக்ஷ்மணனது அகன்ற மார்பில் பிரயோகித்து, அவனைக் கீழே தள்ளி அவன் சமீபத்தில் வந்து அவனைத் தனது கைகளால் தூக்கமுயன்றும், ஹிமவான் முதலிய மலைகளையெல்லாம் அசைத்த அந்த ராவணன் லக்ஷ்மணனை அசைக்க முடியவில்லை. ஏனென்றால் ராவணன் தன்னைத் தூக்கும்போது தனக்கு விஷ்ணுபலம் உண்டு என்று லக்ஷ்மணன் எண்ணினன். (இது எப்படி உண்டாயிற்று என்று தெரியவில்லை— அனுக்கிரகத்தால் சீக்கிரத்தில் தெரிந்துகொண்டு வெளிப்படுத்துவோம்). இவ்விதம் லக்ஷ்மணனைத் தூக்குவதற்கு ராவணன் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கையில் ஹனுமான்

கோபத்துடன் ராவணன் மார்பில் தன் கை முஷ்டியால் குத்தி அவனைக் கீழே தள்ளிவிட்டு, லக்ஷ்மணனிடம்சென்று, அப்பொழுது அந்த சரீரம் இலேசாகிவிட்டதால் அவனைத் தூக்கிக்கொண்டு ராமனிடம் சென்றான். சற்றுநேரத்துக்குப் பின் லக்ஷ்மணன் எழுந்தான். தன் தம்பி அடிபட்டதால் கோபத்தை யடைந்த ராமன் ராவணனை எதிர்க்க, அவரைத் தன் தோளில் ஏறிக்கொள்ளும்படி ஹனுமான் சொன்னான். அவ்விதமே ராகவன் ஹனுமான் தோளில் ஏறிக்கொண்டு, "ஏ, ராவணா, நீ எந்த இடத்திற்குச் சென்றாலும் நான் உன்னை விடப்போவதில்லை" என்று சொல்லிக்கொண்டு அவனைப் பாணங்களால் அடிக்க, ராவணன் கோபத்துடன் ராமனைத் தூக்கிக்கொண்டிருக்கும் ஹனுமானை யடித்தான். அதனால் ஹனுமான் கோபத்தால் ஜ்வலித்தான். அப்பொழுது ராமன் ராவணனது ரதத்தை யழித்து, சாரதியைக் கொன்று, சகல ஆயுதங்களையும் விலக்கி, ஒரு பாணத்தால் அவன் தலையிலிருந்த கிரீடத்தையும் சேதித்துவிட்டு, அவனை நோக்கி, "ஏ, ராவணா, உன்னால் மகத்தான காரியம் செய்யப்பட்டது. நீ இப்பொழுது என்னால் உனது பௌருஷத்தை இழந்திருக்கிறாய். ஆதலால் நீ இன்று ஊருக்குச் சென்று சிரமபரிகாரம் செய்துகொண்டு நாளை ரதத்துடனும், சேனைகளுடனும், சகல ஆயுதங்களுடனும் வந்து என் பௌருஷத்தைப் பார்" என்று சொல்ல, ராவணனும் தன் பட்டணத்தை யடைந்தான்.

இவ்விதம் தனதிருப்பிடத்தை யடைந்த ராவணன் ராமனது பராக்கிரமத்தை யெண்ணி, 'எனக்கு இப்பொழுது மனுஷ்யனால் அவமானம் உண்டாயிற்று. இதற்குக் காரணம் இந்த ராமன் வம்சத்தில் ஆதியிலிருந்த அனரண்யன் என்ற மகாராஜன் சாபம்தான். மேலும் வேதவதி யென்ற ஸ்திரீ என் வதத்திற்குக் காரணமாய் வருவதாகச் சொல்லி, அவளே சீதையாய் ஜனித்து வந்திருப்பதாலும் இந்தக் கஷ்டம் உண்டாயிற்று' என்றெண்ணிக் கோபத்துடன், பிரம்மாவால் 'செத்தபிணம்போல் இருக்கக்கடவாய்' என்று சபிக்கப்பட்டு, அதனால் தூக்கத்திலிருக்கும் தனது தம்பியான கும்பகர்ணனை எழுப்பினால் அவன் யாவரையும் கொன்றுவிடுவான் என்று அவனை எழுப்பச் சொல்லவே, யூபாக்ஷன் என்ற ராக்ஷசன் பலவீரர்களுடனும் அவன் தூங்குமிடத்திற்குச் சென்று, அவனைப் பல ஆயுதங்களாலடித்து, யானை முதலிய பல மிருகங்களால் மிதிக்கச்செய்தான். அப்பொழுது கும்பகர்ணன்

சற்று தூக்கம்தெளிந்து, மறுபடியும் தூங்கிவிட்டான். மறுபடியும் அவனை யெழுப்பவே, அவன் எழுந்திருந்து, நன்றாக உண்டு, ராவணனிருப்பிடத்தை யடைந்தான். ராவணன் அவனைப் பார்த்து, "ராமாதிகளைக் கொன்றுவா" என்று சொல்ல, கும்பகர்ணன், "பரதாராபஹாரணம் அதர்மமல்லவா? ஆதலாலல்லவோ இவ்வளவு துன்பங்கள் நேரிட்டன! தாங்கள் சொல்வதும், செய்வதும் உசிதமல்ல" என்றுரைக்கக் கேட்ட ராவணன் சீற்றங் கொண்டு, "இவர்களைக் கொல்வதாக நீ ஆதியில் மந்திராலோசனை மண்டபத்தில் சொல்லிவிட்டு இப்பொழுது தூக்கக் கலக்கத்தில் இவ்விதம் பேசுகிறாயா? மேலும் நீ செய்யாத பரதாராபஹாரணத்தை நான் செய்யவில்லையே! ஒருவனுக்குக் கஷ்டம் வந்தபோது தனக்கு உதவிசெய்யுமாறு தனக்குச் சிறியவனைக் கேட்டால், அவன் கவனிக்கமாட்டான். ஏ, துஷ்டா, நான் உன் உதவியை நாடியிருக்கக்கூடாது. வேண்டுமானால், நீ தூங்கச்செல்லலாம்" என்றான். அப்பொழுது கும்பகர்ணன் ராவணனைப் பார்த்து, "வீரனே, கோபிக்கவேண்டாம். இப்பொழுதே சென்று நான் ராமாதிகளைக் கொன்றுவருகிறேன்" என்றுரைத்து ஆயிரம் பாரம் கனமுள்ள சூலத்தை யெடுத்துக்கொண்டு தனக்கு பக்கபலம் வேண்டாமென்று சொல்லிவிட்டு ஊர்த்வரோமா உள்ளவனை கும்பகர்ணன் யுத்தகளத்தை நாடிவரும்போதே தனது கைவேகம், கால்வேகத்தால் பலவானரர்களைக் கொன்றான். அதனால் பயந்தோடிய வானரர்களை அங்கதன் சமாதானப்படுத்தித் திருப்பிக்கொண்டுவர, கருடன் சர்ப்பங்களை பக்ஷிப்பதுபோல கும்பகர்ணன் நூற்றுக்கணக்கான வானரர்களைத் தனது கதாயுதத்தால் அழித்தான். அப்பொழுது த்விவிதன் என்னும் வானரன் கும்பகர்ணன்மேல் ஒரு பெரிய மலையைப் பிரயோகித்து அவனது ரதத்தையும், குதிரைகளையும் அழிக்க, வானரர்கள் தைரியங்கொண்டு பல ராக்ஷசர்களை யழித்தனர். அப்பொழுது ஹனுமான் பல மலைகளைக் கும்பகர்ணன்மேல் பிரயோகிக்க, கும்பகர்ணன் சூலாயுதத்தால் அவைகளைத் தடுத்துவிட்டான். மறுபடியும் வேறொரு மலையை எறியவே, கும்பகர்ணன் கோபங்கொண்டு சூலாயுதத்தால் முழுபலத்துடன் ஹனுமான் மார்பில் குத்தினான். அதனால் மார்பு பிளந்து கதறிக்கொண்டு ஹனுமான் கீழே விழவும் வானரர்கள் பயந்துகொண்டுஓடினார்கள். அப்பொழுது நீலன் கோபித்து கும்பகர்ணன்மேல் ஒரு மலையைப் பிரயோகிக்க, அவன் அதைத் தன் முஷ்டியால் தடுத்துவிட்டான். அப்பொழுது ஐந்துவீரர்கள்

அவனை யெதிர்க்கவே, அவன் ஒருவனைக் குத்தியும், வேறொருவனை முழங்காலால் இடித்தும், மற்றொருவனைக் கைகளால் அடித்தும், பின்னும் ஒருவனை அறைந்தும், இன்னொருவனை வேகத்தால் கீழேதள்ளியும் கதறச்செய்யவே, அவனது பலத்தைக் கண்ட அங்கதன் கோபங்கொண்டு, ஒரு மலையால் அவனை யடித்தான். அப்பொழுது கும்பகர்ணன் அவனைத் தனது சூலத்தால் அடிக்க அவன் வெகு சாமர்த்தியமாய்த்தப்பித் தன்கையால் கும்பகர்ணனை அறைய, கும்பகர்ணன் சற்றுப் பிரமித்துப் பின் ஞாபகமடைந்து, தனது கையை மூடிக்கொண்டு அங்கதனைக் குத்தித் தள்ளிவிட்டுச் சூலத்தை யெடுத்துக்கொண்டு சுக்ரீவனை யெதிர்த்தான். சுக்ரீவன் அவனைநோக்கி, "ஏ, வீரனே, நீஏன் சாமானியமான இந்த வானரர்களைக் கொல்கிறாய்? இதோ மலைகளை நான் உன்மேல் பிரயோகிக்கிறேன் பார்" என்று சொல்லக்கேட்டு கும்பகர்ணன், "சுக்ரீவா, நீ பிரம்மாவின் பேரனென்றெனக்குத் தெரியும். உன் பௌரஷத்தையும் நானறிவேன். அநாவசியமாய்வாயில் பேசாமல் உன் சாமர்த்தியத்தைச் செய்கையில் காட்டு" என்றுரைக்க, சுக்ரீவன் ஒரு பாறையால் கும்பகர்ணனை மார்பிலடித்தான். உடனே கும்பகர்ணன் கோபத்துடன் அவனைக் கொல்வதற்காகச் சூலத்தை விட்டான். கொஞ்சநாழிகைக்கு முன் சூலத்தால் அடிபட்டுவிழுந்த ஹனுமான் அப்பொழுது எழுந்து சுக்ரீவன்மேல் விடப்பட்ட சூலத்தைக் கண்டு, வேகமாய்ச் சென்று அதைப் பிடித்து முறித்து சுக்ரீவனைக்காப்பாற்றினன். அதனல் கோபங்கொண்ட கும்பகர்ணன் அதிவேகமாய் லங்கையிலுள்ள மலையபர்வதத்தின் ஒரு கொடிமுடியைப் பிடுங்கி, அதனல் சுக்ரீவனையடித்துக் கீழேதள்ளி, அவனை யெடுத்துக்கொண்டு லங்கையில் பிரவேசித்தான். அதுகண்ட ஹனுமான், "இப்பொழுது நான் கும்பகர்ணனை யடித்துச் சுக்ரீவனைக் காப்பாற்றுவேனு! அப்படி நான் அவரைக் காப்பாற்றினல் அவருக்குக் கீர்த்தியில்லையே! மந்திரி ராஜனைக் காத்தானென்று அவருக்கு அவமானமல்லவோ உண்டாகும்? இதற்கு என்ன செய்வது?" என்று யோசித்துக்கொண்டிருக்கையில், கும்பகர்ணன் சுக்ரீவனைக் கொண்டுபோய்விட்டான். அதைக்கண்டு ராக்ஷசர்கள் சந்தோஷித்து, பன்னீர் முதலியவைகளால் கும்பகர்ணனுக்கு அபிஷேகம் செய்தார்கள். அந்தப் பன்னீர் இரத்தமயமான கும்பகர்ணன் தன் கையில் அக்கிக் கொண்டுபோன சுக்ரீவன் முகத்திில்பட, அவன் பிரக்ஞையடைந்து, தான் தப்பித்துக்கொள்ளவேண்டிய வழியை யோசித்

துக்கொண்டு, தனது கூர்மையான நகங்களால், கும்பகர்ணனது விலாப்புறத்தில் நன்றாகக் கீறினான். கும்பகர்ணன் சினந்து, கீழேயோட்டு அவனைத்தேய்த்துவிடவேண்டுமென்றெண்ணி, அவனைக் கீழேபோட, அபாரவேகமுள்ள சுக்ரீவன் அதிசீக்கிரத்தில் உயரக்கிளம்பி, கும்பகர்ணன் மூக்கைத்தனது பற்களால் கடித்து, காதுகளை நகங்களால் கிள்ளிவிட்டு வேகமாய்ச் சென்று ராமனையடைந்தான். காது, மூக்குப்போனதால் கோபித்த கும்பகர்ணன் முத்கராயுதத்தால் வானரர்களை நூற்றுக்கணக்கில் அழித்துக்கொண்டு வருவதைக் கண்ட லக்ஷ்மணன், ஏழு பாணங்களால் அவனையடித்தான். கும்பகர்ணன் அவைகளை லக்ஷியம் செய்யாது, ராமனை நாடிச்செல்ல, ராமனும் அவனைப் பலபாணங்களாலடித்தும், அவைகளையும் அவன் லக்ஷியம் செய்யாமல் வானரர்களைப் புஸ்வித்தில் கொன்றான். அப்பொழுது லக்ஷ்மணனது யோசனைப்படி பல வானரர்கள் கும்பகர்ணன்மேல் ஏறிக்கொண்டு அவனைத் துன்புறுத்தவே, அவன் மேலும் அதிக சீற்றங்கொண்டு பின்னும் வானரர்களையழித்துவந்தான். அப்பொழுது ராமன் அவனைச் சம்ஹரிப்பதற்காகத் தான் வாலியுடன் சண்டைசெய்யும்போது உபயோகித்த பாணங்களையும், வாலியைக்கொன்ற பாணத்தையும், ஸப்தஸால மரங்களைப் பேதித்த அஸ்திரத்தையும் பிரயோகித்தும், சகலமும் வியர்த்தமானது கண்டு கவலையுற்றுப் பின் வாயவ்யாஸ்திரத்தால் முத்கராயுதத்தை வைத்திருந்த அவனது வலது கரத்தைச் சேதித்தார். உடனே அவன் இடது கரத்தால் ஒரு மரத்தைப் பிடுங்கிவீச, ராமன் ஐந்திராஸ்திரத்தால் அக்கரத்தையும் சேதித்தார். பிறகு அவன் வாயைத் திறந்துகொண்டு அவரை விழுங்க ஓடிவரவே, ராமன் இரண்டு அர்த்த சந்திர பாணங்களால் அவனது இரண்டு கால்களையும் வெட்டினார். அப்பொழுது கால்களில்லாத அந்த சரீரம் வேகமாய் அவரையெதிர்த்துவர, அவர் பல பாணங்களால் அவனது வாயை நிரப்பிவிட்டு, ஐந்திராஸ்திரத்தால் குண்டலங்களுடன் கூடின அவனது தலையையறுத்து உருட்டிவிட்டார். ராக்ஷசர்கள் ஓடிச்சென்று ராவணனிடம் இவ்விஷயத்தைச் சொல்ல, அவன் மிகவும் துக்கித்தான். கும்பகர்ணவதத்தால் சந்தோஷித்த தேவதைகள் ராமனைச்-சிலாகித்துக் கொண்டாடினார்கள்.

இவ்விதம் வருந்திக்கொண்டிருக்கும் ராவணனை அவனது பிள்ளை திரிசிரஸ் தேற்றிவிட்டுத் தனது சகோதரர்களான,

அதிகாயன், நராந்தகன், தேவாந்தகன் முதலியவர்களுடன் யுத்தத்திற்குப் புறப்பட, ராவணன் அவர்களுக்குத் துணையாகத் தனக்குச் சகோதர முறையுள்ள மத்தன், உன்மத்தன் என்பவர்களை யனுப்பினான். அவர்களுடன் மஹோதரன், மஹாபார்ச்சுவன் என்பவர்களும் புறப்பட்டனர். யாவரும் யுத்தகளத்தை யடைந்ததும் நராந்தகன் குதிரைமேலேறிக்கொண்டு எழுநூறு வீரர்களைக் கொன்றதைக் கண்ட சுக்ரீவன் அவனைக் கொல்வதற்காக அங்கதனை ஏவினான். அவன் தன் கையால் நராந்தகனது குதிரையைக் கொல்லவே, நராந்தகன் அங்கதனை யறைந்தான். அங்கதன் தன் கைமுஷ்டியால் நராந்தகனைக் குத்திக்கொன்றான். அப்பொழுது ராக்ஷசர்கள் எல்லோரும் சேர்ந்து அங்கதனை எதிர்த்தது கண்ட ஹநுமான் கோபத்துடன் அவர்களை எதிர்த்துக் கையால் குத்தி தேவாந்தகனைக் கொன்றான். அதுகண்ட மஹோதரன் நீலனை எதிர்க்க, நீலன் அவனைக் கொன்றுவிட்டான். பிறகு ஹநுமான் ஒரு கத்தியால் திரிசிரஸின் தலைகளை வெட்டிவிட, மத்தன் அவனை எதிர்த்தான். அவனுக்கு உதவியாக உன்மத்தனும் வர, மத்தனை ரிஷபன் என்ற வானரனும், உன்மத்தனை கவாக்ஷனென்ற வானரனும் கொன்றனர். இவ்விதம் பல வீரர்கள் அழிந்தது கண்டு வெகுண்ட அதிகாயன் ராமனைச் சண்டைக்கழைக்க, ராமன் அவனைக் கொல்வதற்கு லக்ஷ்மணனை அனுப்பினார். அவனிடம் அதிகாயன், "நீ சிறுவன், என்னுடன் சண்டை செய்யத் தகுந்தவனல்ல. ஆதலால் நீ போய்விடு" என்றுரைக்கக்கேட்ட லக்ஷ்மணன், "நீ வாயில் பேசவேண்டாம். உன்பலத்தைக் காரியத்தில் காட்டு. குழந்தைகளால் பலர் வெல்லப்பட்டிருப்பதை நீ அறியாயா?" என்றான். அதிகாயன் அவ்வாக்கியத்தைச் செவியுற்று கோபங்கொண்டு ஒரு அஸ்திரத்தைப் பிரயோகிக்க, லக்ஷ்மணன் அதையொரு அர்த்தசந்திர பாணத்தால் தடுத்தான். உடனே ஐந்து பாணங்களைப் பிரயோகிக்க, அவைகளையும் லக்ஷ்மணன் தடுத்து ஒரு பாணத்தால் அதிகாயனது நெற்றியைப் பிளக்க, அதிகாயன், "நீ ஸ்லாகிக்கத்தக்கவன்" என லக்ஷ்மணனைப் புகழ்ந்து, பல பாணங்களால் அவனையடித்தான். அவ்வளவையும் லக்ஷ்மணன் தடுத்துவிடவே, அதிகாயன் கோபித்து அவனை மார்பிலடித்தான். அந்த அடியால் லக்ஷ்மணன் இரத்தத்தைக் கக்கிவிட்டுக் கோபத்துடன் அக்னியாஸ்திரத்தால் அதிகாயனை யடிக்க, அவன் அதை ஸௌர்யாஸ்திரத்தால் தடுத்து ஐஷீகாஸ்திரத்தை விட, லக்ஷ்மணன் ஐந்திராஸ்திரத்தால் தடுத்தான்.

பிறகு அதிகாயன் யமனுடைய அஸ்திரத்தைப் பிரயோகிக்க, லக்ஷ்மணன் அந்த வாயவ்யாஸ்திரத்தால் தடுத்துச் சிறந்த பல பாணங்களால் அவனை யடிக்க, அவன் கோபத்துடன் லக்ஷ்மணனை ஒரு சரத்தால் மார்பிலடித்தான். அந்த அடியால் லக்ஷ்மணன் ஒரு முகூர்த்தகாலம் பிரமித்திருந்துப் பின் பிரக்ஞையடைந்து, அதிகாயனுடைய ஸாரதியையும், குதிரைகளையுமழித்து, அவனைக்கொல்வதற்காகப் பல பாணங்களை விட்டான். அப்பொழுது வாயுபகவான் தோன்றி அவனுக்குப் பிர்ம்மாஸ்திரம் தவிற மற்றவைகளால் வதங்கிடையாதென்று தெரிவிக்கவே, லக்ஷ்மணன் பிர்ம்மாஸ்திரத்தை விட்டு அவனை யழித்து ஜயத்துடன் ராமனிடம் சென்றான். இவ்விதம் சகலரும் இறந்ததையறிந்த ராவணன் மிகவும் துக்கித்து ராமனை நாராயணனென்றெண்ணிக்கொண்டிருக்கையில், அவனது மூத்தபிள்ளையான இந்திரஜித்து, "அவர்களைப் பிர்ம்மாஸ்திரத்தால் அழிக்கிறேன்" என்று சொல்லி, நிகும்பிலா மண்டபத்தை யடைந்து, அக்னிபகவானைத் திருப்திசெய்து, அவரிடமிருந்து உத்தம பிர்ம்மாஸ்திரத்தைப் பெற்றுக்கொண்டு, ரதத்திலேறி யுத்தகளத்தை யடைந்து ஆகாயத்தில் மறைந்துகொண்டு பல பாணங்களால் வானரர்களையும் ராமலக்ஷ்மணர்களையும் அடித்துப் பிர்ம்மாஸ்திரத்தைப் பிரயோகித்தான். அதனால் அநேகமாக யாவரும் கட்டுப்பட்டுவிட, அதில் கட்டுப்படாத ஹனுமான், ஜாம்பவான் முதலியோரைக் கடுமையான பல பாணங்களால் அடித்துவிட்டு, இந்திரஜித்து ராவணனிடம் சென்று, "யாவரையும் பிர்ம்மாஸ்திரத்தால் கட்டிவிட்டேன். இனி அவர்கள் பிழைக்கமாட்டார்கள்" என்று சொல்ல, அதுகேட்ட ராவணன் மிகுந்த சந்தோஷத்துடனிருந்தான்.

இவ்விதமிருக்கையில் விபீஷணன் சகல சேனைகளையும் கவனித்துக்கொண்டு வருகையில், சகலரும் கட்டுப்பட்டிருப்பதையும் ஹனுமான் கட்டுப்படாமலிருப்பதையும் கண்டு, அவனை யழைத்துக்கொண்டு பின்னும் பார்த்துக்கொண்டே ஜாம்பவானிடம் வந்தனன். ஹனுமானைக் கண்ட ஜாம்பவான் சந்தோஷித்து, "க்ஷீரசாகரத்தில் ரிஷபபர்வதம், துரோணபர்வதம் என்று இரண்டு பர்வதங்களிருக்கின்றன. அவைகளின் மத்தியிலுள்ள ஒஷதிபர்வதத்தின் தெற்கு பாகத்தில் சகலருக்கும் உயிரை யளிக்கக்கூடிய அற்புதமான விசல்யகரணிமுதலிய நான்கு கரணிகளிருக்கின்றன. அவற்றைக் கொண்டுவந்தால் யாவரும் பிழைக்கலாம்" என்று

சொல்லவே, ஹனுமான் சந்தோஷத்துடன், "அப்படியே கொண்டு வருகிறேன்" என்றுரைத்துக் குறிப்பிட்ட இடத்தை யடைந்து பார்க்கையில் அவைகள் மறைக்கப்பட்டிருந்ததால், அவைகளைக் காணுமல் என்னசெய்வதென்று யோசித்து, 'அவர் சொன்னது இதேமலையென்பதில் சந்தேகமில்லை. ஆதலால் நாம் இந்த மலையை அப்படியே கொண்டுபோய்விட்டால் அவர்கள் வேண்டிய மருந்துகளைத்தேடி எடுத்துக்கொள்ளட்டும்' என்று தீர்மானித்து, அம்மலையைப்பிடுங்கிக்கொண்டு சென்றுர். அதுவரும்போதே இறந்து கிடந்த சகலரும்பிழைக்க, சுஷேணன் என்ற வானரவைத்தியன் ஓஷதிகளைக்கொண்டு ராமலக்ஷ்மணர்களை உண்டுபண்ணவே, அவ்விருவரும் எழுந்து முழுபலத்துடனிருந்தனர். அதன்பின் ஹனுமான் அம்மலையை முன்னிருந்த இடத்திலேயே கொண்டுபோய் வைத்துவிட்டு வந்தார். பிறகு வானரர்கள் சுக்ரீவனது ஆக்ஞையால் கர்ஜிக்க, வானரர்களுக்கும் ராக்ஷசர்களுக்கும் பயங்கரமான யுத்தம் ஆரம்பமாயிற்று.

அப்பொழுது ராமன் கோபத்தை வரவழைத்துக்கொண்டு மூன்று பாணங்களால் லங்கையிலிருந்த ஒரு கோபுரத்தைப் பேதிக்க, ஆதனுல் சீற்றமடைந்த ராவணன், கும்பகர்ணன் புத்திரர்களான கும்பன், நிகும்பன் என்பவர்களையும், யூபாக்ஷன், சோணிதாக்ஷன், பிரஜங்கன், கம்பனன் முதலியோரையும் அனுப்பினுன். அவர்களில் கும்பனைக் சுக்ரீவன் உக்கிரமான யுத்தம் செய்து கொன்றுன். நிகும்பனை ஹனுமான் வதித்தான். மற்ற வீரர்களை வானரர்கள் கொன்றனர். அதன்பின் ராவணன் மகராக்ஷனையனுப்ப, அவன் ராமனுடன் கோரயுத்தஞ்செய்து அவரால் கொல்லப்பட்டதை யறிந்து மிகுந்த துக்கத்துடனிருப்பதுகண்ட இந்திரஜித்துத் தான் நிகும்பிலையில் யாகஞ்செய்து சகலரையும் கொன்றுவிடுவதாகத் தெரிவித்துச் சென்றுன். தான் செய்யும் யாகத்திற்குத் தடங்கல் இல்லாமலிருப்பதற்காக, மேற்குக் கோட்டைவாயிலிலிருக்கும் ஹனுமானுக்கு மட்டும் சீதையைத் தெரியுமாதலால், அவன் எதிரில் மாயாசீதையை வெட்டிவிட்டால், ஹனுமான் ராமரிடம் சீதை வெட்டப்பட்ட விஷயத்தைச் சொல்வான். அப்பொழுது யாவரும் துக்கப்பட்டுக்கொண்டிருப்பார்கள். அதற்குள் நாம் நமது யாகத்தை முடித்துக்கொள்ளலாம்' என்றெண்ணித் தனது மாயாசிருஷ்டியால் மாயாசீதையை உண்டாக்கி, அவளைத்தன் ரதத்திலேற்றிக்கொண்டு யுத்தகளத்திற்குச்சென்று

யுத்தத்தை ஆரம்பிக்கும்போது ஹனுமான் சீதையை இந்திரஜித்தின் ரதத்தில் கண்டு, அவனைநோக்கி, "நீ செய்வது சரியல்ல. ராமபத்தினியை யுத்தகளத்தில் கொண்டுவரலாமா? அவளை விட்டுவிடு" என்று சொல்லும்போது, அந்த மாயாசீதையும் துக்கத்துடன் ஹனுமானிடம் தன்னைக் காக்கவேண்டும் என்தெரிவித்தாள். அப்பொழுது இந்திரஜித்து, "இவளால்லவோ இப்பட்டணம் இவ்விதம் அவதிப்படுகிறது! இவள் கதியைப் பாரும் இப்பொழுது" என்று சொல்லிக்கொண்டே அவளது கேசபாரத்தைப் பிடித்துக்கொண்டு அவளது கன்னத்தில் அடிக்க, அவள் கதறினாள். ஹனுமான், "இது அடாது, அவளை விட்டுவிடு" எனத் தெரிவிக்க, இந்திரஜித்து, "இவளால் நாங்கள் மிகுந்த துன்பமடைந்தோம். ஆதலால் இவள் கொல்லத்தக்கவள்" என்று சொல்லிக் கத்தியால் அவள் தலையை வெட்டிவிட்டான். உடனே ஹனுமான் சகல வானரர்களுடனும், ஜாம்பவானுடனும் ராமரை யடைந்து மிகுந்த துக்கத்துடன் இந்திரஜித்து சீதையைக் கொன்ற விஷயத்தைத் தெரிவிக்க, ராகவன் வருத்தத்துடன் கீழே விழுந்து, "ஏ, சீதே, இனி நான் உன்னை யடையப்போகிறேனா? பத்தினியைக் காப்பாற்ற முடியாத நானும் ஒரு வீரனா! எனக்கு வில்லும் வேண்டுமா?" என்று பிரலாபித்துக்கொண்டிருக்க, லக்ஷ்மணன் அவரைத் தன் மடியில் போட்டுக்கொண்டு, "உத்தமா, நான் அப்பொழுதே சொன்னேனே. நீர் கேட்காமல் தெய்வத்தை நம்பியும் தர்மத்தைக் கடைப்பிடித்தும் கிடைத்த பலன் பத்தினியை இழந்ததைத்தவிற வேறில்லை. தெய்வமிருந்தால், தர்மமிருந்தால் சீதையைக் காத்திருக்காதா?" என்று சொல்ல, ராமன் சற்று வாளாயிருந்தார். அப்பொழுது தெய்வம், தர்மம் இரண்டும் விபீஷண ரூபத்தில் வந்து, ராமன் துக்கப்படுவதைக் கண்டு, லக்ஷ்மணனைப் பார்த்து, "அண்ணா ஏன் துக்கப் படுகிறார்?" என்று கேட்க, லக்ஷ்மணன், "இந்திரஜித்து சீதையை வெட்டிவிட்டதால் அண்ணா துக்கப்படுகிறார்" என்று சொன்னான். விபீஷணன் அதைக் கேட்டு ராகவனைப் பார்த்து, "உத்தமா, கவலைப்படவேண்டாம். நான் இப்பொழுது தான் அசோகவனம் சென்றுவந்தேன். சீதை அங்கிருப்பதைக் கண்டேன். அவள் சௌக்கியமாயிருக்கிறாள். இந்திரஜித்து அபிசாரயாகம் செய்கிறான். உங்களுக்கு துக்கத்தை உண்டாக்கிவிட்டால், தன் யாகத்தைத் தடங்கலில்லாமல் முடித்துக்கொள்ளலாமென்ற எண்ணத்துடன் மாயாசீதையைக் கொன்றானே தவிற வேறல்ல. ஆதலால்

நீர் துக்கத்தை விட்டுவிடும். மேலும் தாங்கள் இப்பொழுதே லக்ஷ்மணனை என்னுடன் அனுப்பினால் இந்திரஜித்து செய்யும் யாகத்தைக் கெடுக்கலாம்'' என்றுரைக்க, ராகவன் லக்ஷ்மணனைத் திரும்பிப் பார்த்து, "லக்ஷ்மணா, 'தெய்வமிருந்தால், தர்மமிருந்தால் சீதையைக் காத்திருக்காதா?' என்றாயே. இப்பொழுது சீதை ரக்ஷிக்கப்பட்டிருக்கிறாளல்லவா? அது இருக்கட்டும். இப்பொழுதே நீ விபீஷணனுடனும், ஹனுமானுடனும் சென்று இந்திரஜித்தை ஜயித்துவா'' என்றுரைத்தார். லக்ஷ்மணன் அண்ணாவை நமஸ்கரித்துவிட்டு வில்லை யெடுத்துக்கொண்டு உடனே புறப்பட்டுச்சென்று விபீஷணனுடனும் ஹனுமானுடனும் இந்திரஜித்தின் யாகத்தை அழித்தான். உடனே இந்திரஜித்து வில்லுடன் பக்கத்திலிருந்த ரதத்திலேறிக்கொண்டு, எதிரிலிருந்த விபீஷணனைப் பலவிதமாய்த் தூஷிக்க, விபீஷணன், "ஏ, துஷ்டா, நீ அதர்மிஷ்டனானதலால் இவ்விதம் என்னைத் தூஷிக்கிறாய். எந்த ஆபத்துக் காலத்திலும் என் புத்தி அதர்மத்தில் போகக்கூடாதென்றும், என் புத்தி எதெதில் செல்லுகிறதோ அதது அப்படியப்படியே தர்மமாகட்டுமென்றும் எனக்குக் கிடைத்திருக்கும் வரத்தை நீ யறிந்திருந்தால் என்னைத் தூஷிக்கவேமாட்டாய். நித்யனாக இருப்பவன் எப்பொழும் நித்யவஸ்துவையே அடைவானே தவிர அநித்யவஸ்துவை யடையமாட்டான். நான் எப்பொழுதும் சிறந்த தர்மத்திலேயே இருக்கிறேன்.'' என்று சொல்லி மேலும் "நீ அன்று உன்னைச் சூரனென்று சொல்லிக்கொண்டாயே. இப்பொழுது உன் பௌருஷத்தை லக்ஷ்மணனிடம் காட்டு பார்ப்போம்'' என்று சொன்னான். அதுகேட்ட இந்திரஜித்து ஹனுமான் தோளின்மேல் வீற்றிருந்த லக்ஷ்மணனைக் கண்டு, "உங்களெல்லோரையும் இதோ அழிக்கிறேன்'' என்றுரைக்க, லக்ஷ்மணன், "உன் யோக்யதை எனக்குத் தெரியாதா? நீ வாயில் பேசுவாயே தவிர செய்கையில் நடத்தமுடியாது. திருட்டுத்தனமாய் நீ எங்களை முன்பு மறைந்தடித்தவனல்லவா!'' என்று சொன்னான். இந்திரஜித்து உடனே கோபத்துடன் பலபாணங்களை லக்ஷ்மணன் மேல்விட, லக்ஷ்மணனும் சினத்துடன் பலபாணங்களால் அவனை யடித்தான். காயங்களால் இருவர் சரீரங்களும் இரத்தமயமாயிருக்க, இருவரும் கோரமான யுத்தம் புரிகையில் லக்ஷ்மணன்விட்ட பயங்கரமான பாணங்களால் இந்திரஜித்து சற்றுநேரம் பிரக்ஞையிழந்திருந்து, பின் மறுபடி எழுந்தவுடன் கோபத்துடன் ஏழு பாணங்களால் லக்ஷ்மணனையும், பத்து பாணங்களால்

ஹநுமானையும், பல பாணங்களால் விபீஷணனையு மடித்தான். இதைக்கண்ட லக்ஷ்மணன் சற்று மந்தஹாஸம் செய்து இந்திரஜித்தைப் பல பாணங்களாலடித்து அவன் தரித்திருந்த கவசத்தையும் பேதித்துவிட, இந்திரஜித்து லக்ஷ்மணன் கவசத்தையும் பேதித்துவிட்டான். இப்படி ஒவ்வொருவரும் மற்றவனைக் கொல்லவேண்டுமென்று கோரமாக் யுத்தம் செய்கையில் லக்ஷ்மணன் மிக்வும் சாமர்த்தியமாய் இந்திரஜித்தின் சாரதியைக் கொன்றுவிட, அவன் லக்ஷ்மணனைச் சரவர்ஷங்களாலடித்தான். லக்ஷ்மணன் அந்த பாணங்களையெல்லாம் தடுத்துவிட்டுத் தானும் அவனையடிக்க, இந்திரஜித்து மாயையால் மறைந்து வேறு ரதத்துடன் வந்து வானரர்களை யடித்தான். துன்புற்ற வானரர்கள் லக்ஷ்மணனையடைய, அவன் இந்திரஜித்தின் வில்லை முறித்துவிட்டான். அவன் வேறுவில்லை யெடுத்து யுத்தம் செய்யவே, லக்ஷ்மணன் மூன்று பாணங்களால் அதையும் கண்டித்து, மற்றும் ஐந்து பாணங்களால் அவன் மார்பிலடிக்க, இந்திரஜித்தன் இரத்தத்தைக் கக்கிக்கொண்டு பின்னுமொரு வில்லால் மழை வர்ஷிப்பது போல பாணங்களை லக்ஷ்மணன்மேல் பொழிந்தான். இதனால் கோபமடைந்த லக்ஷ்மணன் அவன் சாரதியைக் கொல்ல, அவன் தானே சாரத்தியம் செய்துகொண்டு, லக்ஷ்மணனை நெற்றியிலடித்தான். லக்ஷ்மணனும் அவன் நெற்றியைப் பிளந்தான். இப்படி யுத்தம் நடக்கும்போது இந்திரஜித்து விபீஷணன் மேல் மூன்று பாணங்களை விட, அவன் வெகுண்டு கதையால் இந்திரஜித்தின் தேரில் கட்டியிருந்த குதிரைகளைக் கொன்றுவிடவே, அவன் கீழேகுதித்து விபீஷணன்மேல் ஒரு சக்தியாயுதத்தைப் பிரயோகித்தான். லக்ஷ்மணன் அதைப் பத்து பாணங்களால் தடுத்துவிட, இந்திரஜித்து மறுபடி லக்ஷ்மணனை எதிர்த்தான். இருவரும் யுத்தம் செய்கையில் தேவதைகள் ஆகாயத்திலிருந்து கொண்டு லக்ஷ்மணனைக் காத்துவந்தனர். அப்பொழுது லக்ஷ்மணன் இந்திரஜித்தைக் கொல்வதற்காக முன்பு இந்திரன் தானவாதிகளை வென்ற ஐந்திரம் என்ற அதே அஸ்திரத்தைப் பூட்டி, "ராகவன் தர்மாத்மாவாயிருப்பானேயாகில், சத்தியவந்தனுயிருப்பானேயாகில், தசரதராஜன் பிள்ளையாயிருப்பானேயாகில், பௌருஷத்தில் நிகரற்றிருப்பானேயாகில், ஏ, அஸ்திரமே நீ சென்று இப்பொழுதே ராவணியைக் கொல்வாய்" என்று சொல்லி விட்டுவிட, அது சென்று சிறந்த குண்டலங்களுடனிருந்த இந்திரஜித்தின் கழுத்தை அறுத்துத் தள்ளிவிட்டது. அதைக் கண்ட

தேவதைகள் சந்தோஷித்து லக்ஷ்மணனைப் புகழ்ந்து அவன் பேரில் புஷ்பமாரி பொழிந்தார்கள். இவ்விதம் ஜயஸ்ரீயுடன் விளங்கிய லக்ஷ்மணனிடம் ஹனுமானும் விபீஷணனும் வர, அவர்கள் தோள்களில் லக்ஷ்மணன் தன் கைகளைப் போட்டுக்கொள்ள, அவர்கள் அவனை ராமரிடம் அழைத்துச்சென்றனர். லக்ஷ்மணன் ராகவனை நமஸ்கரிக்க, அவர் தம்பியைக் கட்டியணைத்துக் கொண்டு, உச்சிமுகந்து, "நீ நல்லகாரியம் செய்தாய்" என்று அவனைப் புகழ்ந்தார். வெட்கத்தால் தலை குனிந்துகொண்டிருந்த லக்ஷ்மணனை ராமர் தன் மடியில் வைத்துக்கொண்டு பலவாறு புகழ்ந்து சுஷேணனைக்கொண்டு அவனது காயங்களை யாற்றிச் சந்தோஷத்துடனிருந்தார்.

இதுநிற்க, தன்மகன் இறந்ததையறிந்த ராவணன் மகத்தான துக்கத்துடன் புலம்பிக் கோபங்கொண்டு சீதையைக் கொல்வதற்காகக் கத்தியுடன் அசோகவனத்தை நாடி ஓடிவர, அவன் வரவை யறிந்த சீதை பயந்து துக்கத்துடன் புலம்பிக்கொண்டிருந்தாள். அச்சமயம் ராவணனது எண்ணத்தை யறிந்துகொண்ட மந்திரியான சுபார்ச்சுவன் அவனையடைந்து, "ஸ்திரீவதம் வேண்டாம். நாளையதினம் அமாவாஸ்யை. நீர் நாளை யுத்தத்திற்குச் சென்றால் ராமனைக்கொன்று சீதையை யடையலாம்" என்று பலவாறு ஹிதமாகச் சொல்லித் தடுத்தான். பிறகு ராவணன் அங்கிருந்து சென்று சேனைகளைத் திரட்டிக்கொண்டு யுத்தத்திற்குச் செல்ல, வானரர்கள் கோரமான யுத்தம்செய்து பலரைக் கொன்றனர். பின்னும் சேனைகள் வர, ஹனுமானும் ராமரும் யுத்தகளத்தில் பிரவேசித்து யுத்தம் செய்தனர். மேலும் சேனைகள் வருவது கண்ட ராமர் காந்தர்வாஸ்திரத்தைப் பிரயோகிக்க, அந்த அஸ்திர மகிமையால் ராக்ஷச சேனையில் ஒருவர்க்கொருவர் ராமனாகத் தெரிந்தது. ஆதலால் ஒருவர்க்கொருவர் அடித்துக்கொண்டு சகல சேனைகளும் அழிந்தன. இதைக்கண்ட ராமர், "இவ்விதம் சகலரையும் அழிக்கும் சக்தியுடைய இந்த அஸ்திரம் எனக்குத் தெரியும். பரமசிவனுக்குத் தெரியும்" என்று சொன்னார். சகல ராக்ஷசர்களும் இறந்ததைக் கேட்ட ராவணன் மிகவும் துக்கித்து, இரண்டு மந்திரிகளுடன் மற்றும் சில வீரர்களுடனும் சண்டைக்கு வர, மந்திரிகளையும், வீரர்களையும் வானரர்கள் கொன்றுவிட்டனர். பிறகு ராவணன் ராமனை எதிர்த்தான் (ராவணன் சண்டைக்குப் புறப்பட்டபொழுது மண்டோதரி அவனுக்கு தர்மவிஷயமாய்

உபதேசம் செய்தாள் என்பது கவி ஹிருதயம் அல்ல. சித்தாந்த புத்தகத்தைப் பார்க்க). அப்பொழுது லக்ஷ்மணன் தான் ராவணனுடன் சண்டைசெய்ய எண்ணி எழுபாணங்களால் அவனையடித்து அவனது மனுஷ்ய த்வஜத்தையும் சேதித்தான். அச்சமயம் லக்ஷ்மணனுக்குத் துணையாய்வந்த விபீஷணனைக் கொல்வதற்காக ராவணன் ஒரு சக்தியாயுதத்தைப் பிரயோகித்தான். அந்த லக்ஷ்மணன் மூன்று பாணங்களால் சேதித்ததால் கோபங்கொண்ட ராவணன் தன் மாமனரான மயனல் கொடுக்கப்பட்ட பயங்கரமான சக்தியாயுதத்தைக் கையிலெடுத்துக்கொண்டு லக்ஷ்மணனை நோக்கி, "இதோ பார். இது உன் உயிரை வாங்கப்போகிறது" என்று சொல்லி அதைப் பிரயோகிக்க, அது லக்ஷ்மணனை நோக்கி அதிவேகமாய் வந்தது. ராமன் அந்த சக்தியைப்பார்த்து கோபத்துடன், "உன் எண்ணம் ஒழியட்டும். லக்ஷ்மணனுக்கு மங்களம் உண்டாகட்டும்" என்று சொல்ல, அதற்குள் அவ்வாயுதம் லக்ஷ்மணன் மார்பில் பாய்ந்து கீழே தள்ளிவிட்டது. உடனே ராமன் கீழேவிழுந்த லக்ஷ்மணனிடம் ஓடிவந்து, அவன் மார்பிலிருந்த சக்தியைப் பிடுங்குகையில், ராவணன் பலபாணங்களால் ராமனை யடிக்க, ராமன் அவைகளை லக்ஷ்மணன்மேல் படாமல் தடுத்துக்கொண்டு, மார்பிலிருந்த சக்தியைப் பிடுங்கி முறித்து எறிந்துவிட்டு "இது துக்கப்படுவதற்குச் சமயமல்ல" என்று எண்ணிக்கொண்டு, "நான் இன்று ராவணனை யடிக்கிறேன். எனது ராமத்வத்தை இந்த உலகம் பார்க்கட்டும்" என்று கூறி ராவணனைப் பல பாணங்களாலடித்து அவனைப் பிரமிக்கச்செய்துவிட்டு லக்ஷ்மணனிடம் சென்று, அவனது நிலைமையைக் கண்டு பலவாறு துக்கித்துக்கொண்டிருக்கையில் சுஷேணன் "லக்ஷ்மணன் பிரேதத்தன்மை யடையவில்லை. இவர் வெகுகாலம் தீர்க்காயுளுடன் இருக்கவேண்டியவராய்த் தோன்றுகிறது. ஆகையால் கவலைவேண்டாம்" என்றுரைத்து ராமனைத் தேற்றி, ஒஷதியைக் கொண்டுவருமாறு ஹநுமானிடம் தெரிவிக்க, அவர் வெகுவேகமாய்ச்சென்று ஒஷதிபர்வதத்தைக் கொண்டுவந்தார். சுஷேணன் ஒஷதியைக்கொண்டு லக்ஷ்மணனை எழுப்பவே யாவரும் குதூகலமடைந்தனர். ராமரும் பிரேமையுடன் லக்ஷ்மணனைக் கட்டிக்கொண்டார். அப்பொழுது லக்ஷ்மணன் ராமரிடம், "இராவணனைக் கொல்வதாகத் தாங்கள் கொண்ட பிரதிக்ஞையை உடனே நிறைவேற்ற வேண்டுகிறேன். சிம்மமானது எவ்விதம் யானையைக் கொல்லுமோ அவ்விதமே தாங்கள் அவனைக் கொல்ல

வேண்டும்" என்றுரைத்தவுடனே ராமர் வில்லை வளைத்து நாணேற்றிப் பல பாணங்களால் ராவணனை யடித்தார். ராவணனும் பல உக்கிரமான பாணங்களாலடிக்க ராமர் அவைகளையெல்லாம் தடுத்துவிட்டுப் பின்னும் பல சரங்களை விட்டார். இவ்விதம் யுத்தம் நடக்கையில், ராவணன் ரதத்திலும், ராமர் பூமியிலும் இருந்துகொண்டு செய்யும் யுத்தம் சமயுத்தமல்லவென்று தேவதைகள் எண்ண, உடனே இந்திரன் ரதசாரதியான மாதலியை விளித்து, "நீ உடனே நமது ரதத்தைக் கொண்டுபோய் ராமனை இதிலேறிக்கொண்டு யுத்தம் செய்யச்சொல்லி, அவருக்கனுகூலமாயிருந்து, பிறகு இங்குவா" என்றுசொல்ல, மாதலியும் ரதத்தைக் கொண்டுவந்து ராமரை நோக்கி, "நீர் இதில் ஏறிக்கொண்டு யுத்தம் செய்யலாம். உமது ஜயத்தின்பொருட்டு இது அளிக்கப்பட்டிருக்கிறது. அற்புதமான கவசமும், வில்லும் சக்தியாயுதமும் இதில் இருக்கின்றன" என்றுரைத்தான். ராமரும் சந்தோஷத்துடன் அதிலேறிக்கொண்டு காந்தர்வாஸ்திரத்தைக் காந்தர்வாஸ்திரத்தாலும், தேவதாஸ்திரத்தைத் தேவதாஸ்திரத்தாலும் தடுத்து யுத்தம்செய்ய, ராவணன் ராக்ஷச சம்பந்தமான நாகாஸ்திரத்தைப் பிரயோகிக்க, எங்கும் நாகமயமாய்வரும் அஸ்திரத்தை ராமர் கருடாஸ்திரத்தால் தடுத்தார். அதனால் ராவணன் சீற்றங்கொண்டு ஆயிரம் பாணங்களால் ராமனையும், ஒரு பாணத்தால் மாதலியையுமடித்து, வேறொரு பாணத்தால் இந்திரத்வஜத்தை முறித்துப் பல பாணங்களால் குதிரைகளையும் நகரமுடியாமலடித்தான். ராவணனது பிரபாவத்தைக் கண்டு தேவர்களும் அஞ்சினர். ராவணனது அடியைத் தாங்கமாட்டாது ராமர் 'ஹாஹா' எனக்கதறினர். இவ்விதம் ராவணனை ராகுவினால் ராமனை சந்திரன் கிரஹிக்கப்பட, ஸ்ரீராமன் கோபத்தினால் கண்கள் சிவக்கச் சிம்மநாதம் செய்தார். அவ்வேளையில் சகல பூதங்களும் பயந்தன. ராக்ஷசர்கள் ராவணன் ஜயிக்கவேண்டுமென்றும், தேவர்களும், வானரர்களும் ராமன் ஜயிக்கவேண்டுமென்றும் வேண்டினார்கள். அப்பொழுது ராவணன் பயங்கரமான ஒரு சூலாயுதத்தையெடுத்துக்கொண்டு ராமனை நோக்கி, "ஏ, ராமா, இந்தச் சூலாயுதமானது தம்பியுடன் கூடின உன்னைக் கொல்லப்போகிறது. நீ பலரைக் கொன்றதால், நான் உன்னைக்கொன்று அவர்கள் கண்ணைத் துடைக்கிறேன்" என்றுசொல்லி அதை விட்டுவிட்டான். எட்டு மணிகள் கட்டப்பட்டு அதிவேகமாய் வரும் அந்தச் சூலாயுதத்தை ராமர் பலபாணங்களால் தடுக்க, அந்தச்சூலம் அவ்வளவு

பாணங்களையும் எரித்துவிட்டு வேகமாய் வரக்கண்ட ராமர் சினந்து மாதலியினால் கொண்டுவரப்பட்ட சக்தியாயுதத்தை அந்தச் சூலத்தின்மேல் பிரயோகிக்க, அதுச் சூலத்தைப் பிளந்துவிட்டது. சூலம் முறிந்து கீழே விழுந்தது கண்ட சகலரும் ராமனைக்கொண்டாடினார்கள். பிறகு ராகவன் சிலபாணங்களால் அவன் குதிரைகளையடித்து மற்றும் சில பாணங்களால் அவன் மார்பிலும், மூன்று பாணங்களால் நெற்றியிலும் அடித்தார். இதனால் ராவணன் மிகத் துன்புற்று, கோபத்துடன் ஆயிரம் பாணங்களால் ராமனையடிக்க, அவர் அவ்வளவையும் தடுத்துவிட்டார். ராவணன் பின்னும் பல பாணங்களால் ராமரது உடம்பு முழுவதையும் துளைத்து இரத்தமயமாக்கவே, அவர் மிகவும் கோபங்கொண்டு ராவணனை நோக்கி, "நானில்லாத வேளையில் என் பத்தினியை அபஹரித்தது சூரனுக்கழகா? நீசெய்த செயலுக்கு இதோ பலனை அனுபவிக்கப்போகிறாய். என் முன்னால் சீதையை யெடுத்திருந்தால் நீயும் முன்னமேயே கரனடைந்த கதியை யடைந்திருப்பாய். நீ இப்பொழுதுதான் எனக்குத் தென்பட்டாய். என் பாணங்களால் உன் தலை அறுபட்டு விழுந்து உன்னைக் கழுகுகள் சாப்பிடப்போகின்றன" என்றுகூறிச் சகலவிதமான சிறந்த பாணங்களால் அவனை யடித்தார். அப்பொழுது ராவணன் நடுக்கங்கொண்டு எப்படி வில்லையெடுப்பது, எப்படி பாணங்களை விடுவது என அறியாமல் பிரமித்திருந்தான். அச்சமயம் அவனது சாரதி ரதத்தை வேறிடத்திற்குக் கொண்டுபோய்விட்டான். சற்றுநேரத்திற்குப் பிறகு தன்ஞாபகத்தை யடைந்ததும் ராவணன் சாரதியை நோக்கி, "நீ என்ன காரியம் செய்தாய்! நான் பெற்ற கீர்த்தியை நீ குறைத்துவிட்டாயே! ராமனுக்குப் புறமுதுகுகாட்டி ஓடினவனாகச் செய்துவிட்டாயே. அறிவில்லாதவனே, சீக்கிரம் ரதத்தை ராமனெதிரில் கொண்டுபோய் நிறுத்து" என்று வெகுண்டு கூறினான். அதைச் செவியுற்ற சாரதி, "ராஜனே, நான் தங்களுக்கு யாதொரு கெடுதியும் செய்யவில்லை. ரதகுடும்பி என்னும் சாரதி சமயாசமயங்களை யறிந்து, சகுனங்களைக் கவனித்து, எஜமானனைக் காப்பதில் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். எஜமானன் களைப்படைந்தபொழுது, அப்புறம் கொண்டுபோய் ஆஸ்வாஸப்படுத்தவேண்டியது ஸ்வதர்மம். இதனால் கீர்த்தியழியாது. நான் தங்களுக்கு அனுகூலம் செய்வேனே தவிர பிரதிகூலம் ஒருக்காலும் செய்யப்பட்டவனல்லன். நான் எனது ஸ்வதர்மத்திலிருந்துகொண்டு தங்களுக்கு ஹிதம்செய்தேன். ஆதலால் என்மேல் கோபங்கொள்ள

வேண்டாம். இனிச் செய்யவேண்டியதை உத்திரவு செய்தால், அதன்படி நடக்கிறேன்" என்று சொன்னான். இதைக் கேட்டு ராவணன் அவனை மெச்சி, ரதத்தை ராமனெதிரில் கொண்டுபோய் நிறுத்தச்சொல்ல அவனும் அவ்விதமே செய்தான்.

இது நிற்க, யுத்தத்தால் களைப்படைந்திருந்த ராமரிடம் அகஸ்தியபகவான் வந்து, "உத்தமா, யுத்தத்தில் சத்துருவை யழித்து ஜயத்தை யளிக்கக்கூடியதும், இரகசியமானதும், சோகத்தைப் போக்கக்கூடியதும், ஆயுளை விருத்திசெய்யக்கூடியதுமான ஆதித்தியஹிருதயம் என்ற பெயரையுடைய மகாமந்திரத்தை உமக்கு உபதேசிக்கிறேன். அதை நீர் மும்முறை ஜபித்தால் யுத்தத்தில் ராவணனை வெல்லலாம்" என்றுரைத்துப் பன்னிரண்டு நமஸ்காரங்களுடன் கூடின அம்மந்திரத்தை யுபதேசித்து மறைந்தார். ராமன் அதைப் பெற்றுக்கொண்டு மிகவும் நியமமாயிருந்து கொண்டு அதை மும்முறை ஜபித்தவுடன் சூரியன் பிரத்தியக்ஷமாகி, அவருக்கு அனுக்கிரகம்செய்து மறைந்தார். அப்பொழுது ராவணன் வந்துவிடவே, ராகவன் மாதலியை நோக்கி, "ராவணன் ரதம் செல்வதற்குத் தகுந்தபடி நீரும் ரதத்தைச் செலுத்தும், அவனது ரதத்திற்கு எதிராய் நமது ரதத்தைச் செலுத்தவேண்டும்" என்று சொல்ல, அவனும் அவ்விதமே செய்தான். கோரமான யுத்தம் நடந்துகொண்டிருக்கையில் ராமனுக்கு அனுகூலமாயும் ராவணனுக்குப் பிரதிகூலமாயும் உற்பாதங்கள் ஆகாயத்தில் உண்டானதைக்கண்ட ராமர் சந்தோஷித்தார். ராவணன் பல பாணங்களால் மாதலியை யடிக்க ராமன் கோபங்கொண்டார். அச்சமயம் ராவணன் மாயாசம்பந்தமான அஸ்திரங்களால் வானரர்களையும் ராமனையும் அடிக்க, ராமர் சற்று மந்தஹாசம் செய்து ஆயிரக்கணக்கான பாணங்களால் சகலத்தையும் நாசஞ்செய்தார். பிறகு இருவரும் விருத்தியடைந்து பலகதிகளுடன் யுத்தஞ்செய்தனர். அப்பொழுது ராமன் ஒரு பாணத்தால் ராவணன் தலையை யறுக்க, அதுஉடனே முளைத்தது. இவ்விதம் ராமன் 101 தடவை அவன் தலையைச்சேதித்தும் மறுபடியும் அது முளைத்ததால் இனி யாதுசெய்வதென ராமர் சற்று யோசித்தார். (ராவணன் மார்பில் அமிர்தகலசம் உண்டென்பது வால்மீகி ராமாயணமல்ல). இவ்விதம் நடந்த ராமராவணயுத்தம் ராமராவண யுத்தத்திற்கே உபமானமாயிருந்தது. அப்பொழுது ஸ்ரீராகவன், "நான் எந்த அஸ்திரத்தால் மாரீசனைக்கொன்றேனோ, எந்தபாணங்களால் கரனுடன்

சண்டை செய்து கடைசியில் எந்த பாணத்தால் அவனைக் கொன்றேனோ, எந்த பாணங்களால் விராதனை உபத்திரவித்தேனோ, எந்த பாணங்களால் கபந்தனை வதித்தேனோ (கபந்தன்பேரில் பாணங்களைப் பிரயோகித்த விஷயம் ஒன்றும் கிரந்தத்தில் தெரியவில்லை); எப்பாணங்களால் வாலியுடன் பொருது முடிவில் அவனை எப்பாணங்களால் வதித்தேனோ, எப்பாணங்களால் சமுத்திரத்தை யடித்தேனோ அவைகள் யாவும் இவனை ஒன்றும் செய்யவில்லையே. என்ன காரணம்?' என்று பலவாறு ஆலோசித்துக் கொண்டிருக்கையில் ராவணன் கதை முதலியவற்றைப் பிரயோகிக்க ராமன் அவ்வளவையும் தடுத்தார். இப்படி இடைவிடாமல் இருவரும் யுத்தம்புரிகையில் மாதலி ராவணனுக்கு பிரம்மாஸ்திரத்தால் வதம் என்று ராமருக்கு ஞாபகப்படுத்த, உலகத்தை ஜயிப்பதற்கு இந்திரனுக்காக உண்டாக்கப்பட்ட சிறந்ததான அந்தப் பிரம்மாஸ்திரத்தை வேதவிதிப்படி மந்தரித்து ராமர் விட்டார். அச்சமயம் ராவணனும் வில்லையெடுக்க; அதற்குள் அந்தஅஸ்திரம் அவன் மார்பைப் பிளந்து பிராணனைக் கிரஹித்துக்கொண்டு பூமியைப்பிளந்து பாதாளம் சென்று திரும்பி, ராமன் அம்புறாப்பொதியை யடைந்தது. ராவணன் அடிபட்டு விழுந்ததும் தேவர்கள் களித்து ராமன்மேல் புஷ்பவர்ஷம் வர்ஷித்தார்கள். பிறகு ராமன் இந்திர விமானத்தைத் தேவலோக மனுப்பினார். வானரர்கள் யாவரும் குதூகலத்துடனிருந்தனர். ராமன் தன் தம்பியை யாலிங்கனம் செய்துகொண்டு, தன் சத்தியத்தை ஸ்தாபித்து (சத்தியத்திற்கு விரோதமான தர்மங்கள் தள்ளத்தகுந்தன — சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்) பரம சந்தோஷத்துடனிருந்தார். ராவணனிறந்ததைக் கண்ட விபீஷணன் புலம்பி அற்ப புத்தியால் தான் ராவணனுக்குக் கர்மாவைச் செய்வதாகச் சொல்ல ராமனும் சரியென்றார். இதற்குள் ராவணன் இறந்த செய்தி லங்கையில் பரவ, மண்டோதரி பல ஸ்திரீகளுடன் வந்து புலம்பி, "நாதா, நீங்கள் சகல தேவர்களையும் ஜயித்துவிட்டு இப்பொழுது கேவலம் ஒரு மனுஷ்யனால் அடிபட்டதை கவனித்தால் இது காலத்தின் பலனென்று தெரிகிறது. விஷ்ணுவே இவ்விதம் மனுஷரூபத்தில் வந்து உம்மைக் கொன்றிருக்கிறாரென்பது நிச்சயம். வானரர்கள் யாவரும் தேவர்களென்பதும் உண்மை. சிறந்த பலமுடைய தங்களைக் கணவராகப் பெற்றதால் நான் இதுபரியந்தம் செருக்குற்றிருந்தேன். அவ்வளவையும் இப்பொழுது தெய்வம் சிதைத்துவிட்டது. புண்ணியம் செய்தால் புண்ணிய பலன் கிடைக்கும்.

பாபம் செய்தால் பாபபலன்தான் கிடைக்கும்" என்று கூறி துக்கித்தாள். அப்பொழுது ராமர், "விபீஷணு, சீக்கிரத்தில் இவனுக்குக் கர்மத்தைச் செய்" என்றுரைக்க விபீஷணன் சுய அறிவோடு யோசித்து "பர்தாராபஹரணம் செய்யும் பாபியாயும், அதர்மிஷ்டனையும், குரூரசித்தமுடையவனையும், யாவருக்கும் துன்பத்தை விளைவிப்பவனையும், சத்துருவாயுமுள்ள இவன் எனக்குச் சகோதரனாக ஜனித்திருந்தாலும், நான் இவனுக்குக் கர்மம் செய்ய மாட்டேன்" என்று தெரிவித்தான். அதற்கு ராமர், "விபீஷணு, மரணபரியந்தம்தான் விரோதபாவம். அதற்குப் பிறகு விரோதத்தைப் பாராட்டலாகாது. தவிரவும் இவன் எப்படிப்பட்ட பாபியானாலும் உன்னால் செய்யப்படும் கர்மத்தின் பலனையடையத்தகுந்தவன். அற்புத பராக்கிரமமுள்ள இவன் உனக்கு எப்படியோ, அப்படியே எனக்கும். என் வார்த்தையைத் தட்டாமல் நீ அவனுக்குக் கர்மத்தைச் செய். இதனால் உனக்குக்கீர்த்தியுண்டாகும்" என்று ஹிதமாகச் சொல்ல, விபீஷணன் அதையங்கீகரித்து, யுத்தகளத்திலிறந்தவனுக்குச் சகல கர்மங்களையும் ஒரே நாளில் செய்யவேண்டுமென்ற முறைப்படி எல்லாக் கர்மங்களையும் செய்துமுடித்து ராமரை யடைந்தான். அப்பொழுது ராகவன் லக்ஷ்மணனை நோக்கி, "லக்ஷ்மணு, எனக்குப் பக்தனையும் உபகாரியாயுமுள்ள இவனுக்குப் பட்டாபிஷேகம் செய்துபார்க்க விரும்புகிறேன்" என்று கூறியதும், லக்ஷ்மணன் லங்காபட்டணத்திற்குச் சென்று வானரர்களைக்கொண்டு உத்தம தீர்த்தங்களைக் கொண்டுவரச்செய்து, பரம சந்தோஷத்துடன் விபீஷணனை இரத்தினமயமான பீடத்தில் உட்காரவைத்து, ராமர் விருப்பப்படி அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்தான். பரிசுத்தமுடையவனான விபீஷணனுக்குப் பட்டாபிஷேகம் செய்ததைக்கண்டு சகலரும் சந்தோஷித்தனர். லக்ஷ்மணனும் ராமரிடம் வந்துசேர்ந்தான். அதன்பின் விபீஷணன் சகல ராஜமரியாதைகளுடன் ராமரிடம் வர, ராமர் அவனைத் திருப்திசெய்வதற்காக அவ்வளவையும் பெற்றுக் கொண்டார். பிறகு அவர் ஹனுமானை நோக்கி, "நீ விபீஷணன் அனுமதிபெற்று ராவணன் கிருஹத்தை (அசோகவனத்தை) யடைந்து ('ராவண கிருஹத்திலிருக்கும் சீதையை நானிதோ காண்கிறேன்' என்பது சம்பாதி சொன்ன வாக்கியம்) சீதையிடம் நான் ராவணனை வென்ற செய்தியைத் தெரிவிக்கலாம்" என்று கூற ஹனுமானும் அவ்விதமே செய்தான். ராமரது வெற்றியைக் கேட்ட சீதை சந்தோஷித்து, சந்தோஷ மிகுதியால் பேச

முடியாமல் சற்றுநேரமிருந்து பின் ஹனுமானை நோக்கி, "உத்தமா, இந்த நற்செய்தியைத் தெரிவித்த உனக்கு நான் என்ன கொடுக்கப்போகிறேன்! எதைக் கொடுத்தாலும் தகும்" என்று சொல்லி அவனைக் கொண்டாட, ஹனுமான், "இப்படிப்பட்ட வாக்கியம் உம்மால்தான் சொல்லமுடியும்" என்றுரைத்தான். அப்பொழுது சீதை, "சிறந்த குணங்களை யுடையவனும், வாயுபுத்திரனுமான நீ ஸ்லாகிக்கத்தக்கவன்" என்று சொல்ல ஹனுமான் அஞ்சலி செய்துகொண்டு சீதையைப் பார்த்து, "அம்மா, உம்மை ஏற்கனவே ஹிம்சித்த ராக்ஷசிகளை யெல்லாம் நீர் அனுமதிகொடுத்தால் இப்பொழுதே கொன்றுவிடுகிறேன்" என்று சொன்னான். அது கேட்ட சீதை, "உத்தமா, இவர்கள் எஜமான் சொற்படித்தான் முன்பு என்னை ஹிம்சித்தார்களே தவிர வேறல்ல. இப்பொழுது இவர்கள் என்னைத் துன்புறுத்துகிறார்களா? ஆதலால் இவர்களைக் கொல்லக்கூடாது" என்றுரைக்க ஹனுமான் அதை நியாயமென்றங்கீகரித்து "தாங்கள் சீக்கிரம் தங்கள் நாதனைத்தரிசிப்பீர்கள்" என்று கூறி, அவளிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு ராமரிடம் வந்து, "தங்கள் பத்தினியான சீதை தங்களைத் தரிசிக்க விரும்புகிறாள்" என்று சொன்னான். ராமரும் அதிப்பிரேமையால் பெருமூச்சுவிட்டுக்கொண்டு சற்றுநேரம் பூமியைப் பார்த்துக்கொண்டிருந்து, பின் பக்கத்திலிருந்த விபீஷணனை நோக்கி, "சீக்கிரம் சீதைக்கு ஸ்நானாதிகளைச் செய்வித்து சர்வாலங்காரத்துடன் அழைத்துவா" என்றுசொல்ல, விபீஷணன் உடனே தன்பெண்டுகளுடன் சீதையிருப்பிடத்தை யடைந்து, "அம்மா, ராமர் உமக்கு ஸ்நானம் செய்வித்து அலங்காரத்துடன் அழைத்துவரச் சொன்னார்" என்றான். அப்பொழுது சீதை அப்படியே பர்த்தாவிடம் வருவதாகச்சொல்ல, விபீஷணன், "அம்மா, நாங்கள் ராகவன் ஆணைப்படித்தான் நடக்கவேண்டும். ஆதலால் தாங்கள் இதற்குத்தடை சொல்லவேண்டாம்" என்று வேண்டினான். சீதையும் உடன்பட்டாள். உத்தம ஸ்திரீகள் அவளுக்கு ஸ்நானம்செய்வித்து அலங்காரம் செய்தனர். அற்புதமானதொரு பல்லக்கும் வரவே, சீதை அதில் ஆரோகணித்தாள். சில வீரர்கள் பல்லக்கைச் சுமந்துவர, சீதை ராமசன்னிதானத்தை நாடிவருகையில், வானரர்களும், ராக்ஷசர்களும் பல்லக்கை நெருங்கிவர, விபீஷணன் அவர்களை விலக்கிவிட்டான். யாவரும் அப்பொழுது கூச்சலிடக்கேட்ட ராகவன் விபீஷணனை நோக்கி, "விபீஷணா, சீதையைப் பல்லக்கிலிருந்து இறக்கிவிடும். கலியாணம் முதலிய சில

காலங்களில் எல்லோரும் பெண்களைப் பார்க்கலாம். ஸீதை நடந்து வரட்டும். யாவரும் அவளைத் தரிசிக்கட்டும்" என்று சொல்ல, விபீஷணன் அவ்விதமேசெய்தான். யாவரும் தரிசித்தனர். ஸீதை நாணத்துடன் ராமரையடைந்து, "ஆரியபுத்திரா" என்று அவரை யழைத்துத் துக்கிக்க, ராமன் அவளைநோக்கி, "ஸீதே, நான் உன்னையடைவதற்காக இந்த யுத்தம் செய்யவில்லை. உத்தம குலத்தில் பிறந்தயாரும் அன்னியர் கிருஹத்திலிருந்தவளையடைய மாட்டான். நான் சிறந்த கீர்த்தியடைந்தேன். உனக்கு எங்கு செல்ல இஷ்டமோ அங்கு செல்லலாம்" என்று கடுமையாகச் சொன்னார். இவ்வார்த்தைகளைச் செவியுற்ற ஸீதை மிகவும் துக்கத்துடன் அழுதுகொண்டு, "தாங்கள் இப்படிச் சொல்லத்தகாத வார்த்தைகளைச் சொல்லலாமா? இது தர்மமல்லவே. என்னது குணங்களும், தன்மைகளும் சகலமும் உமக்குத் தெரிந்திருந்தும் தாங்கள் யாவற்றையும் தள்ளிவிட்டீர்களே" என்று சொல்லி லக்ஷ்மணனைப் பார்த்து, "அண்ணு என்மேல் இல்லாத அபவாதத்தைச் சொல்வதாலும், என்னைத் தியாகம்செய்துவிட்டதாலும் நான் இச்சரீரத்தை விடப்போகிறேன். ஆதலால் அக்னிமூட்டலாம்" என்று சொன்னாள். அதைக்கேட்ட லக்ஷ்மணன் துக்கத்துடன் ராகவனைப் பார்க்க, அவர் ஜைகை செய்யவே, லக்ஷ்மணன் அக்னிமூட்டினான். உடனே ஸீதை ராமரைப் பிரதக்ஷிணம்செய்து, பெரியோர்களை மனதில் நமஸ்கரித்து அஞ்சலிசெய்துகொண்டு அக்னியின் ஸமீபத்தில் சென்று, "என் ஹிருதயம் ராமரைவிட்டு நழுவாமலிருப்பது உண்மையானால் மனோவாக்குக் காயங்களால் நான் ராமரையே ஸ்மரித்திருப்பது உண்மையானல், நான் உத்தமி என்பது உண்மையானல், லோகசாக்ஷியான அக்னி பகவான் என்னை ரக்ஷிக்கட்டும்" என்றுசொல்லி அக்னிப்பிரவேசம் செய்தாள். அப்பொழுது சகல தேவர்களும் பிரத்தியக்ஷமாகி ராமரை ஸ்தோத்திரம் செய்துவிட்டு, அவரை நோக்கி, "நீர் உம்மை யறியவில்லையே! நீர் பரமபுருஷனல்லவா! அப்படியிருக்க, பராகிருதனைப்போல் ஸீதையைத் தியாகம்செய்யலாமா?" என்று கேட்க, ராகவன் பிரம்மதேவனை நோக்கி, "நான் என்னைத் தசரதபுத்திரனை ராமனாகவே எண்ணிக்கொண்டிருக்கிறேன். உமக்குத் தோன்றியதை நீங்களும் சொல்லுங்கள்" என்றுரைத்தார். பிரம்மதேவர் அப்பொழுது ராமரைப் பரமாத்மாவான நாராயணனென்றும், ஸீதையை லக்ஷ்மீதேவியென்றும் தெரிவித்துப் பலவிதமாய் ஸ்தோத்திரம் செய்து, இந்த ஸ்தோத்திரத்தைச்

செய்பவர்கள் நல்ல மங்களத்தை யடைவார்கள்" என்று அனுக்கிரஹித்துப் பின் யாவரும் மறைந்தனர்.

அதற்குப் பிறகு உத்தமரான அக்னிபகவான் சீதையுடன் வெளியேவந்து ராமரைப் பார்த்து, "உத்தமா, இவள் உத்தமி, தோஷமில்லாதவள். திரிகரணசுத்தியாய் உம்மையே ஸ்மரித்தவள். ஆதலால் நீர் இவளை யேற்றுக்கொள்ளும்" என்று சீதையை யவரிடம் கொடுக்க, ராமரும் ஏற்றுக்கொண்டார். இவ்விதம் ராமர் சீதையுடன் விளங்கும்போது பரமசிவன் அவர்முன் தோன்றி யவரைக் கொண்டாடி, "புருஷோத்தமா, சீக்கிரம் அயோத்திக்குச் சென்று பரதனை ஆஸ்வாஸப்படுத்தி, மாதாக்களை சந்தோஷிப்பித்து, ராஜ்யத்தைப் பெற்று சகல ஜனங்களையும் திருப்திசெய்யும். சிறப்பான யாகங்களைச்செய்து தேவலோகம் வந்துசேரும்" என்றுரைத்துப்பின் விமானத்தைக்காட்டி "இதோ இங்கிருப்பவர் உமது பிதா. உம்மால்கரையேற்றப்பட்டு இந்திரலோகத்தை யடைந்து தேவரூபத்திலிருக்கிறார். அவரை நமஸ்கரியுங்கள்" என்று கூறியதும், அவர் லக்ஷ்மணனுடனும் சீதையுடனும் அவரை நமஸ்கரித்தார். தசரதர் எல்லோரையும் ஆசீர்வதித்து ராகவனைக் கொண்டாட, ராகவன் பிதாவை நோக்கி, "தாங்கள் கைகேயியைத் தங்களுக்குப் பத்தினியாகவும், யாவற்றையும் துறந்து தங்களுக்குக் கர்மம்செய்த உத்தமனான பரதனைத் தங்களுக்குப் பிள்ளையாகவும் அங்கீகரிக்கும் வரத்தைக் கொடுக்க வேண்டும்" எனப் பிரார்த்தித்தான். அவரும் அங்கீகரிக்க ராமர் சந்தோஷித்தார். பிறகு தசரதர் சீதையைப் பார்த்து, "ராமன் உன்னைத் திரஸ்கரித்ததற்காகக் கவலையுறாதே. உலகம் பொல்லாதது" என்றுரைத்து அவளைச் சமாதானப்படுத்தி, லக்ஷ்மணனை நோக்கி, "இந்த ராமன் வேதத்தின் ஹிருதயம். அது அவ்யக்தமாயுள்ளது. பக்த சம்ரக்ஷணத்திற்காக பிர்ம்மா சிருஷ்டியில் கட்டுப்பட்டு வந்துளது. அவருக்குக் கைங்கரியம் செய்துகொண்டிரு" என்று கூறிவிட்டுப் பரமசிவனுடன் உத்தமலோகத்தை யடைந்தார். அதன்பின் தேவேந்திரன் ராமனிடம் வந்து, "நீர் செய்த காரியத்தில் எனக்குச் சந்தோஷம். உமக்கு வேண்டிய வரத்தைக் கேட்கலாம்." என்று சொல்ல, ராமர் சந்தோஷித்து, "எனக்கு வரங்கொடுக்க விரும்பினால் என்பொருட்டு மனைவி மக்களையும் மற்றவைகளையும் விட்டு யுத்தம்செய்து உயிர்துறந்த சகல வானரர்களையும் உண்டுபண்ண வேண்டுகிறேன்" என்று கேட்க,

சஞ்சீவி பர்வதம் வந்துபோன பிறகு இறந்த சகல வானரர்களேயும் உண்டுபண்ணி இந்திரன் சென்றார். பிறகு விபீஷணன் மங்கள ஸ்நானம் செய்யும்படி ராமரைப் பிரார்த்திக்க, ராகவன் அவனை நோக்கி, "விபீஷணு, நீ சகல வானரசேனேகளைத் திருப்திசெய்வி. கைகேயியின் பிள்ளை பரதனில்லாமல் நான் மங்களஸ்நானம் செய்யமாட்டேன்" என்று சொல்லிவிட்டு, 'நான் ஊருக்குச் செல்ல வேண்டும். வழியோ மிகவும் கஷ்டமானது. சித்திரகூடத்தில் பரதன் என்னைச் சரணுகதிசெய்தபோது 14 வருஷம் கழித்து மறுநாள் வந்து அவனுக்குத் தரிசனம் கொடுப்பதாய்ச் சொன்ன வாக்கைப் பூர்த்திசெய்ய முடியாதுபோலிருக்கிறதே! என்ன செய்வேன்?' என்று கவலேப்பட்டார். அப்பொழுது விபீஷணன், "தாங்கள் கவலேப்படவேண்டாம். அதிவேகமாய்ச் செல்லக் கூடிய புஷ்பகவிமானமிருக்கிறது. அது பிரம்மாவின் மனதால் குபேரனுக்காக சிருஷ்டிக்கப்பட்டது. ராவணன் குபேரனே வென்று அதை அபகரித்துவந்தான். நான் அதைக்கொண்டுவருகிறேன்" எனக்கூறி அதைக்கொணர்ந்தான். சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் ராமர் அதிலேறிக்கொண்டு, சுக்ரீவனேயும் விபீஷணனேயும் நோக்கி, "நீங்கள் எனக்காக எவ்வளவோ சிறந்த காரியங்களைச் செய்திருக்கிறீர்கள். இனிமேல் ராஜ்யத்தைச் சிறந்த தர்மத்துடன் பரிபாலனம் செய்யுங்கள். நான் அயோத்திக்குச் சென்றுவருகிறேன்" என்று கூற அவ்விருவரும் தாங்கள் அவரது பட்டாபிஷேகத்தைப் பார்க்க விரும்புவதாக ஆவலாகத் தெரிவித்தனர். ராமர் அதை யங்கீகரிக்க சுக்ரீவன் சகல வானரர்களுடனும், விபீஷணன் ராக்ஷச வீரர்களுடனும் விமானத்திலேறினர்கள். அவ்வளவு பேருக்கும் அந்த விமானம் இடம் கொடுத்தது. விமானத்தைப் புறப்படும்படி ராமர் ஆக்ஞாபிக்க, அது அப்பொழுதே மிக உயரமாய்க் கிளம்பி லங்கையிலிருந்து பிரதட்சணமாய்ப் புறப்பட்டது. அப்பொழுது ராமர் பக்கத்திலிருந்த சீதையைச் சற்று அணேத்துக்கொண்டு, "சீதே, இவ்விடத்தில் நான் ராவணனேக் கொன்றேன். இந்த இடத்தில் கும்பகர்ணனே வதித்தேன். இந்த இடத்தில் பிரஹஸ்தன் கொல்லப்பட்டான். இவ்விடத்தில் தூம்ராக்ஷன் ஹனுமானுல் உயிர் துறந்தான்" என விமானம் பிரதட்சணமாய் வருகையில் அவ்வப்போது காணப்பட்ட பலவிடங்களில் நடந்த விஷயத்தைச் சீதைக்குச் சொல்லிக்கொண்டிருந்தார். நளனுல் கட்டப்பட்ட அணையையும், ஹனுமானது சிரமபரிகாரத்திற்காக வந்த மைநாக

பர்வதத்தையும், பரமசிவன் தரிசனம் கொடுத்துத் தமக்குத் தனது பிதாவைக் காட்டிய இடத்தையும் காட்டினர். (இந்த சுலோகம் லங்கையில் சொல்லப்பட்டது. வால்மீகத்தின் பிரகாரம் ராமரும் லிங்கப்பிரதிஷ்டை செய்யவில்லை. விபீஷணனும் ஸ்ரீராமர் கொடுத்த குலதெய்வத்தை ஸ்ரீரங்கத்தில் வைக்கவில்லை. இந்த விஷயத்தைச் சித்தாந்த புத்தகத்தில் அறியலாம்). பிறகு விமானம் அக்கரைக்குவர, விபீஷணன் தன்னைச் சரணுகதி செய்த இடத்தையும், கிஷ்கிந்தையையும் காட்டினர். அவ்விடத்தில் சீதை, "வானர ஸ்திரீகளையும் கூட்டிச்செல்லலாமே" என்று கூற ராகவன் சுக்ரீவனைப் பார்த்தார். உடனே சுக்ரீவன் ஆக்ஞைப்படி சகல வானரஸ்திரீகளும் விமானத்திலேறிக்கொண்டார்கள். விமானம் புறப்பட்டது. ராமர் விசேஷமான சகல இடங்களையும் சீதைக்குக் காட்டிக்கொண்டுவந்து, கடைசியாகத் தெரிந்த அயோத்தியையும் காட்டிவிட்டுப் பரத்துவாஜர் ஆசிரமத்தையடைந்தார். பரத்துவாஜர் அவரைக் கொண்டாடி, "இன்று இங்கு தங்கி நாளைபோகலாம்" என்று சொன்னர். ராமர் அதை அங்கீகரித்து ஹனுமானைக்கூப்பிட்டு, "நீர் சீக்கிரம் பரதனிடம் சென்று நாம்வந்ததைத் தெரிவித்து அவன் தன்மையையறிந்து வாரும். பரதனுக்கு ராஜ்யத்தில் விருப்பமிருந்தால் வந்துவிடும். அவனுக்கு என்கதை பூராவும் சொல்லும்" என்றுரைக்க, ஹனுமானும் மனுஷ்யரூபத்தில் சென்று, வழியில் கங்காநதிக்கரையில் ராமர் வரவிற்காகக் காத்துக்கொண்டிருந்த குகனிடம் ராமரது விருத்தாந்தத்தைச் சொல்லிவிட்டு அயோத்தியை நோக்கிச் சென்று நந்திக்கிராமத்திலிருந்த பரதனைக் கண்டான். பரதன் சகல வைபவங்களையும் துறந்து, பாதுகைகளை முன்னிட்டுக்கொண்டு ராஜ்யபாரம்வகித்து, அண்ணுவான ராமரைப் பிரிந்த துக்கத்தால் உடல்மெலிந்து அழுக்குப்படிந்த தேகத்துடன் இருந்துகொண்டு, அன்றுடன் 14 வருஷம் பூர்த்தியாகிவிட்டபடியால் அதுவரையில் ராமர் வராததால் மிகுந்த கவலையுடன் தெற்குநோக்கி அவரது வரவிற்காகக் காத்துக்கொண்டிருந்தான். அப்பொழுது ஹனுமான் அவனிடம் சென்று, "நீர் யார் வரவை எதிர்பார்க்கிறீரோ அந்த ராமர் வந்துவிட்டார். நாளை காலை தரிசனம் கொடுப்பார்" என்றுரைக்க, பரதன் அதிக சந்தோஷத்தால் மூர்ச்சித்துப் பின் சற்றுநேரத்தில் எழுந்து ஹனுமானைக் கட்டிக்கொண்டு, "இந்த சந்தோஷச் செய்தியைத் தெரிவித்த நீர் தேவனு, மனுஷ்யனு? இச்செய்தியைக் கொண்டு

வந்த உமக்கு அநேக கிராமங்களையும், பட்டுப்பீதாம்பரங்களையும், பத்தினிகளாக 16 பெண்களையும் கொடுக்கிறேன்" என்றான். பிறகு ராமரது சகல கதையையும் பரதன் கேட்க, ஹனுமான் எல்லாவிஷயத்தையும் சொன்னான். உடனே பரதன், "எனக்காக பரத்துவாஜர் ஆசிரமம் வரையில் வந்திருக்கும் சத்தியசந்தரும் சகோதரருமான ராமரை நானிப்பொழுதே எதிர்கொண்டழைப்பேன்" என்று சொல்லிக்கொண்டு, பாதுகைகளைத் தலையில் வைத்துக்கொண்டு, சத்துருக்னன் குடைபிடித்துவர பரத்துவாஜர் ஆசிரமத்தை நோக்கிப் புறப்பட்டுக் கொஞ்சதூரம் வந்தபொழுது, ஹனுமான் சற்று முன்னடிசெல்ல, பரதன் ஹனுமானைக் கூப்பிட்டு, "நீர் அண்ணா வந்தாரென்று பொய் சொல்லிவிட்டீரா என்ன? இது தர்மமா! வானரர்களைக் காணோமே" என்று வருத்தத்துடன் கேட்டான். அப்பொழுது ஹனுமான், "நீர் கவலையடையவேண்டாம். அண்ணா வந்தது உண்மையே. இதோ பாரும் பரத்துவாஜர் அனுக்கிரகத்தால் விருட்சங்களெல்லாம் நல்ல பழங்களுடனிருக்கின்றன" என்று காட்டினான்.

இது இப்படியிருக்க பரத்துவாஜர் ராமருடன் வந்த சகலரையும் உபசரித்துச் சிறப்பாகப் போஜனம் செய்வித்தார். ஆனால் ராமலக்ஷ்மணர்களும் சீதையும் காய்கிழங்குகளை மட்டும் உண்டனர். பிறகு ராமர் ரிஷியை நோக்கி, "மகாரிஷியே, பரதன் அயோத்தியில் தன் மாதாவைப் பூஜைசெய்து வருகிறானா?" என்று வினவ, ரிஷியும், "ராமா, பரதன் தவறாமல் மாதுர்பூஜை செய்துகொண்டு உமது வரவை எதிர்பார்ப்பதால், நீர் ஊருக்குச் செல்லலாம்" என்று விடைகொடுக்க, ராமர் உடனே புறப்பட்டார். அப்பொழுது, முனிவர், "உமக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக் கொள்ளலாம்" என்று சொல்ல ராமர், "மகாரிஷியே, இங்கிருந்து அயோத்திவரையில் எங்கும் நல்லபழந்தரும் மரங்களும், தடாகங்களும் உண்டாக அனுக்கிரகம் செய்யவேண்டுகிறேன்" என்று கேட்க, ரிஷியும் அனுக்கிரகம்செய்தார். பிறகு ராமர் சகலருடன் விமானத்திலேறிக்கொண்டு அயோத்தியை நோக்கிப் புறப்பட்டு வர, ஹனுமான் விமானத்தைப் பரதனுக்குக் காட்டினான். பரதன் சகலருடன் விமானத்தில் வந்த ஸ்ரீராமனைக்கண்டு அதிப்பிரேமையுடனிருக்க, ராமர் சமீபத்தில்வந்து விமானத்திலிருந்து இறங்கிப் பரதனைக் கட்டிக்கொண்டு, அவனை அன்பாயழைத்து மடியில் வைத்துக்கொண்டு யோகக்ஷேமம் விசாரித்தார். பிறகு பரதன்

சீதையை நமஸ்கரித்து, லக்ஷ்மணனை ஆலிங்கனம்செய்துகொண்டு, மற்றவர்களைச் சந்தோஷப்படுத்திச் சுக்ரீவனைக் கட்டியணைத்துக் கொண்டு; "நீர் எங்களுக்கு ஐந்தாவது சகோதரன்" என்று சொல்லி விபீஷணனையும் சந்தோஷப்படுத்தினான். அப்பொழுது சத்ருக்னனும் ராமர் முதலியவர்களை நமஸ்கரித்து நின்றான். பிறகு ராகவன் மாதுர்வர்க்கங்களை நமஸ்கரித்தார். அதற்குள் பட்டணத்து ஜனங்களும் வந்து அஞ்சலிசெய்ய, ராமரும் அஞ்சலிசெய்தார். அதன்பின் பரதன் பாதுகைகளை ராமரிடம் அர்ப்பணம்செய்து, "இதுகாலபரியந்தம் இந்த இராஜ்யத்தை உமது அனுக்கிரகத்தால் காத்துவந்தேன். தாங்கள் இப்பொழுது ராஜ்யத்தை யங்கீகரிக்க வேண்டுகிறேன்" என்று பிரார்த்திக்க, ராமர் அவனை யாலிங்கனம் செய்துகொண்டு சகலருடன் விமானத்திலேறி பரதனாசிரமத்தை யடைந்து, விமானத்தைக் குபேரனிடம் அனுப்பினார். பிறகு பரதன் அண்ணாவான ராகவனை நமஸ்கரித்து, "நான் இப்பொழுதும் அம்மாவைப் பூஜித்தேன். இனிமேல் இந்த ராஜ்யபாரத்தை என்னால் வகிக்க இயலாது. ஆகலால் தாங்கள் அதை யேற்றுக்கொண்டு கிருபைபுரியவேண்டும்" என்று பிரார்த்திக்க, ராமரும் அங்கீகாரம் செய்துகொண்டார். அதன் பின்னர் ராமாதிகள் ஜடாசோதனம் செய்துகொண்டு மங்கள ஸ்நானம் செய்ய, சீதைமுதலிய சகல ஸ்திரீகளும் மங்களஸ்நானம் செய்து சர்வாலங்காரத்துடன் விளங்கினார்கள். அப்பொழுது சத்ருக்னன் ஆக்ஞையால் சுமந்திரன் கொண்டுவந்த ரதத்தில் ராமரும் சீதையும் ஆரோகணிக்க, லக்ஷ்மணன் ஒரு கையால் சாமரத்தையும் மற்றொரு கையால் ஆலவட்டத்தையும் போட, சத்ருக்னன் குடைபிடிக்க, விபீஷணன் மற்றொருபுறம் சாமரம் போட, பரதன் கடிவாளத்தைப்பிடித்து 'சாரத்தியம் செய்ய, சுக்ரீவன் ராமரது பட்டத்துயானையில்வர, ஹனுமான் முதலிய அநேக வீரர்கள் அநேகம் யானைகளின்மேலும், மற்ற வாகனங்களின் மேலும் வர, வானரஸ்திரீகள் பல்லக்குகளில் வர, இப்படி சகலருடனும் ராமர் பட்டணத்தில் பிரவேசிக்க, சகல ஜனங்களும் சகல வாத்தியங்களுடனும், சகல வைபவங்களுடனும் அதிகசந்தோஷமாய் அவரை எதிர்கொண்டழைத்துக்கொண்டு அவரைக் கொண்டாடினர். அப்பொழுது உத்தமஸ்திரீகள் ராமரைத் துதித்து புஷ்பமாரி பொழிந்தனர். ராமர் சகலருக்கும் எல்லா வானரர்களின் பிரபாவங்களைச் சொல்ல, யாவரும் களித்தனர். இவ்விதம் ராமர் சகல வைபவத்துடன் பிதாவின் அரண்மனையை

யடைந்து கோசலை, சுமித்திரை, கைகேயி முதலிய சகல மாதுர் வர்க்கங்களை நமஸ்கரித்தார். ராமர் பரதனிடம் சுக்ரீவனுக்குத் தன் அரண்மனையைக் கொடுக்கச்சொல்லி, மற்றவர்களுக்கும் அவரவர்களுக்குத்தக்கபடி தங்கவசதிசெய்துகொடுத்து மரியாதை செய்யச்சொல்ல, பரதனும் அவ்விதமே செய்தான்.

பிறகு சத்ருக்னன் சுக்ரீவனிடம், "தீர்த்தங்கள் கொண்டு வரச்சொல்லும்" என்றுரைக்க, சுக்ரீவனும் ஹனுமான், ரிஷபன், ஜாம்பவான் முதலியவர்களை நான்கு சமுத்திரங்களிலிருந்து தீர்த்தம்கொண்டுவரும்படி ஆக்ஞாபித்தான். உடனே கிழக்குச் சமுத்திரத்திலிருந்து ஜாம்பவானும், தெற்குச் சமுத்திரத்திலிருந்து ரிஷபனும், மேற்குச் சமுத்திரத்திலிருந்து வேகதரிசியும், வடக்குச் சமுத்திரத்திலிருந்து ஹனுமானும் தீர்த்தம் கொண்டுவந்தார்கள். வானரர்கள் 500 புண்ணிய நதிகளிலிருந்து தீர்த்தம் கொண்டுவந்தனர், இவ்விதம் பட்டாபிஷேகத்திற்காகக் கொண்டு வரப்பட்ட சகல தீர்த்தங்களையும் சத்ருக்னன் வசிஷ்டரிடம் ஒப்புவித்தான். பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய சகல ஏற்பாடுகளையும் செய்து வசிஷ்டாசாரியார் ஒரு சுபதினத்தில் சீதையுடன் கூடின ராமரை இரத்தினமயமான பீடத்தில் உட்காரவைத்தார். பிறகு, அஷ்டவஸுக்கள் தேவசபையில் ஸசிதேவியுடன் கூடிய இந்திரனை இரத்தினமயமான பீடத்தில் உட்காருவித்து அபிஷேகம்செய்தால் எப்படியோ அப்படியே, சர்வதேவதா வாத்தியங்கள் கோஷிக்க, தேவர்கள் புஷ்பமாரி பொழிய, அப்ஸரஸ்திரீகள் நர்த்தனம்செய்ய, வசிஷ்டர், வாமதேவர், ஜாபாலி, காசிபர், காத்யாயனர், ஸுயஞ்சயர், கௌதமர், விஜயர் முதலிய எட்டு மகரிஷிகள் சுகந்தத்துடன் கூடின உத்தம தீர்த்தங்களைக்கொண்டு **சீதாராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்தார்கள்.** பிறகு பிரம்மாவால் நிர்மாணம் செய்யப்பட்டு இரத்தினங்களால் இழைக்கப்பட்டிருக்கும் கிரீடத்தை வசிஷ்டர் எடுத்து, 'ஜயாவிஜயீபவா' என்றனுக்கிரகம் செய்து, கிரீடாதாரணம் செய்தார். இவ்விதம் ராகவன் பட்டாபிராமனாக விளங்குகையில் சத்ருக்னன் குடைபிடிக்க, சுக்ரீவன் ஒரு வாலவ்யஜனத்தைத் தரிக்க, விபீஷணன் மற்றொரு வாலவ்யஜனத்தைத் தரித்திருந்தான். அப்பொழுது வாயுபகவான் இந்திரனால் அனுப்பப்பட்ட முக்தாஹாரத்தை யளித்தார். தேவர்கள் சந்தோஷத்துடனிருந்தனர். பூமியில் முப்போகம் விளைந்து உலகம் சுபிக்ஷமாயிருந்தது. விருக்ஷங்கள் நல்ல பழங்களைக் கொடுத்து

வ்ந்தன. சகலரும் சந்தோஷமாயிருந்தனர். பட்டாபிஷேக காலத்தில் ராமர் பெரியோர்களுக்கு ஏராளமான தானங்களைச் செய்தார். சுக்ரீவனுக்கு ஒரு சிறந்த மாலையையும், அங்கதனுக்குத் தோள்வளைகளையும் கொடுத்து, சீதையிடம் ஒரு மாலையைக் கொடுக்க, அவள் அதை ஹனுமானுக்குக் கொடுத்துத் தன் கழுத்திலிருந்து ஒரு மாலையைக் கழற்றிக்கொண்டு ராகவனைப் பார்க்க, அவர், "சீதே, புத்தி, சாமர்த்தியம், யோக்கியதை, பௌரஷம் முதலியவற்றில் யார் உனக்குச் சிறந்தவனாகத் தோன்றுகிறானோ அவனுக்கு இதைக்கொடு" என்றுரைத்தார். உடனே சீதை அதையும் ஹனுமானுக்குக் கொடுத்தாள். ஹனுமான் அந்த இரண்டு மாலைகளை யணிந்துகொண்டு சிறப்புடன் விளங்கினார். பிறகு ராகவன் மைந்தன், த்விவிதன் முதலிய சகல வானரர்களுக்கும், விபீஷணன் முதலிய சகல ராக்ஷசர்களுக்கும் தகுந்தபடி மரியாதை செய்தார். பிறகு யாவரும் ராகவனிடம் உத்தரவுபெற்றுக்கொண்டு சந்தோஷமாய்த் தங்கள் தங்கள் ஊருக்குச் சென்றார்கள். விபீஷணன் குலதனத்தை, அதாவது தனது குலதனம் தபசாதலால், தபசால் ராமனைப் பரமாத்மாவெனவறிந்து அவரிடம் சரணாகதிக்கு வந்ததால், தபசால் அறியப்பட்டவரான அவரால் அவருடைய நாமதேயமான 'ஸ்ரீராம' என்கிற தாரகமந்திரோபதேசம் செய்யப்பட்டு, அதையடைந்து லங்கைக்குச் சென்றான். (இதைச் சித்தாந்த புத்தகத்தில் பார்க்க). பிறகு பகவான் பரதனுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்தார். இப்படி ராமர் பதினோராயிர வருஷம் ராஜ்யபரிபாலனம் செய்தார். நூறு அஸ்வமேத யாகங்களையும், மற்ற யாகங்களையும் செய்து விளங்கினார். ஜகத் முழுமையும் ராமமயமாகவே இருந்தது. சகல ஜனங்களும் பரம சந்தோஷத்துடனிருந்தனர். அந்தந்த ஜாதிவர்க்கங்கள் தங்கள் தங்கள் தர்மத்திலிருந்துவந்தன. இந்தக் கிரந்தமானது சகல பாபத்தையும் போக்கிப் புண்ணியத்தை யளிக்கக் கூடியது. புத்திரனை யபேக்ஷிப்பவர்க்குப் புத்திரனையும், சம்பத்தை அபேக்ஷிப்பவருக்குச் சம்பத்தையும் அனுக்கிரகம் செய்கிறது. இகத்தில் சௌக்கியத்தையும், பரத்தில் ஸாயுஜ்யப் பதவியையும் கொடுக்கிறது. இதை க்ஷத்திரியர்கள் பிரம்மரிஷ்டர்களிடம் கேட்கவேண்டும். இது குடும்பத்தை விருத்திசெய்து, பூர்ண ஆயுளையும், சிறந்த கீர்த்தியையும் கொடுக்கிறது. இதை வாசிப்பதால் பகவான் பிரீதியடைகிறார். இந்த ராமசரித்திரம் சகலருக்கும் ஸர்வாபீஷ்டத்தை அனுக்கிரகம் செய்கிறது என்றிப்படி குசலவர்கள் ராமசன்னிதானத்தில் கானம்செய்தார்கள்.

உ

ஸ்ரீராமஜெயம்.

# உத்தர காண்டம்.

---

இவ்விதம் ஸ்ரீராகவன் பட்டாபிராமனாக இருக்கும்போது சகல ரிஷிகளும் அவரைத் தரிசித்து, "நீர் ராவணனைக்கொன்றது வெகு விசேஷமானது. மாயாவியான இந்திரஜித்தை லக்ஷ்மணன் கொன்றது அதைவிட விசேஷமானது" என்று சொல்லி அவர்களைக் கொண்டாடினார்கள். அப்பொழுது ஸ்ரீராமர் "அது என்ன விசேஷம்?" என்று வினவ, அகஸ்தியர், "ராகவா, கிருதயுகத்தில் பிரம்மதேவருடைய புத்திரரான புலஸ்தியர் ஒருசமயம் மேருபர்வதத்தின் சமீபத்திலுள்ள திருணபிந்து ஆசிரமத்தில் தவம்செய்துகொண்டிருந்தார். அந்த வனம் சிறப்பாயிருந்ததால் தேவகன்னிகைகளும், பன்னக கன்னிகைகளும், ராஜரிஷி கன்னிகைகளும் எப்பொழுதும் அங்குவந்து பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் விளையாடிக்கொண்டிருந்தனர். இவ்விதம் செய்வது புலஸ்தியரது தவத்திற்கு இடையூறாக இருந்ததால் அவர் கோபங்கொண்டு, எவள் என்முன்னால் வருகிறாளோ அவள் கர்ப்பத்தையுடையவளாகக்கடவாள்' எனச் சபித்தார். இந்தச் சாபத்தை யறிந்த கன்னிகைகள் அங்கு வருவதை நிறுத்திவிட்டனர். இது இவ்விதமிருக்க, ஒருநாள் திருணபிந்துவென்ற ராஜரிஷியின் பெண் இந்தச் சாபத்தை யறியாமல், தன் சகிகளைத் தேடிக்கொண்டு அங்குவர, சகிகள் யாரையும் காணவில்லை. வேதசப்தத்தைக் கேட்டாள். அத்யயனம் செய்துகொண்டிருந்த ரிஷியையும் கண்டாள். உடனே சாபத்தின் பிரகாரம் கர்ப்பவதியானாள். அதனால் அவள் பயந்து தன் பிதாவையடைய, அவர் அப்படி உண்டாகக் காரணத்தைக் கேட்டார். அவள், 'நான் புலஸ்தியர் ஆசிரமத்திற்கு என் சகிகளைத் தேடிச்சென்றேன். அங்கு சகிகளைக் காணேன். ஆனால் தனது கர்மத்திலிருந்துகொண்டிருந்த ரிஷியை மட்டும் கண்டேன். எனக்கு இவ்வளவுதான் தெரியும். இப்படியாகக் காரணம் ஒன்றும் தெரியாது' என்று சொன்னாள். அதன்

பின் திருணபிந்து அந்த ரிஷியின் சாபத்தை யறிந்து, பெண்ணு டன் அவரிடம் சென்று, 'உத்தமரே, இப்பெண்ணை உமது சிசுரு ஷைக்கு வைத்துக்கொள்ளவேண்டு' மென்று பிரார்த்திக்க அவ ரும் அங்கீகரித்தார். அதுமுதல் அவள் அங்கேயே இருந்து கொண்டு சிறந்த கைங்கரியங்களால் தனது பதியைத் திருப்தி செய்துகொண்டிருக்கையில், ஒருநாள் அந்தரிஷி அவளைநோக்கி, "நமது இரண்டு குலத்தினுடைய கர்த்தாவாகி எனக்குச் சமமான புத்திரனை உனக்களிக்கிறேன். மேலும் நான் அத்யயனம் செய் யும்போது உன்னால் அந்த அத்யயனம் கேட்கப்பட்டால் உனக்கு விஸ்ரவசு என்ற குழந்தை பிறப்பான்" என்றுசொன்னார். இதைச் செவியுற்ற அந்தப் பெண் சந்தோஷத்துடனிருந்து வந்தாள். அதன்பிறகு கொஞ்சகாலத்தில் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தை உரியகாலத்தில் சகல வித்தைகளையும் கற்றுக்கொண்டு மூன்றுலோகத்தில் பிரசித்தமாயும், கீர்த்தியுடனும், சுருதி முத லியவற்றை யறிந்துகொண்டு விரதம், ஆசாரம் முதலியவைகளில் தன் பிதாவைப்போல் சிறப்பாய் விளங்கிவந்தார். இவரது பிர பாவத்தை யறிந்த பரத்துவாஜர், தன் பெண்ணாகிவிளங்கும் தேவ வர்ணினியை அவருக்குக் கன்னிகாதானம் செய்துகொடுத்தார். அவர் கிரகஸ்தாசிரமத்திலிருக்கையில் அவருக்கு வைஸ்ரவண னை குபேரன் பிறந்தான். குபேரன் ஆயிரம் வருஷங்கள் தவம் செய்து பிரம்மாவின் அனுக்கிரஹத்தால் சம்பத்துக்களை ரட்சிப்ப வனும், திக்குபாலகர்களில் ஒருவனும் ஆனான். பிரம்மா அவ னுக்கு ஒரு விமானத்தைபு மளித்தார். அதன்பின் குபேரன் தன் பிதாவிடம்சென்று தான் சௌகரியமாக வசிப்பதற்கேற்ற இடம் எங்கே என்றுகேட்க, அவர், 'ஏற்கனவே விஸ்வகர்மாவால் ராக்ஷசர்கள் வாசத்திற்காகத் தெற்கு சமுத்திரத்தில் லங்கா என் றொரு பட்டணம் நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது. அங்கிருந்த சகல ராக்ஷசர்களும் விஷ்ணுவுக்குப் பயந்து லங்கையைவிட்டுப் போய் விட்டார்கள். நீ அங்குசென்று வசிக்கலாம்' என்றார். குபேரன் அங்கு சந்தோஷமாய் வசித்துவந்தான். தினந்தோறும் அவன் விமானத்தின்மூலம் சமுத்திரத்தைத் தாண்டி அக்கரைவந்து பெற்றோர்களை வணங்கி, அவர்களது அனுக்கிரகத்தைப்பெற்றுச் சென்றுகொண்டிருந்தான்" என்று சொல்லிக்கொண்டிருக்கையில் ராகவன், "மகாரிஷியே, லங்கை ராக்ஷசர்களுக்காகச் சிருஷ்டிக்கப் பட்டதென்றும், ராக்ஷசர்கள் விஷ்ணுவுக்குப் பயந்து அங்கிருந்து ஓடிவிட்டதாகவும் தாங்கள் சொன்னீர்களே. அவர்கள் எப்படி

உண்டானார்கள்? ராவணாதிகளைக்காட்டிலும் பலிஷ்டர்களாயிருந்தவர்கள் எதனால் விஷ்ணுவுக்குப் பயந்து ஓடினார்கள்? புலஸ்திய வமிசத்தில் ராக்ஷசர்கள் உண்டானதாக நான் கேட்டிருக்கிறேன். தாங்கள் சொல்வது வேறுமாதிரியாயிருக்கிறதே! தயவுசெய்து விவரமாய்ச் சொல்லுங்கள்'' என்று கேட்டார். உடனே ரிஷி மந்தஹாசத்துடன் ராகவனை நோக்கி, "ஆதியில் பிரம்மதேவன் ஜலத்தைச் சிருஷ்டித்து, அதன் சம்ரக்ஷணத்திற்காக ராக்ஷசர்களையும், யக்ஷர்களையும் சிருஷ்டித்தார். ராக்ஷசவமிசத்தில் ஹேதி, பிரஹேதி என்ற இரு சகோதரர்கள் உண்டானார்கள். இவர்கள் ராக்ஷசாதிபதிகள். மதுகைடவர்களுக்குச் சமமானவர்கள். பிரஹேதி தவம்செய்யச் சென்றான். பிறகு ஹேதி காலம் என்கிற தேவதையின் தங்கையை மணந்து வித்யுத்கேசன் என்ற பிள்ளையைப் பெற்றான். அந்தப்பிள்ளை சரியான காலத்தில் சந்தியா தேவதையின் புத்திரியான ஸாலகடங்கடாவை மணந்து ஒருகுழந்தையைப்பெற்றான். ஸாலகடங்கடா தன் பர்த்தாவிடமிருந்த பிரேமையால் பெற்ற குழந்தையை அங்கேயே விட்டுவிட்டுக் கணவனோடு சென்றாள். அக்குழந்தை கையை வாயில்வைத்துக்கொண்டு அழுதுகொண்டிருக்கையில் பரமாத்மாவான பரமேஸ்வரன் பார்வதியோடு அதைக் கண்டார். அப்பொழுது பார்வதி அக்குழந்தைக்கு அனுக்கிரகம் செய்யவேண்டுமென்று ஈஸ்வரனைவேண்ட அவர் பார்வதியின் பிரியத்திற்காக அக்குழந்தையைப் பெற்ற மாதாவின் வயதை அக்குழந்தைக்குக் கொடுத்து, ஆகாயத்தில் சஞ்சரிக்கும்படியான ஒரு பட்டணத்தையும் கொடுத்தார். பிறகு பார்வதி அக்குழந்தையைப் பார்த்து, "இதுமுதல் உன் வமிசத்தில் பிறக்கும் ஒவ்வொரு குழந்தைக்கும், அது பிறக்கும்போது மாதாவுக்கு என்ன வயதோ அந்த வயது அக்குழந்தைக்கு பிறந்தவுடனே உண்டாகும்'' என்று அனுக்கிரகம் செய்தாள். ஸுகேசன் என்ற அக்குழந்தை வரத்தின்படி தன் தாயாரின் வயதுடனிருக்க, தார்மிகனான ஸுகேசனிடம் பிரேமைகொண்ட கிராமணியென்ற கந்தர்வன் தன் புத்திரியான தேவவதியை யவனுக்கு விவாகம் செய்துகொடுக்க, அவள் மாலியவான், சுமாலி, மாலியென்ற மூன்று குழந்தைகளைப் பெற்றாள். அம்மூவரும் பிரம்மாவை யுத்தேசித்து உக்கிரமான தவம்செய்ய, பிரம்மாதோன்றி 'என்னவரம் வேண்டும்?' எனவினவினார். 'நாங்கள் வெகுகாலம் இருக்கக்கூடியவர்களாயும், சத்ருக்களைக் கொல்லக்கூடியவர்களாயும், பிறரால்சுலபமாய் வெல்லமுடியாதவர்களாயுமிருக்கவேண்டும்'

என்று அவர்கள் வேண்ட, பிரம்மாவும் அவ்வரத்தைக் கொடுத்து மறைந்தார். இந்த வரத்தைப் பெற்றதால், அவர்கள் தேவர்களாலும் ஜயிக்கப்படாமல், உலகத்தை உபத்திரவித்துக்கொண்டிருந்தனர். அதன்பின் அவர்கள் தாங்கள் வசிப்பதற்குத் தகுந்த இடம் வேண்டுமென்று விஸ்வகர்மாவைக் கேட்க, அவன், 'தெற்கு சமுத்திரத்தில் திரிகூடம் என்ற மலையில் இந்திரனுக்ஞையால் ஸ்வர்ணமயமான பிராகாரங்களுடன் நூறுயோசனை நீளம், முப்பதுயோசனை அகலமுள்ள லங்கை யென்ற பட்டணம் என்னால் நிர்மாணிக்கப்பட்டுளது. நீங்கள் அதில் வசிக்கலாம்' என்றான். அப்படியே யவர்கள் அங்கு வசித்துவருகையில் அவர்களது பிரபாவத்தையறிந்த நர்மதா என்ற கந்தர்வி தனது மூன்று பெண்களான ஸுந்தரீ, கேதுமதீ, வஸுதா என்பவர்களை முறையே மாலியவான், சுமாலி, மாலி என்பவர்களுக்கு மணம் செய்துகொடுத்தாள். மால்யவான் தன் பத்தினியிடம் வஜ்ரமுஷ்டி, விரூபாக்ஷன், துர்முகன், ஸுப்தக்னன், யக்யகோபன், மத்தன், உன்மத்தன் என்ற பிள்ளைகளையும், அநலா என்ற பெண்ணையும் பெற்றான். சுமாலி தன் மனைவியிடம் பிரஹஸ்தன், அகம்பனன், விகடன், காலகார்முகன், தூம்ராக்ஷன், தண்டன், ஸுபார்ச்சுவன், ஸம்ஹிராதி, பிரஹஸன், பாஸகர்ணன் என்ற பிள்ளைகளையும் ராகா, புஷ்போத்கடா, கேகஸி, கும்பீனஸி என்ற பெண்களையும் பெற்றான். மாலி தன் மனைவியிடம் அனிலன், அநலன், ஹரன், ஸம்பாதி என்ற (விபீஷணன் மந்திரிகள்) நால்வரைப் பிள்ளைகளாகப் பெற்றான். இவ்விதம் ராக்ஷசர்கள் நூற்றுக்கணக்காக விருத்தியாகி யாகங்களைக் கெடுத்துக்கொண்டும் தேவர்களைத் துன்புறுத்திக்கொண்டும் இருக்கும்போது, தேவர்கள் துன்பத்தைச் சகிக்கமுடியாமல், பிறப்பில்லாதவராயும், நித்தியவஸ்துவாயும் விளங்கிவரும் பரமாத்மாவான பரமேஸ்வரனையடைந்து, 'பிரபோ, மூன்று ராக்ஷசர்களும் தாங்களே விஷ்ணு, தாங்களே ருத்திரன், தாங்களே பிரம்மா என்று கூறிக்கொண்டு எங்களை உபத்திரவிக்கின்றனர். எங்களைத் தாங்கள் ரக்ஷிக்கவேண்டும்' எனப்பிரார்த்தித்தனர். அப்பொழுது பகவான், 'ஸுகேசனிடத்தில் உள்ள அபிமானத்தால் நான் அவர்களை யழிக்கமாட்டேன். ஆனால் அவர்களின் வதத்திற்கு உபாயம் சொல்கிறேன். நீங்கள் விஷ்ணுவைச் சரணமடைந்தால் அவர் அனுக்கிரகம் செய்வார்' என்று சொல்ல, அவர்கள் விஷ்ணுவிடம் சென்று தங்களைக் காக்கவேண்டினர். அவர் அவர்களுக்கெல்லாம் அபயப்பிரதானம் செய்து,

'எல்லோரையும் நாம் அடக்குவோம்' என்றார். தேவர்கள் சந்தோஷத்துடன் தங்களிருப்பிடத்தை யடைந்தார்கள்.

இவ்விஷயத்தைக் கேள்வியுற்ற மாலியவான் தம்பிகளை நோக்கி, 'வீரர்களே, நம்மால் துன்பமடைந்த தேவர்கள் நம்மை வதிக்கவேண்டுமென்று பரமசிவத்தை வேண்ட, அவர் தன்னால் ராக்ஷசர்களைக் கொல்ல முடியாதென்று விஷ்ணுவிடம் செல்லச் சொன்னார். அவர்கள் விஷ்ணுவிடம் சென்று வேண்ட, விஷ்ணு நம்மை யழிப்பதாகப் பிரதிக்ஞை செய்து அவர்களை யனுப்பியிருக்கிறார். இவ்விஷயத்தைக் கேட்டீர்களா! இந்த விஷ்ணுவைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஒருவிதத்திலும் தனக்கு லேசில் வதமில்லையென்று வரம்பெற்று செருக்குற்றிருந்த இரணியகசிபுவையும், நமுசி காலநேமி, ஸம்ஹ்ராதன், அதிமாயாவியான ராதேயன், யமளார்ஜுனர்கள், கும்பன், நிகும்பன் என்ற பலரை இவர் யுத்தத்தில் கொன்றவர். மகா தீரர்களாயும், மாயாவிகளுமான அவர்களையெல்லாம் கொன்றவராயும், நம்மைக்கொல்ல இச்சிப்பவராயுமான நாராயணன் நம்மால் சுலபமாய் வெல்ல முடிந்தவரல்ல' என்று சொன்னான். அதைக் கேட்ட இருசகோதரர்களும் தமையனை நோக்கி, 'உத்தம, சர்வ தேவர்களான விஷ்ணு, ருத்திரன், யமன், இந்திரன் முதலிய யாவரும் நம்மெதிரில் நிற்க அஞ்சுகிறார்கள். தவிறவும் நம்மிடம் துவேஷம் கொள்ள விஷ்ணுவுக்குக் காரணமில்லை. அவர் நம்மேல் கோபங் கொள்ள இந்த தேவர்களே காரணம். ஆதலால் இப்பொழுதே நாம் யுத்தத்திற்குச் சென்று தேவர்களைக் கொன்றுவிடுவோம்'' என்று கூறி வீரர்களுடன் புறப்படும்பொழுது பல அபசகுனங்கள் உண்டாயின. இவர்கள் தேவலோகத்தை நாடி யுத்தத்திற்கு வருவதைத் தூதர்மூலமறிந்த பகவான் சங்கம், சக்கரம், கதை, சார்ங்கம், கத்திமுதலிய சகல ஆயுதங்களுடன் கருடபகவான்மேல் ஆரோகணித்துக்கொண்டு அவர்களை யெதிர்க்க, ராக்ஷசர்களும் எதிர்த்தனர். அப்பொழுது விஷ்ணு சங்கத்வனிசெய்ய அநேகர் பயந்தார்கள். அநேகர் பிரமித்தனர். பலர் ஓடினார்கள். இதைக் கண்ட சுமாலி தன் சரங்களால் விஷ்ணுவை யடித்தான். அப்பொழுது ராக்ஷசர்கள் தைரியங்கொண்டு மறுபடி யெதிர்த்தனர். தன்னை நோக்கி விடப்பட்ட பாணங்களை விஷ்ணு தடுத்துவிட்டுப் பல் பாணங்களால் அவன் சரீரத்தைத் துளைத்து, அவனது த்வஜம், குதிரைகள், கிரீடம் முதலியவற்றைத் யழித்துவிட்டார்.

அப்பொழுது மாலி கோபங்கொண்டு ஒரு கதாயுதத்தால் கருடன் நெற்றியில் பலமாக அடித்தான். விஷ்ணுவைத் தூக்கிக்கொண்டிருந்த கருடன் அந்த அடிபட்டதும் யுத்தகளத்திலிருந்து திரும்பி போட, பகவானும் திருப்பப்பட்டார். உடனேயவர் கருடன் மேலில் குறுக்காகத் திரும்பி உட்கார்ந்துகொண்டு மாலியை வதிக்கச் சக்ராயுதத்தைவிட, அவன் அடிபட்டுக்கீழேவிழுந்தான். பின்னும் பல ஆயுதங்களால் அவர் பல ராக்ஷசர்களைப் பலவிதமாய் அழிக்கவே, எல்லோரும் ஓடிவிட்டனர். அப்பொழுது விஷ்ணு துரத்திக்கொண்டுபோக, மாலியவான் அவரைப் பார்த்து, "நீ என்னகாரியம் செய்கிறாய்? உனக்கு க்ஷத்திரிய தர்மம் தெரியவில்லையே! அடிபட்டு ஓடும் எங்களை அதர்மிஷ்டன் போல் நீ அடிக்கிறாயே! ஓடுபவரைத் துரத்தியடிப்பது பாபமல்லவா? இந்த வதம் செய்பவன் உத்தமலோகத்தை யடையமாட்டான். உனக்கு யுத்தத்தில் பிரியமிருந்தால் எங்கே என்னிடம் யுத்தம்செய்து உன் பலத்தைக் காட்டு பார்ப்போம்' என்று கூறினான். விஷ்ணு அவனைநோக்கி, 'உங்களுக்குப் பயந்து தேவர்கள் என்னைச் சரணமடைந்ததால், நான் அவர்களுக்கு அபயப்பிரதானம் செய்தேன். அவர்களைக் காப்பது என் உயிரைக்காட்டிலும் முக்கியமானது. நீங்கள் ரஸாதலத்தை யடைந்தாலும் நான் உங்களைக் கொல்லாமல் விடமாட்டேன்' என்றுசொல்ல மாலியவான் கோபத்துடன் தன் சக்தியாயுதத்தை யவர் மார்பில் விட்டான். அது அவர் மார்பில் பிரவேசிக்க, அவர் அதைப் பிடுங்கிக் கோபத்துடன் அவன்மேல் திருப்பிவீசினார். அந்த அடிபட்டதும் மாலியவான் நடுங்கிக்கொண்டு சூலத்தால் அவர் மார்பில் அடித்துத் தன்கையால் அவர் மார்பில் குத்தினான். குத்தியவுடன் அவன் ஒரு வில்தூரம் பின்னடைந்து கருடனையும் அடித்தான். கருடன் கோபங்கொண்டு தன் இறக்கைகளால் அவனை நன்றாயடித்தார். அந்த அடியைப் பொறுக்கமுடியாமல் மாலியவான் ஸுமாலியுடனும் சேனைகளுடனும் லங்கையை நோக்கிப் புறப்பட்டான். இவ்விதம் விஷ்ணுவால் பங்கப்படுத்தப்பட்டவர்களான ராக்ஷசர்கள் அவருக்குப் பயந்து லங்கையைவிட்டுப் பாதாளம் சென்றனர். நல்ல பலிஷ்டர்களான இவர்கள் விஷ்ணுவைத் தவிற மற்றவரால் அசைக்க முடியாதவர்கள். அந்த வம்சத்தில்பிறந்த அதிக பலிஷ்டர்களான ராவணாதி ராக்ஷசர்களை யழிப்பதற்காகவே ஜனித்த அழிவில்லாவரான தாங்களே ஸ்ரீமந் நாராயணன். தர்மத்திற்கு அழிவுவரும் காலத்தில் சரணாகத

வத்ஸலரான தாங்கள் அவதரித்துத் துஷ்டர்களை யழித்து வருகி றீர்கள். தாங்களே ஸநாதனமூர்த்தி. நான்கு கைகளுள்ளவர்" என்று கூறக்கேட்ட ராமர் மிகவும் ஆச்சரியமடைந்தார். அகஸ் தியர் அதற்குமேலும் சொல்லத்தொடங்கி, "இராக்ஷசர்களால் விடப்பட்ட அந்த லங்கையில் குபேரன் தன் பிதாவின் ஆக்ஞைப் படி யிருந்துவந்தான். இப்படியிருக்க ஒருநாள் ஸுமாலி என்ற ராக்ஷஸன் தன்மகள்கேகஸியுடன் பாதாளத்திலிருந்து பூலோகத் திற்கு வந்து சஞ்சரித்துக்கொண்டிருக்கையில் குபேரன் புஷ்பகத் தில் செல்வதைக் கண்டான். குபேரன் அப்பொழுது தன் பிதாவை நமஸ்கரித்துச்சென்றான். அவனைக்கண்டதும் சுமாலி தன் பெண்ணை நோக்கி, "பெண்ணே, இதோசெல்பவன் விச்ர வஸின் புத்திரனான குபேரன். அவனது வைபவத்தைப் பார்த் தாயா? நீ சென்று அந்த விஸ்ரவசையடைந்து அவரது அனுக்கிர கத்தால் சிறந்ததொரு குழந்தையைப் பெற்றுவா. அப்பொழுது இந்தக் குபேரனது வைபவத்தைவிட மேலான வைபவத்தை உன் குழந்தை யடையலாம். ஆதலால் நீ அவரிடம்செல். அவர் உன் னைக்கண்டு 'நீயார்? எங்குவந்தாய்?' என்று கேட்டால், அவரிடம், 'நான் சுமாலியென்ற ராக்ஷசனின்பெண். என்பிதா என்னை உங்க ளிடம் அனுப்பினார். மற்றவிஷயம் தங்களுக்குத் தெரியும்' என்று சொல். அதன்பின் அவர் அனுக்கிரகம் செய்வார்" என்றுகூறி யனுப்ப, அவளும் தன் பிதாவினாக்ஞையால் விபரீத வேளையையும் கவனியாமல் அக்னிஹோத்திரம் செய்துகொண்டிருக்கும் ரிஷி யிருப்பிடத்தை யடைந்து தன் கால் கட்டைவிரலால் பூமியைக் கீறிக்கொண்டு நின்றாள். அவளைக்கண்டதும் ரிஷி, 'பெண்ணே, நீயார்? இங்கு எதற்காகவந்தாய்? உண்மையைச்சொல்' என்றுகேட்க அவள், 'முனிவரே, நான் கேகஸி யென்ற பெயரையுடைய ராக்ஷசி. என் பிதாவான சுமாலியின் ஆக்ஞையால் நானும்மை நாடிவந்திருக்கிறேன். தங்கள் தபோவிசேஷத்தால் எனது மனோபிப்பிராயத்தை அறியலாம்' என்றாள். உடனே ரிஷி, 'பெண்ணே, நீ குழந்தை வேண்டுமென்ற எண்ணத்துடன் வந்தி ருக்கிறாய் என்றறிந்தேன். நீ விபரீதவேளையில் வந்திருப்பதால், பயங்கரமான ரூபமுள்ளவர்களாயும், துஷ்டர்களுக்குப் பிரியமுள் ளவர்களாயும், விபரீத சித்தமுள்ளவர்களாயும், அதர்மிஷ்டர்க ளாயும், குரூரசெய்கை யுடையவர்களாயுமுள்ள பிள்ளைகளை அடைவாய்' என்று சொன்னார். அதைக்கேட்ட கேகஸி, அவரை வணங்கி, 'மகாரிஷே, பிரம்மவாதியான உம்மிடமிருந்து இப்படிப்

பட்ட துராசாரர்களான பிள்ளைகளையடைய நான் இச்சிக்கவில்லை. தாங்கள் தயைசெய்து அனுக்கிரகிக்கவேண்டும்' என்றுவேண்ட விஸ்ரவசு, 'பெண்ணே, கவலைப்படாதே. கடைசிப் பிள்ளையாய்ப் பிறப்பவன் தர்மாத்மாவாயிருப்பான். அவன் என் வமிசத்துக்கு அனுரூபனுயிருப்பன்' என்றுகூறி யனுப்பினுர். பின் சிறிதுகாலத்தில் அவள் பிள்ளைகளைப் பெற்றாள். முதலில் பத்துத்தலைகளையும், இருபது கைகளையுமுடைய கருத்த சரீரமுள்ளவன் பிறந்தான். அப்பொழுது நாய்நரிகள் ஊளையிட்டன. இரத்தமாரி பெய்தது. பூமிசலித்தது. இவ்விதம் பலவிதமான உற்பாதங்கள் தோன்றின. விஸ்ரவசு அவனுக்குத் தசக்ரீவன் எனப்பெயரிட்டார். அதற்குப் பிறகு மிகவும் பயங்காரூபமும், பெரிய சரீரமுமுள்ளவனை கும்பகர்ணன் பிறந்தான். பிறகு சூர்ப்பனகி பிறந்தாள். பிறகு கடைசிப் பிள்ளையான தர்மாத்மாவான விபீஷணன் பிறந்தான். அவன் பிறந்தபொழுது புஷ்பமாரி பொழிந்தது. 'தேவர்களுக்கு உயிர்கொடுப்பவன் உண்டானுன்' என்று ஆகாயத்தில் வாத்யங்கள் கோஷித்தன. தேவர்கள் யாவரும், 'நல்லபிறப்பு, நல்லபிறப்பு' என்று கொண்டாடினுர்கள். குழந்தைகள் பருவத்திற்கேற்ப வளர்ந்துவந்தனர். தசக்ரீவனும் கும்பகர்ணனும் உலகத்தாரைத் துன்புறுத்தி வந்தனர். கும்பகர்ணன் தினம் தேவர்களை உபத்திரவித்துக்கொண்டு ரிஷிகளைக் கொன்று தின்றுகொண்டு சந்தோஷமாயிருந்தான். விபீஷணன் ஜிதேந்திரியனாய்த் தர்மத்திலிருந்துகொண்டு நியமமான ஆகாரத்தையுண்டுவந்தான். இது இவ்விதமிருக்கக் குபேரன் தன் பிதாவை தரிசிக்கவந்தசமயம் ஒருநாள் கேகஸி தசக்ரீவனை நோக்கி, 'புத்ரா, உனக்குப் பிராதாவான இவன் தேஜஸைப் பார்த்தாயா! இவன் பிரபாவத்தைக் கேட்டாயா? நீ இவனைப்போலவாவது இவனுக்கு மேலாகவாவது ஆவதற்குப் பிரயத்தனம் செய்யவேண்டும்' என்றுகூறக் கேட்ட தசக்ரீவன் குபேரனது பலத்தைக் கண்டு சகிக்காமல், 'நான் இவனைப்போலவாவது இவனுக்கு மேலாகவாவது ஆவேன்' எனச் சபதம்கொண்டு தன் சகோதரர்களுடன் தவம்செய்யப் புறப்பட்டான். தன் எண்ணத்தைப் பூர்த்திசெய்துகொள்வதற்காகக் கோகர்ணமென்ற இடத்திற்குச் சென்று பிரம்மாவைக் குறித்து உக்கிரமான தவம்செய்ய, அவரும் சந்தோஷித்து அவர்களுக்கு ஜயத்தை யளிக்கக்கூடிய வரங்களைக் கொடுத்தார்" என்று சொல்லிக்கொண்டிருக்கையில் ராமர், "அவர்கள் எப்படிப்பட்ட தவம் செய்தார்கள்? என்ன வரங்களை யடைந்

தார்கள்? தயவுசெய்து சவிஸ்தாரமாய்ச் சொல்லவேண்டும்" என்று கேட்க, அகஸ்தியர் மேலும் சொல்லத்தொடங்கினர்.

"வீர்யவானுன கும்பகர்ணன் தர்மமான மார்க்கத்திலிருந்து கொண்டு கடுமையான வெயில்காலத்தில் பஞ்சாக்னிமத்தியிலும், நல்ல குளிர்காலத்தில் ஜலமத்தியிலுமிருந்துகொண்டு பதினுயிர வருஷம் கடுமையானதவம் செய்துகொண்டிருந்தான். தர்மாத்மாவான விபீஷணன் மிகவும் நியமமாய் இருந்துகொண்டு முதல் ஐயாயிரம் வருஷங்கள் ஒருகாலால் நின்றுகொண்டும் மறு ஐயாயிர வருஷங்கள் இரு கைகளைத் தலைக்குமேல் தூக்கிக்கொண்டு சூரியனைப் பார்த்துக்கொண்டு நின்றும் தவம்செய்தான். இதில் பிரேமையடைந்த தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தனர். தசக்ரீவன் ஆகாரமில்லாமல் பத்தாயிர வருஷங்கள் இருந்துகொண்டு ஆயிரவருஷங்களுக்கு ஒரு தலையாக அறுத்து அக்னியில் ஆகுதி செய்துகொண்டிருந்தான். இப்படி ஒன்பது தலைகளை வெட்டிவிட்டுப் பதினுயிர வருஷமுடிவில் பத்தாவது தலையை யறுக்க ஆரம்பித்தபோது பிரம்மதேவர் சகல தேவர்களுடன் தோன்றி, 'ஏ, தசக்ரீவா, உன் தவத்தால் திருப்தியடைந்தேன். உனக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்' என்றுகூற, தசக்ரீவன், 'பிராணிகளுக்கு உள்ள மரணபயம் எனக்கில்லாதிருக்க வரம்வேண்டும்' என்றுகேட்டான். அப்பொழுது பிரம்மதேவன், 'சகல பிராணிகளாலும் உனக்கு வதமில்லையென்று கூறமுடியாது. நீ வேறுவிதமாய்க்கேட்டால் கொடுக்கிறேன்' என்றுரைக்கவே, தசக்ரீவன், 'கருடர்கள், நாகர்கள், யக்ஷர்கள், தைத்யர்கள், தானவர்கள், ராக்ஷசர்கள், தேவர்கள் இவர்களால் எனக்கு வதம் இல்லையென்று வரம்கொடும். மனுஷ்யர்களை ஆதியாகவுடைய சகல பிராணிகளும் எனக்குத் திருணமாத்திரம். ஆதலால் அந்தவரம் கொடுத்தால்போதும்' என்று கேட்க, பிரம்மா அதை யருளிச்செய்து, 'மேலும் நானுக உனக்கு ஒருவரம் கொடுக்கிறேன். உன்னுல் முன்பு அக்னியில் ஆகுதிசெய்யப்பட்ட தலைகளெல்லாம் உனக்கு மறுபடியும் உண்டாகட்டும். உனக்கு இன்னொரு வரமும் கொடுக்கிறேன். உனக்கிஷ்டமான ரூபத்தையடையும் சக்தியும் உனக்கு உண்டாகும்' என்று கூறி மறைந்தார். உடனே அவனது தலைகளும் முளைத்தன.

அதன்பின் பிரம்மா விபீஷணனுக்குத் தரிசனம் கொடுத்து,

'ஏ, தர்மிஷ்டா, உனக்குவேண்டிய வரத்தைக் கேட்கலாம்' என்று கூற, விபீஷணன், 'பிரபோ, பரம ஆபத்துக்காலத்திலும் என் புத்தி அதர்மத்தில் செல்லலாகாது. என்புத்தி எந்தெந்த ஆசிரமத்தில் பிரவேசிக்கிறதோ அதது அப்படியே தர்மமாகவேண்டும். தர்மத்தை இச்சிப்பவர்களுக்கு யாதொரு கஷ்டமும் கிடையாது. ஆதலால் இந்த வரத்தைக் கொடுங்கள். மேலும் தாங்கள் எனக்குப் பிர்ம்மாஸ்திரத்தை யனுக்கிரகம் செய்யவேண்டும்' என்று பிரார்த்திக்க, பிரம்மதேவன், 'நீ ராக்ஷசயோனியில் ஜனித்ததால் உன்புத்தி அதர்மத்தில் செல்லும். அப்படி அது அதர்மத்தில் போகாதிருக்கும் வரத்தையும், சிரஞ்சீவத்வமான வரத்தையும் அஸ்திரமும் உனக்குக்கொடுத்தேன்' என்றுகூறிப்பின் கும்பகர்ணனுக்கு வரமளிக்க அவன்முன் தோன்றினர். அப்படியவர் வருகையில் தேவர்கள் பிரம்மதேவனை நமஸ்கரித்து, 'இவனுக்கு வரம் கொடுக்கவேண்டாம், இவன் நந்தவனத்தில் ஏழு அப்ஸரஸ்திரீகளையும் இந்திரனை யனுசரிக்கும் பத்து ஸ்திரீகளையும் உண்டவன். அநேக மனுஷ்யர்களையும், ரிஷிகளையும் புசித்திருக்கிறன். முன்னமேயே எல்லோரையும் இவ்விதம் துன்புறுத்திய இவன் வரத்தையடைந்தால் மூன்று உலகங்களையு மழித்துவிடுவான். ஆதலால் இவனுக்கு வரம்கொடுக்கும் வியாஜத்தால் இவனை மோஹிக்கச்செய்துவிடுங்கள்' என்று வேண்ட, பிரம்மா சரஸ்வதியை ஸ்மரித்தார். அவள் வந்து, 'நான் யாதுசெய்யவேண்டும்?' என்று கேட்க, பிரம்மா அவளைப்பார்த்து, 'நீ இந்தக் கும்பகர்ணன் வாக்கிலிருந்துகொண்டு தேவர்களிஷ்டத்தைப் பூர்த்திசெய்வாய்' என்று சொன்னர். சரஸ்வதியும் 'ஆகட்டும்' என்று சொல்லிவிட்டுக் கும்பகர்ணன் வாக்கில் பிரவேசித்தாள். அதன்பின் பிரம்மதேவர் கும்பகர்ணனை நோக்கி, 'உனக்கு என்னவரம்வேண்டுமோ அதைக்கேள்' என்றுசொல்ல, அவன் அவரை நோக்கி, 'நான் அநேக வருஷங்கள் தூங்கவேண்டும். இந்த வரத்தைக்கொடும்' என்று கேட்டான். பிரம்மதேவரும் அப்படியே கொடுத்தேன் என்றுகூறி மறையவே, சரஸ்வதியும் கும்பகர்ணன் வாக்கிலிருந்து வெளிப்பட்டாள். உடனே கும்பகர்ணன் தன் ஞாபகத்தைப்பெற்று, 'நான் இப்படிப்பட்ட வரத்தைக் கேட்டேனே! என்னசெய்வேன்!' என்று கவலைப்பட்டு, 'நான் தேவர்களால் ஏமாற்றப்பட்டேன்' என்றெண்ணி, அங்குவந்த மற்றவர்களாலும் அது வாஸ்தவமே என்றுணர்ந்தான்.

அதன்பின் அந்த சகோதரர்கள் மூவரும் ஸ்லேஷ்மாதக வனத்தை யடைந்து சுகமாய் வசித்துவந்தனர். இப்படியிருக்க ஸுமாலி யென்ற ராக்ஷசன் ராவணாதிகள் வரம்பெற்றதை யறிந்து, மாரீசன், விரூபாக்ஷன், மஹோத்ரன், பிரஹஸ்தன் முதலியவர்களுடன் தசக்ரீவனிடம் வந்து, 'உத்தமா, விஷ்ணுவிடமிருந்த பயத்தால் நாம் நமது பட்டணமான லங்கையை விட்டுவிட்டோம். நமக்குப் பிராசீனமாக ஏற்பட்ட லங்கையை உனக்குப் பிராதாவான குபேரன் அடைந்திருக்கிறான். அதை நீ ஸாமதானோபாயத்தால் திருப்பி யடைந்தால் நீயே லங்கேசனாயிருக்கலாம். நீ பெற்ற வரத்தைக் கேட்டு நான் மிகவும் சந்தோஷிக்கிறேன். நீ யாருக்கும் அஞ்சாமல் எங்களுக்கெல்லாம் யஜமானனாயிருக்கலாம்' என்று கூற, தசக்ரீவன் 'குடும்பத்தில் மூத்தவனாதலால், அந்தக் குபேரன் பூஜிக்கத்தகுந்தவன். அவன் நிந்திக்கத்தக்கவனல்லன். அவன் நமக்குக் குருவாதலால் அவனிடமிருந்து ஸாமதானதியால் லங்கை கிரஹிக்கத்தக்கதல்ல' என்று சொன்னான். சிறிதுகாலத்திற்குப் பின் ஒருநாள் பிரஹஸ்தன் தசக்ரீவனை நோக்கி, 'சூரர்களுக்குப் பிராத்ருபாவம் கிடையாது. காச்யபரென்ற பிரஜாபதிக்கு அதிதி, திதியென இரண்டு பத்தினிகள். அவர்களில் அதிதி தேவர்களையும், திதி அசுரர்களையும் பிள்ளைகளாகப் பெற்றனர். விஷ்ணு அசுரர்களையெல்லாம் கொன்றுவிட்டு மூன்று உலகங்களையும் தேவர்கள் வசமாக்கிவிட்டார். பிராதாக்களான தேவாஸுரர்கள் சண்டையிட்டதால் நீயும் குபேரனிடமிருந்து லங்கையைக் கைப்பற்றலாம்'' என்றுகூற தசக்ரீவனது புத்தி சலித்தது. அவன் சற்றுநேரம் யோசித்துப்பின் பிரஹஸ்தனைநோக்கி, ''நீ குபேரனிடம் தூதுசென்று அவனிடம் 'இந்த இலங்கை ராக்ஷசர்களுக்காக ஏற்பட்டதால் நீர் இதிலிருப்பது நியாயமல்ல. ஆதலால் நீர் இதை உடனே எங்களிடம் ஒப்புவித்துவிடும்' என்று சொல்லி அவனது அபிப்பிராயத்தையும், காரியத்தையும் அறிந்துவா'' என்று சொல்லியனுப்ப, அவனும் குபேரனிடம் சென்று, 'நான் உமது பிராதாவான தசக்ரீவனால் அனுப்பப்பட்டு இங்கு வந்திருக்கிறேன். இப்பொழுது உம்மால் அடையப்பட்டிருக்கும் இந்த லங்கை ஏற்கனவே மகாபலமுள்ள ராக்ஷசர்களால் அடையப்பட்டிருந்தது. நடுவில் சிறிதுகாலம் அது அவர்களால் விடப்பட்டிருந்தது. அச்சமயம் நீர் அதை யடைந்துவிட்டீர். ஆதலால் அதை மறுபடியும் ராக்ஷசர்களுக்கே விட்டுவிடவேண்டுமென்று தசக்ரீவன் உம்மை மிகவும் தாழ்மையாய்க்

கேட்கிறான்' என்று சொன்னான். அதைக் கேட்ட குபேரன், "இந்த லங்காராஜ்யமானது ஏற்கனவே ராக்ஷசர்களால் விடப்பட்டிருந்தபொழுது எனக்குப் பிதாவால் கொடுக்கப்பட்டது. உன்னுடையதானால் தாராளமாய் நீ அதை அடையலாம்' என்று தசக்ரீவனிடம் சொல்" என்று கூறிவிட்டுத் தன் பிதாவிடம் சென்று அவரை நமஸ்கரித்து தசக்ரீவன் நடத்தையைத் தெரிவித்தான். அதைக்கேட்ட விஸ்ரவஸ், 'தசக்ரீவன் சிறந்த வரத்தைப் பெற்றிருப்பதை நீயுமறிந்திருப்பாய். அந்த வரத்தால் அவன் மிகவும் கர்வமடைந்திருக்கிறான். நான் அவனுக்கு எவ்வளவு தர்மங்களைச் சொல்லியும் அவன் கேட்கவில்லை. ஆதலால் நான் அவனை யழியக்கடவாயென்று சபித்துவிட்டேன். கெட்டபுத்தியுடையவனும் மூடனுமான அவனிடம் நீ விரோதம்கொள்ளாதே. நீ லங்கையை விட்டுவிட்டுக் கைலாசத்திற்குச் சென்று அங்கு உன் வாசஸ்தலத்தை ஏற்படுத்திக்கொள். அங்கு மந்தாகினியென்ற அற்புதமான நதி பிரவகிக்கிறது. நீ அங்கு வசிக்கலாம்' என்றுகூற, குபேரன் தனது வாகனத்திலேறிக்கொண்டு தன்னைச் சேர்ந்த சகலருடனும் கைலாசத்தை யடைந்து அங்கு வசித்து வந்தான்.

குபேரன் லங்கையை விட்டகன்றதைக் கண்ட பிரஹஸ்தன் களிப்புடன் தசக்ரீவனிடம் சென்று தெரிவிக்க, தசக்ரீவன் சகல வீரர்களுடன் லங்கையை யடைந்து, பிறகு அவர்களால் பட்டாபிஷேகம் செய்யப்பட்டு லங்காதிபதியாய் விளங்கினான். அதன் பின் அவன் தன் தங்கையான சூர்ப்பனகியைக் காலகேயர் என்ற அசுரர்களில் ஒருவனான வித்யுத்ஜிஹ்வனுக்கு மணம் செய்து கொடுத்தான். பிறகு ஒருநாள் தசக்ரீவன் வேட்டைக்குச்சென்ற விடத்தில் திதிதேவியின் புத்திரனான மயன் ஒரு பெண்ணுடனிருக்கக் கண்டு அவனைப்பார்த்து, 'மனுஷ்யசஞ்சாரமில்லாத இக்காட்டில் ரூபவதியான இப்பெண்ணுடன் இருக்கும் நீர் யார்?' என்று கேட்க மயன், 'ஹேமையென்ற பெயரையுடைய அப்ஸரஸைத் தேவர்கள் எனக்குப் பத்தினியாகக் கொடுக்க, நான் ஒரு குகையில் ஸ்வர்ணமயமான ஒரு பட்டணத்தை உண்டுபண்ணிக்கொண்டு அதில் அவளுடன் ஐநூறு வருஷங்களிருந்தேன். அப்பொழுது எனக்கு அவளிடம் மூன்று குழந்தைகள் பிறந்தன. அதில் மூத்தவனுக்கு மாயாவியென்றும், இளையவனுக்குத் துந்துபியென்றும், மூன்றாவதான இப்பெண்ணுக்கு மந்தோதரி

யென்றும் பெயர். எனது பத்தினி தேவகாரியமாய் தேவலோகம் சென்றிருக்கிறாள். அவள் சென்று இப்பொழுது பதினான்கு வருஷங்களாகின்றன. நான் இவளது கலியாணத்திற்காகச் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறேன்' என்று சொல்லி 'நீர்யார்?' என்று கேட்டான். அப்பொழுது தசக்ரீவன் மயனை நோக்கி, 'நான் விஸ்ரவஸ் என்ற மஹரிஷியின் புத்திரன். இவளை யெனக்குக் கொடுக்க உமக்கு இஷ்டமிருந்தால் கொடுக்கலாம்' என்று கூற 'மஹரிஷி புத்திரன்' என்றதைக் கேட்ட மயன் மந்தஹாசம் செய்து, 'இவள் ஹேமையின் கர்ப்பத்தில் விளங்கினவள். மந்தோதரியென்ற பெயருடையவள். இவளை நானுனக்குப் பத்தினியாகக் கொடுக்கிறேன்' என்றுசொல்லி அக்னி சாக்ஷியாய் அவளை யவனுக்குத் தத்தம்செய்து, அவனுடைய அனுகூலத்திற்காக உத்தம தவத்தால்பெற்ற மஹாசக்தியாயுதத்தை யவனுக்குக் கொடுத்துவிட்டுச் சென்றான். அதன்பின் தசக்ரீவன் வைரோசனனுடைய தௌஹித்ரியான வஜ்ரமாலை யென்பவளைக் கும்பகர்ணனுக்கு மணம் செய்து வைத்தான். பிறகு சைலூஷன் என்ற கந்தர்வராஜபுத்திரியானஸரமா யென்பவளைவிபீஷணனுக்கு விவாஹம் செய்துகொடுத்தான். இவ்விதம் மூவரும் தங்கள் மனைவிகளுடன் சுகித்திருக்கையில் தசக்ரீவனுக்கு மந்தோதரியிடம் ஓர் பிள்ளை பிறந்தது. அது பிறக்கும்போதே கத்தியது மேககர்ஜனைபோலிருந்ததால், அவனுக்கு மேகநாதன் என்று பெயரிடப்பட்டது. அவனுக்கே இந்திரஜித்து என்று பெயர். (அவன்தான் லக்ஷ்மணனால் கொல்லப்பட்டவன்). அவன் சிறந்த ஸ்திரீகளால் ரக்ஷிக்கப்பட்டு விருத்தியடைந்து வந்தான். இப்படியிருக்க, சிறிதுகாலத்திற்குப் பின், கும்பகர்ணன் கேட்டுக்கொண்ட வரத்தின்படி நித்திராதேவி யவனை யடைந்துவிட, நித்திராதேவியால் பீடிக்கப்பட்ட கும்பகர்ணன் தசக்ரீவனை நோக்கி, 'அண்ணா, எனக்குத் தூக்கம் வந்துவிட்டதால், சீக்கிரம் ஒரு தகுதியான இடத்தை ஏற்பாடு செய்யவேண்டும்' என்றான். உடனே தசக்ரீவன் ஒருகுகையில் இரண்டுயோசனை நீளமும், ஒரு யோசனை அகலமுமுள்ள ஒரு கிரகத்தை உண்டுபண்ணி அதில் சகல சௌகரியங்களையும் செய்துகொடுக்க, கும்பகர்ணன் அங்கு தூங்கிக்கொண்டிருந்தான். அவன் பதினாயிரக்கணக்கான வருஷங்கள் எழுந்திருக்கவேயில்லை. இவன் இவ்விதம் தூங்கிக்கொண்டேயிருக்க, கோபத்தையுடைய தசக்ரீவன் தேவர்கள், ரிஷிகள், யக்ஷர்கள், கந்தர்வர்கள் முதலிய யாவரையும் கொன்று

கொண்டிருந்தான். இதையறிந்த குபேரன் அவனுக்கு ஹிதம் சொல்வதற்காக ஒரு தூதனையனுப்பினன். அவன் தசக்ரீவன் சபையை யடைந்து, "ஏ, ராக்ஷஸேஸ்வரா, குபேரன் உமக்குத் தெரிவிக்கச்சொன்னது யாதெனில், 'நான் கைலாசத்தில் உத்தம தர்மத்துடன் இருந்துகொண்டிருக்கிறேன். இப்படியிருக்கும் காலத்தில் ருத்ராணி பரமேஸ்வரனுடனிருந்தாள். அதையறியாது, அப்பொழுது இடதுபக்கம் தெரிந்த காந்தியைக் கண்டு அது என்னவென்று என்து இடதுகண்ணால் கவனித்தேன். உடனே அக்கண் பார்வை போய்விட்டது. பிறகு நான் உக்கிரமான தவம்செய்து பகவானை உபாசித்ததால், பரமசிவன் என்னிடம் பிரேமைகொண்டு எனக்கு ஏகாக்ஷிபிங்களனென்ற பெயரைக் கொடுத்து என்னைத்தனக்குச்சகாவென்றும் அனுக்கிரகம்செய்தார். ஆதலால் தேவதா அபராதம் செய்தல் கூடாது. ஆனால் நீரோ அநேக பெரியோர்களையும், தேவர்களையும் உபத்திரவம் செய்கிறதாகக் கேள்விப்படுகிறேன். இது அதர்மம். இது உசிதமல்ல' என்பதே" என்று சொல்லக்கேட்ட தசக்ரீவன் தூதனைப்பார்த்து 'மஹேஸ்வரனுடன் இவன் சிநேகமா செய்துகொண்டான்! ஏதோ குபேரன் தான் சொன்னால், நீ எப்படி அதை என்சபையில்சொன்னாய்?' என்றுரைத்து அவனைக் கோபித்துக்கொண்டு அவனைக் கொன்று ராக்ஷசர்களுக்கு ஆகாரமாகக் கொடுத்தான். அதன் பின், 'நான் இப்பொழுதே சென்று லோகபாலர்கள் முதலிய சகலரையும் எமலோகமனுப்புகிறேன்' என்றுசொல்லி மூன்றுலோகத்தையும் ஜயிக்கத் தீர்மானித்து, முதலில் குபேரனை ஜயிக்கக்கிளம்பினன். அவன் குபேரனிருப்பிடத்தை யடைந்து அவனை யுத்தத்திற் கழைக்கவே, குபேரன் கோபத்துடன் மாணிசாரனென்ற மஹாயக்ஷனை யனுப்ப, அவன் சென்று அநேக ராக்ஷசவீரர்களை யடித்தான். உடனே தசக்ரீவன் சினந்து அவனுடன் யுத்தம் செய்து அவனைப் புறமுதுகுகாட்டி ஓடும்படி செய்தான். அதன் பின் குபேரன் கதாயுதத்தைக் கையிலெடுத்துக்கொண்டு தசக்ரீவனை யெதிர்த்து, அவனைநோக்கி, 'மூத்தவன் பூஜிக்கத்தக்கவனாதலால் அவனை யெதிர்ப்பது பாபமல்லவா! அந்தப் பாபத்தைச் செய்த நீ நரகத்தை யடைவாய்' என்றுகூறி யுத்தம்செய்து மாரீசன்முதலிய சகல வீரர்களையும் பிரமிக்கச்செய்தான். அதனால் கோபங்கொண்டு தசக்ரீவன் கோரயுத்தம்செய்ய, குபேரன் ஆக்னேயாஸ்திரத்தைப் பிரயோகித்தான். அதை தசக்ரீவன் வாருணத்தால் தடுத்துவிட்டு மாயாபலத்தை அவலம்பித்து அவனைப்

பிரமிக்கச்செய்து சிறந்ததானவொரு அஸ்திரத்தால் அவன் தலையிலடிக்க; குபேரன் கீழே விழுந்தான். அப்பொழுது உத்தமநிதிகள் அவனை ஆஸ்வாஸப்படுத்துவதற்காக அவனை நந்தவனத்திற்குக் கொண்டுபோகவே, ராவணன் புஷ்பகவிமானத்தை அபகரித்துக்கொண்டு சென்றான். பிரம்மாவால் நிர்மாணம் செய்யப்பட்டு சகலத்தையும் அளிக்கக்கூடியதான அந்த விமானத்தையடைந்த ராவணன் திக்விஜயத்திற்குப் புறப்பட்டான். இவ்விதம் அவன் விமானத்தில் சென்றுகொண்டிருக்கையில் திடீரென்று அது நிற்கவே, ராவணன் அது நின்ற காரணத்தை வினவினான். அப்பொழுது மாரீசன், 'குபேரனுக்குத் தவிர மற்றவர்களுக்கு இது நகராதுபோலும்' என்று சொல்லிக்கொண்டிருக்கையில் நந்திகேச்வரன் பிரத்தியக்ஷமாகி, 'இவ்விடத்தில் பகவானான சங்கரர் பார்வதி தேவியுடன் விளங்குகிறார். ஆதலால் இங்கு யாரும் செல்லமுடியாது' என்றுரைத்தார். இதைக்கேட்ட ராவணன் கோபங்கொண்டு, 'யாரது சங்கரனென்பது?' என்று சொல்லிக்கொண்டு விமானத்தை விட்டிறங்கி அந்த இடத்திலிருந்த பர்வதத்தினடிபாகத்தை யடைய, அங்கு நந்தியையும், அவருக்குச் சமீபத்தில் விளங்கும் பகவானையும் பார்த்தான். அப்பொழுது ராவணன் வானரமுகத்தையுடைய நந்தியைக் கண்டு பரிஹஸித்ததால், நந்தி கோபங்கொண்டு, 'நீ என்னைப் பரிகாசஞ்செய்ததால், என் ரூபங்கொண்ட வானரர்கள் உண்டாகி உன் வம்சத்தை யழிக்கப்போகிறார்கள். மேலும் விஷ்ணுவானவர் தேவர்களால் பிரார்த்திக்கப்பட்டு தசரதராஜ குமாரனை ராமனைகப் பிறந்து உன்னையழிக்கப் போகிறார்' என்று சபித்தார். தேவர்களெல்லாம் அதைக்கேட்டு சந்தோஷித்தனர். ஆனால் ராவணன் அதையெல்லாம் பொருட்படுத்தாமல், 'என் விமானம் செல்வதற்குத் தடையாயிருக்கும் இந்தப் பர்வதத்தைப் பிடுங்கி எறிகிறேன். என் பிரபாவத்தை நீர் இப்பொழுது தெரிந்துகொள்ளும். பிரபாவத்துடன் பகவானாக இங்கு விளங்கும் உமக்கு இப்பொழுது உண்டாயிருக்கும் ஆபத்துத் தெரியவில்லை' என்று கூறிக்கொண்டு தன் கைகளால் அப்பர்வதத்தைப் பிடித்து அசைக்க அது சலித்தது. பர்வதம் முழுதும் நடுங்க, எல்லோரும் சலித்தார்கள். பார்வதியும் சலித்துப் பகவானைக் கட்டிக்கொண்டாள். அதைக்கண்ட ஹரனை பகவான் மந்தஹாசஞ்செய்து தனது கால் விரலின் நுனியால் அந்த மலையைக் கொஞ்சம் விளையாட்டாக அமுக்கிவிட, ராவணன் கைகள் முழுவதும் அடியில் அகப்பட்டுக்

கொண்டது. அப்பொழுது ராவணன் லோகம் நடுங்கும்படி கத றினான். பிறகு அவன் ஸாமஸ்துதிகள் பலவற்றால் ஆயிரவரு ஷங்கள் பரமசிவத்தை ஸ்தோத்திரம் செய்து பிரார்த்திக்க, பக வான் கருணையடைந்து அவனைப்பார்த்து, 'உனக்கு இதுமுதல் ராவணன் என்ற பெயருண்டாகட்டும்' உன் ஸ்தோத்திரத்தால் சந்தோஷித்தேன். உன் பௌருஷத்தைக் கொண்டாடினேன்' என்று கூறினார். அப்பொழுது ராவணன், உமக்கு என்னிடம் பிரீதியிருந்தால் எனக்கு ஆயுதம்கொடும்' என்று கேட்க, பகவான் அவனுக்குச் சந்திரஹாஸமென்ற ஒரு கத்தியைக் கொடுத்தனுப் பினார். அவனும் அவரைச் சேவித்து விமானத்திலேறிக் கொண்டு சென்றான்.

இவ்விதம் செல்லும்போது ஹிமவத்பர்வத அடிவாரத்தில் தவம் செய்துகொண்டிருந்த ஒரு ஸ்திரீயைக் கண்டு, காமாதிக்கத் தையடைந்து, அவளை நோக்கி, 'நீயார்? யாருடைய புத்திரி? என் தவம் செய்கிறாய்? என்று கேட்க, அவள் அவனுக்கு அர்க்கியபாத் தியாதிகளைக் கொடுத்து, 'நான் பிருஹஸ்பதி புத்திரனான குசத் வஜருடைய புத்திரி, அவர் வேதாத்யயனம் செய்துகொண்டிருக் கையில் அவர் வாக்கிலிருந்து வெளிவந்தவள். என்னை விஷ்ணு வுக்குத் தத்தம் செய்யவேண்டுமென்பது பிதாவின் எண்ணம். ஆதலால் என்னை அநேகர் வரித்தும் என் பிதா கொடுக்கவில்லை. அதனால் கோபங்கொண்ட தம்பு என்ற ஒரு அசுரன் இரவுகாலத் தில் என்பிதா தூங்கும்போது அவரைக் கொன்று விட்டான். உடனே என் மாதாவும் தன் பர்த்தாவை ஆலிங்கனம் செய்து கொண்டு அக்னிப்பிரவேசம் செய்துவிட்டாள். என் பிதாவின் சத்தியத்தை நிறைவேற்றுவதற்காக நான் விஷ்ணுவை என் பர்த் தாவாக வரித்துத் தவம் செய்கிறேன். நீ என்னை யறிந்தாகிவிட் டது. நீ இனிச் செல்லலாம்' என்று சொன்னாள். அதுகேட்ட ராவணன் தன் பிரதாபத்தைச் சொல்லி விஷ்ணு தனக்கு நிகரில் லையென்றுகூற, அவள் 'விஷ்ணுவைத் தூஷிக்காதே' என்றுரைத் தாள். உடனே ராவணன் எழுந்து அவள் கேசபாசத்தைப் பிடித்து இழுக்க, அந்த வேதவதியானவள் உடனே தன் கையை வீசினாள். அக்கையானது கத்தியாகி அந்தக் கேசபாசத்தை வெட்டிவிட்டது. வெட்டுப்பட்ட கேசத்துடனிருந்த அந்தத் தேவி ராவணனை நோக்கிக் கோபத்துடன், 'என் சாபத்தால் உன் தவம் அழியட்டும். உன்னால் தொடப்பட்டதால் இந்தசரீரத்துடன்

நானிருக்கமாட்டேன். உன்னை யழிப்பதற்குக் காரணமாய் நானே பெண்ணாகவந்து பிறக்கிறேன்' என்று சபித்து, அக்னிப் பிரவேசம் செய்தாள். பிறகு அவள் ஜனகபுத்திரியாக ஜனித்தாள். ஜனகன் பூமியைக் கலப்பையால் சோதனை செய்தபொழுது பூமியிலிருந்து அக்கலப்பையால் எடுக்கப்பட்டு வெளிவந்தவளாதலால் அவள் ஸீதையெனப் பெயர்பெற்றாள்.

வேதவதியிடம் சாபத்தைப் பெற்றபின் ராவணன் மேலும் சஞ்சரித்துக்கொண்டிருக்கையில் மருத்துமஹாராஜா யாகஞ்செய்யுமிடத்திற்கு வர, அவன் வருவதைக்கண்ட தேவர்களில் இந்திரன் மயில்ரூபத்துடனும், யமன் காக்கைரூபத்துடனும், குபேரன் ஓணான்ரூபத்துடனும், வருணன் ஹம்ஸரூபத்துடனும் மற்றும் பல தேவர்கள் வேறுபல ரூபங்களுடன் அவ்விடத்தை விட்டு ஓடிவிட்டனர். ராவணன் அங்குசென்று மருத்துராஜனிடம் தன் பிரதாபத்தைச் சொல்லி யவனை யுத்தத்திற்கழைத்தான். அவர் அவனைத் திரஸ்கரித்துப் பேசி அப்பொழுதே யவனை யழிப்பதாகச்சொல்லி யுத்தத்திற்குப் புறப்பட, அதுகண்ட அவர் குருவான ஸம்வர்த்தர் என்ற ரிஷி அரசனைத் தடுத்து, 'பரமசிவசம்பந்தமான இந்த யாகத்தில் சமாப்தி இல்லாமல் போகக்கூடாது. யாகத்தில் தீக்ஷிதனாயிருப்பவனுக்குக் கோபம் கூடாது. நீ என் வார்த்தையைக் கேட்டு சண்டையிடாமல் திரும்பலாம். இந்த ராவணனை இப்பொழுது வெல்வது சற்று சந்தேகம்' என்று சொல்லத் தன் குருவாக்கியத்தைக்கொண்ட அரசன் திரும்பிவிட்டான். உடனே ராவணன் அங்கு வந்திருந்த பலரிஷிகளைப் பக்ஷித்துவிட்டுச் சென்றான். ராவணனுக்குப் பயந்துபல ரூபங்களில் ஓடின தேவர்கள் தங்களைக் காத்த ரூபங்களுக்குப் பலவரங்களைக் கொடுத்தனர். இந்திரன் மயிலுக்குச் சர்ப்பத்தினிடம் பயமில்லாதிருக்கவும், மயிலின் தோகையில் ஆயிரம் கண்களையடையவும் அருள்செய்தான். யமன் காக்கைக்கு வியாதியில்லாமல் மனுஷ்யர்களால் அடிபட்டால்தான் வதமென்றும் வெகுகாலம் விளங்கக்கூடியது என்றும் பிதிர்தேவதைகள் காக்கைமூலம் சாப்பிட்டுத் திருப்தியடைவார்களென்றும் வரமளித்தான். வருணன் ஹம்ஸத்திற்கு அதுமுதல் சரீரம் சந்திரமண்டலம்போல் வெளுப்பாயிருக்கவும் தன் சரீரம்போல் காந்தியுடனிருக்கவும் அருளினான். குபேரன் அதுமுதல் காட்டோணானுக்குத் தங்கமயமான வர்ணமுண்டாகவும், திரவியத்துடன் கூடின அழிவில்லாத

தலையை யடையவும், சத்ருருக்களிடமிருந்து தப்பித்துக்கொள்வதற்காக அது தானிருக்குமிடத்துக்குத் தகுந்த வர்ணத்தையடையவும் வரமளித்தான். பிறகு தேவர்கள் யாகசாலைக்குத் திரும்பி வந்து யாகத்தைப் பூர்த்திசெய்வித்து, மருத்துராஜனால் அனுமதி கொடுக்கப்பட்டுச் சென்றனர்.

இதுநிற்க, திக்விஜயம் செய்துகொண்டு சென்ற ராவணன் அநேக அரசர்களை வென்றான். பல வீரர்களைக்கண்டு 'என்னால் தோல்வியடைந்ததாகச் சொல்லுங்கள் விட்டுவிடுகிறேன்' என்று கூற, அவர்களும் அவ்விதமே ஒத்துக்கொண்டு அவனிடமிருந்து அகன்றனர். துஷ்யந்தன், ஸுரதன், காதி, கயன், புரூரவஸ் இவர்களும் ஜயிக்கப்பட்டதாக ஒத்துக்கொண்டு அவனிடமிருந்து விலகினார்கள். இவ்விதம் சகல அரசர்களையும் ஜயித்துக்கொண்டு ராவணன் மிகுந்த கோபத்துடன் அயோத்தியையடைந்து அனரண்ய மஹாராஜனை யுத்தத்திற்குக் கூப்பிட, அவரும் யுத்தம் செய்து மாரீசன், சுகன், பிரஹஸ்தன் முதலிய எல்லோரையும் அடித்தார். அதுகண்ட ராவணன் கோபங்கொண்டு எண்ணூறு பாணங்களால் அனரண்யராஜனை யடித்து, தன் கையால் ஓங்கி ராஜன் தலையிலறைந்தான். அந்த அடிபட்ட அரசன் கீழே விழவே, ராவணன் அவனைப் பரிஹசித்தான். அப்பொழுது அரசன், 'ராவணா, நீ, இவ்விதம் பரிஹசிப்பது அதர்மம். சுத்த வீரர்களான க்ஷத்திரியர்கள் ஜயித்தால் உலகத்தை யாள்வார்கள். அடிபட்டால் வீரஸ்வர்க்கமடைவார்கள். மரணமடைகிறோமே என்ற கவலை எப்பொழுதும் க்ஷத்திரியர்களுக்குக் கிடையாது. நீ என்னைப் பரிஹஸித்ததால் நான் உன்னைச் சபிக்கிறேன். நான் சிறந்த தபஸ் செய்திருப்பேனேயாகில், அக்னியை உபாஸித்திருப்பேனேயாகில், பிரஜைகளைத் தர்மத்துடன் பரிபாலித்திருப்பேனேயாகில் என் வாக்கியம் பொய்யாகாது. இந்த வமிசத்தில் தசரதனுக்குக் குமாரனாக ராமன் என்பவன் பிறந்து உன் உயிரை வாங்குவான்' எனச் சபித்து புண்ணியலோகத்தை யடைந்தான். அப்பொழுதே தேவர்கள் மிகுந்த சந்தோஷமடைந்தனர். இந்தச் சாபத்தையடைந்தபின் ராவணன் மேலும் சஞ்சரித்துக்கொண்டு பூலோகத்தில் பல மனிதர்களைக் கொன்றுவருகையில் நாரதரைக் கண்டு நமஸ்கரித்தான். அப்பொழுது நாரதர், 'ராவணா, நீ எல்லோரையும் ஜயித்திருப்பதைக் கேட்க மிகவும் சந்தோஷமடைகிறேன். ஆனால் வியாதி முதலியவற்றால் மரணமடையும் கேவலம்

இந்த மனுஷ்யர்களை ஏன் கொல்கிறாய்? இவர்களுக்கு மிருத்யுபயமுண்டு. ஆதலால் நீ இவர்களைவிட்டு, யமலோகம்சென்று யமனை வெல்வதுதான் சிறந்தது, நீ அவனைவென்றால் உலகமுழுவதையும் வென்றதாக ஏற்படும்' என்று கூற ராவணன் 'இப்பொழுதே செல்கிறேன். எமன் எங்கிருக்கிறான்? யமபுரம் எங்கிருக்கிறது' என்று ஆவலாய்க் கேட்டான். நாரதர் 'தெற்கிலிருக்கிறது' என்று கூற அத்திக்கில் சென்றான். அதற்குள் நாரதர் யமனிருப்பிடத்தையடைய, யமன் அவரைப் பூஜித்து, 'என்ன விசேஷம்' என்று கேட்டான். 'ராவணன் உன்னுடன் யுத்தம்புரியவருகிறான் என்று இதைச் சொல்லவே நான் வந்தேன்' என்று நாரதர் புகன்றார். அதுகேட்ட யமன் 'சரி' என்று சொல்லி, விமானத்தில் வந்த ராவணனைக் கண்டான், ராவணன் நரகாதிகளில் பீடிக்கப்படும் பேர்களை விடுவிக்க, அங்கிருந்த யமபடர்களான வீரர்களுக்கும், அவனுக்கும் யுத்தம் உண்டாயிற்று. அதில் எல்லோரும் ஒன்றாகச்சேர்ந்து ராவணன் மார்பிலிருந்து கவசத்தைப்பேதித்து அவன் பிரமிக்கும்படி அடித்தார்கள். ராவணன் தன்ஞாபகத்தையடைந்ததும் வில்லில் பாசுபதாஸ்திரத்தைப் பூட்டிக்கொண்டு அதனால் எல்லோரையும் அடித்துவிட்டுக் கர்ஜித்தான். அதுகேட்ட யமன் கோபங்கொண்டு யுத்தத்திற்குப் புறப்பட்டான். பாசும், முத்கரம் இவைகளுடன் மிருத்யுதேவதை முந்திக்கிளம்ப, அதனுடனும் காலதண்டம் ஒருபக்கம் மனுஷ்யரூபமாய் வர, மற்றொரு பக்கம் காலபாசங்கள்வர யமன் யுத்தத்திற்கு வந்தான். அவனைக்கண்ட ராவணனது மந்திரிகள் பயந்தோடினார்கள். ராவணன் சலிக்காமல் யமனை எதிர்க்க, யமன் அவனைப் பல ஆயுதங்களால் அடித்தான். ராவணனும் யமனைப் பல பாணங்களாலடித்தான். இவ்விதம் இருவருக்கும் ஏழுநாட்கள் அஹோராத்ரம் மஹாயுத்தம்நடந்தது. ராவணன் மிருத்யுதேவதையை நான்குபாணங்களாலும், சாரதியை ஏழுபாணங்களாலும் யமனைப் பதினாயிரம் பாணங்களாலுமடித்தான். அப்பொழுது யமன் மஹாகோபத்தையடைந்தான். அச்சமயம் பக்கத்தில் மிருத்யு தேவதையும், காலபுருஷனும் விளங்கினார்கள். மிருத்யுதேவதை யமதர்மராஜனை நோக்கி, 'நீர் என்னை இப்பொழுது அனுப்பினால் நான் அவனைக் கொன்றுவருகிறேன். என்னால் அநேகர் அழிக்கப்பட்டிருக்கிறார்கள். ஹிரண்யகசிபு, நமுசி, சம்பரன், விஸந்தி, தூமகேது, வைரோசனனை பலி, தைத்யராஜனான தம்பு, விருத்திரன், பாணன் முதலிய அசுரர்களும், அநேக ராஜரிஷிகளும், கந்தர்வர்

களும், உரகர்களும், பந்நகர்களும், தைத்யர்களும், யக்ஷர்களும், அப்ஸரகணங்களும், ரிஷிகளும், சமுத்திரத்துடன் கூடிய பூமி முதலியனவும் என்னால் பார்க்கப்பட்டு அழிவை யடைந்திருக்கின் றனர். அப்படியிருக்க, இந்த அற்பன் எனக்கு எம்மாத்திரம்' எனக்கூற, யமன் 'சற்றுபொறுங்கள்' எனச்சொல்லி கோபத்து டன் காலதண்டமான ஆயுதத்தைக் கையிலெடுத்தான். இவ்விதம் ராவணவதத்தில் இச்சைகொண்டு கையில் காலதண்டத்துடன் விளங்கும் யமனிடம் பிரம்மதேவன் வந்து, 'உத்தம, இந்த நிசா சரன் இப்பொழுது கொல்லமுடிந்தவனல்லன். நானிவனுக்கு வர மளித்திருக்கிறேன். என் வாக்கியத்தை தேவனாவது, மனுஷ்ய னாவது தள்ளமுடியாது. இந்தக் காலதண்டம் ஏற்கனவே என் னால் மிருத்யுதேவதையை முன்னிட்டுக்கொண்டு சிருஷ்டிக்கப்பட் டது. இது ராவணன் சிரத்தில் விழுந்தால் அவன் ஜீவிக்கமாட் டான். இது விழுந்து அவன் பிழைத்தால் என்வரம் இரண்டிடங் களிலும் பொய்யாகும். ஆதலால் நீ என் வார்த்தையைக் கேட்டு என்னைச் சத்தியவாதியாகச் செய்துகொண்டு திரும்பு' என்று கூற, யமன் அவ்வாக்கியப்படி அப்படியே மறைந்துவிட்டான். உடனே ராவணன் அங்கு தன் பெயரை ஸ்தாபித்து அவ்விடத் தைவிட்டு வருணலோகத்தை யடைந்து அங்கிருந்த காலகேய நிவாதகவசர்கள் முதலியவர்களுடன் ஒருவருஷம் யுத்தம்செய்ய, பிரம்மதேவர் வந்து சமாதானம் செய்து யுத்தம் செய்யாமல் நிறுத்தினர். ராவணன் அந்தச் சண்டையில் நூறு நிவாதகவசர் களையும், நானூறு காலகேயர்களையும் கொன்று, யுத்த ஆவேசத் தில் அறியாமல் தனது மாப்பிள்ளையான சூர்ப்பனகியின் பர்த்தா வையும் கொன்றான். பிறகு அவன் அவ்விடத்தை விட்டகன்று வருணனது இருப்பிடத்தை யடைந்து, தான் யுத்தத்திற்கு வந்தி ருப்பதாய்ச் சொல்லியனுப்ப. வருண புத்திரர்கள் யுத்தம்செய்து மாண்டனர். அப்பொழுது வருணனுடைய மந்திரி ராவணனை நோக்கி, 'வருணன் பிரம்மலோகம் சென்றிருக்கிறார். அவர் இல் லாதபோது நீர் இவ்விதம் இவர்களை யடிப்பதில் உபயோகமில்லை. ஆதலால் நீர் செல்லலாம்' என்றுகூற, ராவணன் அங்கு தன் பெயரை ஸ்தாபித்து அவ்விடமிருந்து புறப்பட்டு அச்மநகரத்தில் சஞ்சரித்துக்கொண்டிருக்கையில் அற்புதமானதொரு கட்டடத் தைக்கண்டு மந்திரியைப் பார்த்து 'இது யாருடைய கட்டட மென்றறிந்துவாரும்' என்றுகூற, அவன் சென்று அங்கு ஒரு மஹாபுருஷனைக் கண்டு ராவணனிடம் சொன்னான். ராவணன்

விமானத்தை விட்டிறங்கி வந்து முஸலாயுதத்துடன் அங்கு நிற்கும் மஹாபுருஷனைக் கண்டு ஹிருதயம் சலித்துச் சற்று யோசித்துக்கொண்டு நின்றான். அப்பொழுது பகவான் அவனை நோக்கி, 'ஏ, ராக்ஷஸ, என்ன யோசனை செய்கிறாய்? நான் உன்னுடன் யுத்தம் செய்கிறேன். நீ என்னுடன் யுத்தம் செய்கிறாயா? அல்லது உள் இருப்பவருடன் யுத்தம் செய்கிறாயா? என்று கேட்க, பகவானைக்கண்டு பயந்த ராவணன் சற்று தைரியங்கொண்டு, 'உள்ளே யாரிருக்கிறார்கள் சொல்லும். அதையறிந்துகொண்டு நான் உம்முடனாவது அவருடனாவது சண்டை செய்கிறேன்' என்றான். உடனே பகவான், 'இதரர்களால் வெல்லமுடியாத தானவராஜனை பலிசக்கரவர்த்தி உள்ளே தபஸ் செய்துகொண்டிருக்கிறான். அவனுக்கு எவராலும் பயம்கிடையாது. அவனுடன் யுத்தம் செய்ய விரும்பினால் உள்ளேசெல்லலாம்' என்று கூற, ராவணன் உள்ளேசென்று அட்டகாசம் செய்வதைக்கண்ட மகாசூரனை பலிசக்கரவர்த்தி, 'ஏ ராவணா, உனக்கு என்னவேண்டும்? எதற்காக இங்குவந்தாய்?' என்று கேட்டான். ராவணன் அவனை நோக்கி, 'யாரோ விஷ்ணு என்பவர் உம்மைக் கட்டிவிட்டதாக நான் கேள்விப்பட்டேன். உம்மை அதிலிருந்து விமோசனம் செய்ய நான் வந்தேன்' என்று கூறினான். பலி அதைக் கேட்டு மந்தஹாசம்செய்து, 'ஏ, ராவணா, சொல்கிறேன் கேள். வாயிலில் நீலமேகச்யாமளரூபி ஒருவர் எப்பொழுதும் நின்றுகொண்டிருக்கிறாரே அவரால் சகலரும் அடக்கப்பட்டிருக்கின்றனர். விருத்திரன், தநு, சுகன், சும்பன், நிசும்பன், சம்பு, காலநேமி, பிரஹ்லாதன், பலி, காலகேயன், தாரகன், முசுகுந்தன், ஹிரண்யாக்ஷன், மது, கைடபன், தூமன், சம்பரன், யமளார்ச்சுனர்கள், கம்சன் (பாகவத கம்சனல்ல) முதலிய யாவரும் அவரால் அடக்கப்பட்டிருக்கின்றனர். பரமாத்மாவே அவர். மூன்றுகர்மாக்களையுடையவர். நினைத்த ரூபத்தை யெடுக்கும் மஹாபுருஷர். அவர் ஸர்வதந்திர ஸ்வதந்திரன் என்றுசொல்லி இதோ என் பக்கத்திலிருக்கும் இந்தச் சக்கரத்தைக் கொஞ்சம் அப்புறப்படுத்து' என்று சொன்னான். ராவணன் கர்வத்துடன் இருபது கைகளால் பிறட்டிப்பார்த்தும் அதை அசைக்க முடியவில்லை. அவ்விதம் சற்று தூக்கினபோது முறிக்கப்பட்ட மரம்போல் கீழே விழுந்து இரத்தத்தைக் கக்கினான். முகூர்த்த காலத்திற்குப் பின் பிரக்ஞையடைந்து லஜ்ஜையுடன் நிற்கும்ராவணனைப்பார்த்து பலி, 'அப்பா, இங்குவா, இதோ பார். இது என் மூதாதையான ஹிரண்யகசிபு

தரித்திருந்த குண்டலம். யுத்தகாலத்தில் அவர் பகவானால் அடிபட்டபோது இந்த பாகம் இங்கு விழுந்தது. அந்த ஹிரண்ய கசிபு பகல் இரவு முதலிய காலத்திலும், ஆயுதங்களாலும் வதமில்லாத பலவரங்களைப் பெற்றிருந்தார். அப்படிப்பட்ட மகா வீரனை இந்த பகவான் பிரஹ்லாதனுக்காக ஸந்தியாகாலத்தில் தன் நகங்களால் கிழித்துக்கொன்று, அவனிருந்த இடந்தெரியாமல் செய்துவிட்டார். அப்படிப்பட்ட மஹாபுருஷர் சர்வ உலகத்தை உண்டுபண்ணி தன்வசத்தில் வைத்துக்கொண்டிருப்பவர் என்றுரைக்கக்கேட்ட ராவணன், 'நான் அவரை எதிர்த்து யுத்தம் செய்வேன்' என்றுகூறி கோபத்துடன் வெளியேவர, அதைக் கண்ட பகவான், 'இவனுக்கு இப்பொழுது வதகாலம் அல்ல' என்றறிந்துபிரம்மாவினுடைய வார்த்தையில் பிரியம்கொண்டு உடனே மறைந்துவிட்டார். ராவணன் அதைப்பார்த்து கர்ஜனைசெய்துவிட்டு, வருணலோகத்திலிருந்து கிளம்பி சூரியலோகம் சென்று பிரஹஸ்தனை நோக்கி, "நீ சூரியனிடம் சென்று 'யுத்தத்திற்கு வருகிறீரா' என்று கேட்டுவா" என்றனுப்பினான். பிரஹஸ்தன் சென்று சூரியனைக் கேட்க, சூரியபகவான் தன் புத்தியால் யோசனைசெய்து, தனது துவாரபாலகன் மூலம் 'நான் ராவணனால் ஜயிக்கப்பட்டேன்' என்று கூறிவிடு என்று சொல்லியனுப்பக் கேட்ட ராவணன் ஜயமென்று கோஷித்துக்கொண்டு சந்திரலோகமடைந்து இரவுகாலத்தை மேருபர்வதத்தில் கழித்தான். பிறகு ஒருவன் விமானத்தில் மஹத்தான வைபோகத்துடன் செல்வதைக்கண்டு, பக்கத்திலிருந்த பர்வதரென்ற ரிஷியைப்பார்த்து 'இதுயார்' என்று வினவ, அவர், 'இவன் இக்ஷ்வாகுகுல திலகனான மாந்தாதா. இவன் சப்த தீவுகளையும் ஜயித்ததால் இவனுக்கு ஸப்தத்வீபாதிபதி எனப்பெயர். இவன் இப்பொழுது சுவர்க்கத்திற்குச் செல்கிறான். சுவர்க்கத்தை இச்சித்துச் செல்லுமிவன் யுத்தத்தை இச்சியான்' என்றார். ராவணன் 'இருக்கட்டும், பார்க்கலாம்' என்று கூறிவிட்டு உடனே மாந்தாதாவை எதிர்த்துக் கோரமான யுத்தம்செய்து, கடைசியில் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்தார். அதைக்க, மாந்தாதா பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகித்தார். அதனால் சகல லோகங்களும் கஷ்டப்படக்கண்ட புலஸ்தியர், காலவர் என்ற இரு ரிஷிகளும் வந்து இருவருக்கும் சமாதானம் செய்ய, அவர்கள் விலகிச்சென்றனர். பிறகு ராவணன் வாயுமார்க்கத்தில் எட்டுமார்க்கங்களைத் தாண்டி அங்கிருந்த ஆகாச கங்கையையும் அதற்குமேல் விளங்கும் சந்திரனையும் கண்டான். அச்சமயம்

அவனுடன் சென்ற ஸேனைகளெல்லாம் குளிரினால் விறைக்கக் கண்ட ராவணன் சிரமத்தையடைந்து கோபித்து இப்பொழுதே இவனை யழித்துவிடுகிறேன்' என்று கர்ஜித்தது கண்ட பிரம்மா அங்குவந்து, 'நீ இவனைக் கொல்லவேண்டாம். இவனால் உலகத்திற்கு க்ஷேமம் உண்டாகவேண்டியிருக்கிறது. இவனை விட்டுவிடு. உனக்கு மிருத்யுபயமில்லாத வரங்கொடுக்கிறேன்' என்றார். ராவணன் 'கொடும்' என்றுகேட்க, பிரம்மா அவனுக்கு சிவாஷ்டோத்திரம் என்ற மந்திரத்தை யுபதேசித்து (இப்பொழுது நாம் அனுஷ்டிக்கும் சிவாஷ்டோத்திரமல்ல, உத்தரகாண்டத்தில் வேறு இருக்கிறது) 'நீ இதை எப்பொழுதும் உச்சரித்துக்கொண்டிருக்கவேண்டும். விட்டுவிட்டால் மரணம் வந்துவிடும்' என்றுகூறி அதை ஜபிப்பதற்கு ஒரு சூத்திரத்தையும் கொடுத்துச் சென்றார். பிறகு ராவணன் அந்த லோகங்களில் இருந்த சகல ரிஷிகள், தேவர்கள், தானவர், கந்தர்வர் முதலியவர்களையடித்து அவர்களது பெண்டுகளை யபஹரித்துக்கொண்டுவந்தான். அந்த ஸ்திரீகள், 'நீ பெண்களை இழுப்பதால், உனக்குப் பெண்பிள்ளை மூலமாகவே வதம் உண்டாகட்டும்' என்று அவனைச் சபித்தனர். அவர்களுடன் ராவணன் லங்கையில் பிரவேசிக்க, தன் பர்த்தா ராவணனால் கொல்லப்பட்டதையறிந்த சூர்ப்பநகா தேவி, அவனிடம் வந்து கதறினாள். ராவணன் அவளைச் சமாதானம்செய்து, 'நான் யுத்தவெறியில் தெரியாமல் கொன்றுவிட்டேன். நீ வருந்தாதே. தமது சிறியதாயார் பிள்ளையான கரன் தனது 14000 வீரர்களுடனும், தூஷணனுடன் ஜனஸ்தானத்தில் வஸிக்கப்போகிறான். நீ அவனுடன் கூடஇரு. அவன் உன் சொற்படி கேட்பான்' என்று சொல்லிக் கரனை ஸகலவீரர்களுடனும் ஜனஸ்தானத்திற்கனுப்பினான்.

பிறகு ராவணன் லங்காபட்டண உபவனத்தில் பிரவேசித்து, இந்திரஜித்து நிகும்பிலையில் யாகம் செய்வதுகண்டு, 'என்ன இது?' என்று கேட்க, சுக்கிராச்சாரியார், உன்பிள்ளை அநேக யாகங்களைச்செய்து, இப்பொழுது மஹேஸ்வர ஸம்பந்தமான ஒரு மஹாயாகம் செய்கிறான். இது முடிந்ததும் இவனுடைய ஸர்வவைபவத்தை நீர் பார்க்கலாம்' என்று சொன்னார். இது வேண்டாமென்று ராவணன் தடுத்துப் பிள்ளையை யழைத்துக்கொண்டு சென்றான். அதன்பின், ராவணனால் அபஹரித்துக்கொண்டு வரப்பட்ட சகல ஸ்திரீகளையும் கண்டு அவர்களின் மனைவியாவத்

தையுமறிந்த விபீஷணன் ராவணனிடம் வந்து, 'நீரென்ன அதர்ம
மான காரியத்தைச் செய்கிறீரே. குலம், கீர்த்தி இவைகளை நாசம்
செய்யக்கூடியதான பரதாராபஹரணம் செய்யலாமா? ஏ, கெட்ட
புத்திக்காரரே, நீர் பரதாரங்களை யபஹரித்த பாபத்தின் புலன்
ஏற்கனவே கிடைத்துவிட்டது. நீர் இப்படி அதர்மம் செய்ததால்
நான் ஜலத்திற்குள் தபஸ் செய்யும்போது, இந்திரஜித்து நிகும்பி
லையில் யாகம்செய்யும்போது, கும்பகர்ணன் நித்திரையிலிருக்கும்
போது மது என்ற அசுரன் நமது ஊரில் பிரவேசித்து, மந்திரிக
ளான ராக்ஷஸ சிரேஷ்டர்களை அடித்துவிட்டு, உனது அந்தப்புரத்
தில் தூங்கிக்கொண்டிருந்த நமது பாட்டனரான மால்யவானு
டைய பெண் அனலையின் புத்திரியான கும்பீனஸியைக் கொண்டு
போய்விட்டான். ஆனால் நாம் இதற்காகக் கோபிப்பதில் பய
னில்லை. அவளுக்குச் சகோதரர்களான நாமே அவளை யவனுக்
குக் கொடுத்தல் தகும். ஆதலால் இது பொறுக்கக் கூடியதே'
என்று கூறினன். அதுகேட்ட ராவணன் கோபங்கொண்டு மது
புரத்திற்கு யுத்தம்செய்யச் சென்றான். இவன் வருவதையறிந்த
கும்பீனஸி வந்து, அவனை நமஸ்கரித்தாள். ராவணன் அவளை
ஆசீர்வதிக்க, அவள் 'உன் வாக்கியத்தைக்காப்பாற்று. வைதவ்ய
மென்பது ஸ்திரீகளுக்கு மிகுந்த கஷ்டத்தைக் கொடுக்கக்கூடி
யது. ஆதலால் நீ என் பர்த்தாவைக் கொல்லக்கூடாது' என்று
வேண்டினள். ராவணனும் 'அப்படியே' என்று சொல்லி அவள்
கிருஹத்தையடைய, அப்பொழுது தூங்கிக்கொண்டிருந்த மது
எழுப்பப்பட, அவன் எழுந்து ராவணனை உபசரித்தான். பிறகு
ராவணன் ஒருநாள் அங்கு தங்கிப்பின் தேவலோகத்திற்குக் கிளம்
பினன். சகல சேனைகளுடன் கைலாச பர்வதத்தில் ராத்திரி
காலம் தங்கியபொழுது, ஸர்வாலங்கார வைபவத்துடன் செல்லும்
ரம்பையான அப்ஸரஸைக் கண்டு அவளைக்கூப்பிட்டான். அப்பொ
ழுது அவள், 'நான்குபேரன்பிள்ளையான நளகூபரனைநாடிச்செல்வ
தால், நான் உமக்கு நாட்டுப்பெண் முறைமை. ஆதலால் இது
உசிதமல்ல' என்று நியாயம் சொல்லித் தடுத்தும் கேளாமல்
ராவணன் அவளைப் பலாத்காரமாய் அனுபவித்து விட்டுவிட்டான்.
அவள் நளகூபரனிடம் சென்று முறையிட, நளகூபரன் 'ஏ,
ராவணா, இதுமுதல் நீ இஷ்டப்படாத எந்தப் பொது ஸ்திரீயை
யும் நீ பலாத்காரமாய் அனுபவித்தால், உடனே உனது தலை ஏழு
சுக்கலாய் வெடிக்கட்டும்' என்று சபித்தான். அதுகேட்டு தேவர்
கள் சந்தோஷமடைந்தனர். பதிவ்ரதைகளான ஸ்திரீகளும், பொது

ஸ்திரீகளும் களித்தனர். பிறகு ராவணன் இந்திரலோகமடைய இவன் வரவை யறிந்த இந்திரன் விஷ்ணுவைப் பிரார்த்திக்க, பகவான் இந்திரனைப் பார்த்து, 'நானிப்பொழுது யுத்தத்திற்கு வரவில்லை. இவன் வதத்திற்குக் காலத்தை நான் எதிர்பார்க்கிறேன். எனக்கு ஸபயம் தெரியும். அப்பொழுது நானேவந்து இவனைக் கொல்கிறேன். நீ இப்பொழுது செல்'' என்று கூறிமறைந்தார். அதன்பின் இந்திரன் சகல வீரர்களுடன் ராவணனை எதிர்த்தான். கோரமான யுத்தம் நடந்தபொழுது அஷ்டவஸுக்களில் எட்டாவது வஸுவான ஸாவித்திரனென்பவன் ராவணன் பாட்டனான சுமாலியை எதிர்த்து கதாயுத்தத்தால் அவனைக் கொன்றான். உடனே மேகநாதன் மாயாபலத்தை அவலம்பித்துச் சகலரையுமடிக்க, இந்திரன் ராவணனை எதிர்த்து, அவனைப் பிடிக்க நெருங்கினான். அப்பொழுது மேகநாதன் மாயையால் இந்திரனைக் கட்டிவிட்டு, 'சண்டைவேண்டாம்' என்று ராவணனிடம் சொல்லிச் சகலருடன் லங்கைக்குப் புறப்பட்டான். இவ்விதம் இந்திரன் இந்திரஜித்தால் கட்டுண்டு லங்கையிலிருப்பதைக் கண்ட தேவர்கள் பிரம்மாவிடம் முறையிட, பிரம்மா ராவணனிடம் வந்து இந்திரனை விட்டுவிடும்படி சொன்னார். அப்பொழுது இந்திரஜித்து வரம் கேட்க, அவர் அவனைநோக்கி, 'நீ நிகும்பிலையில் யாகம் செய். அது நிறைவேறிவிட்டால் யாராலும் உன்னை வெல்லமுடியாது. ஆனால் மத்தியில் பங்கம் செய்யப்பட்டால், எந்த சத்ருவால் பங்கம் செய்யப்படுகிறதோ அவனால் உனக்கு மரணம்' என்று வரம்கொடுத்து இந்திரனை யழைத்துக்கொண்டு வந்தார். வரும்போது பிரம்மா இந்திரனிடம் 'நீ அகல்யையை யடைந்தபோது கௌதமரால் கொடுக்கப்பட்ட சாபம் இது' என்று தெரிவித்து, வைஷ்ணவஸம்பந்தமான அச்வமேத யாகத்தைச் செய்யச்சொல்ல, அவனும் அதைச் செய்து பரிசுத்தனாகி அற்புதபிரபாவத்துடன் தேவலோகமடைந்தான்.

கொஞ்சகாலத்திற்குப் பிறகு ஒருநாள் ராவணன் மந்திரிகளுடன் மேற்கு சமுத்திரக்கரையி லிருக்கும்போது அங்குள்ள ஒரு தீவில் அற்புதப் பிரபாவத்துடன் விளங்கும் ஓர் மஹாபுருஷனைக் கண்டு, யுத்தத்திற்குக் கூப்பிட, பகவான் அதைக் கண்டு, அவனது கர்ஜனையையும் கேட்டு, கையால் மெதுவாக் அவனைத் தட்டவே, அவன் கீழேவிழுந்து மூர்ச்சித்தான். பகவான் அங்கிருந்து பிலவழியாய் மறைந்தார். சற்றுநேரம் கழித்து எழுந்த

ராவணன் மந்திரிகளை நோக்கி, 'அவரெங்கே' என்று கேட்க, அவர் பிலத்தில் மறைந்த விஷயத்தை அவர்கள் சொன்னார்கள். வரபலமுள்ள ராவணன் மட்டும் உள்ளே சென்று பார்க்க, லக்ஷ்மியுடன் ஸர்ப்பத்தில் சயனித்துக்கொண்டிருக்கும் பகவானையும், அவருடனிருக்கும் சகல தேவர்களையும் கண்டான். உடனே காமத்தால் லக்ஷ்மியை அபஹரிக்கச் செல்ல, பகவானுடைய ச்வாஸவேகத்தால் அடிபட்டு விழுந்தான். அப்பொழுது பகவான் அவனை நோக்கி, 'பிரம்மதேவ வரத்தால் உனக்கு இப்பொழுது வதமில்லை. நீ செல்லலாம்' என்றுசொல்ல, ராவணன் எழுந்து அஞ்சலி செய்துகொண்டு, 'நீர்யார்?' என்றுகேட்டுப்பின், 'எனக்கு மரணம் கிடையாது. ஒருவேளை இருந்தால் உம்மாலேயே ஏற்படட்டும்' என்று கூறி வெளியே வந்தான்" என்று இவ்விதம் அகஸ்தியர் சொல்லிக்கொண்டிருக்கையில், ராகவன், 'ஏ மகர்ஷே, அந்த மஹாபுருஷன் யார்?" என்றுகேட்க, அகஸ்தியர், "ராகவ, அவர்தான் நாரனை கபில வாசுதேவமூர்த்தி. அந்த மூர்த்தி கோபத்தால் பார்த்தால் இந்த ராவணன் எரிந்து விடுவான். ஆனால் அவனுக்கு வதகாலமில்லாததால் அவர் அப்படிச்செய்ய இஷ்டப்படவில்லை. பிறகு ராவணன் லங்கையை யடைந்திருந்தான்" என்றார். இதைக் கேட்ட ராகவன், "மகர்ஷே, இப்படி ராவணன் உலகத்தை யடக்க, அவனைத்தடுக்க யாரும் சூரர்கள் அப்பொழுதில்லையா?" என்று கேட்க, அகஸ்தியர், "ராகவ, சொல்கிறேன் கேளும். ராவணன் வரத்தின் பலத்தால் அதிக கர்வமடைந்துவிட்டான். அப்படியிருக்க அவன் திக்குவிஜயம் செய்துகொண்டு வரும்போது மாஹிஷ்மதீ பட்டணத்தைப் பரிபாலித்த கார்த்தவீரியார்ஜுனனை எதிர்த்து யுத்தம்செய்ய, அவன் கோபித்துக் கதாயுதத்தைப் பிரயோகிக்க, அப்பொழுது வரப்பிரசாதமுள்ள அக்கதையால் ராவணன் சற்று பிரமித்திருந்தபொழுது கார்த்தவீரியார்ஜுனன் ராவணனைக் கட்டிக்கொண்டுபோனான். புலஸ்தியர் வந்து அவனை விடுவித்துவிட்டார். மேலும் அந்தகர்வம் அடங்காமல் வந்தபோது வாலியால் கட்டுப்பட்டு விடப்பட்டான்" என்றார் (வாலி கார்த்தவீரியார்ஜுனன் ச்வேதத்வீபப் பெண்டுகள் முதலிய சகலரையும்விட ராவணன் மகா பலிஷ்டன் என்ற விஷயத்தைச் சித்தாந்த புத்தகத்தில் பார்த்துக்கொள்ளவும்).

அதன்பின் ராகவன் அகஸ்தியரை நோக்கி, "இதோ எதிரிலிருக்கும் ஹனுமான் காலபுருஷனாலும், விஷ்ணுவாலும், பிரம்மா

வாலும், இந்திரனும், குபேரனும் அசைக்க முடியாதவனுயி ருக்கிறரே. இவர் பிரபாவத்தைச் சொல்லவேண்டும்" என்று கேட்க, அகஸ்தியர், "ராகவா, மேருபர்வதத்தில் கேஸரியான வானரவீரன் ராஜ்யபரிபாலனம் செய்ய, அப்பொழுது ஆஞ்சனு தேவியானவள், கேஸரி சம்பசாஸன வதத்திற்குச் சென்றிருந்த சமயம், பூர்வரூபமான புஞ்சிகஸ்தலா, ரூபத்துடனிருக்கும்போது வாயுபகவான் புத்திரனை யளிக்க, அச்சமயம் ஜனித்த குழந்தையைக்கண்டு ஆகாரத்திற்காக அவள் குகையில் சென்றபொழுது சூரியோதய காலமாயிருந்தது. ஹனுமான் அதைக்கண்டு பழமென்றெண்ணி ஸாக்ஷாத் ருத்ரமூர்த்தியின் பிரபாவமுள்ளவனுதலால் மேலே கிளம்பி சூரியனை யடைந்து அவரைப்பிடிக்க, குழந்தையென்று சூரியன் பேசாமலிருந்தார். அன்று கிரஹணமாதலால், ராகுநெருங்க, ஹனுமானைக்கண்டு இந்திரனிடம் முறையிட்டான். இந்திரன் எதிர்த்துவர, ஹனுமான் ஐராவதத்தின் மேல் தாவினர். இந்திரன் வஜ்ராயுதத்தால் அடிக்க, அதனல் அவர் கீழேவிழுந்ததுகண்ட வாயுபகவான் அக்குழந்தையை எடுத்துக்கொண்டு, உலகத்தில் காற்றில்லாமல் அடக்கிக்கொண்டு ஒரு குகையில் மறைந்தார். பிரம்மாவந்து அக்குழந்தையை தடவிக்கொடுத்து, எழுந்திருக்கும்படி செய்து, சகல தேவர்களுடன் எந்த ஆயுதத்தாலும் வதமில்லாத வரத்தையும், சிரஞ்சீவித்வத்தையும் கொடுத்துச் சென்றுர். (ஒருதட்டவை பிரம்மாஸ்திரத்திற்குக் கட்டுப்படவேண்டுமென்று பிரம்மா ஹனுமானைக் கேட்டுக்கொண்டாரென்ற கதையே கிடையாது. சித்தாந்த புத்தகத்தைப் பார்க்க). பிறகு ஹனுமான் ஜாதிசேஷ்டையால் பெரியோர்களின் ஆசிரமங்களில் சேஷ்டைகள் செய்துகொண்டிருந்ததால் ரிஷிகள், 'உமது பலம் உமக்குத் தெரியாமல் இருக்கட்டும்' என்று சபித்துப்பிறகு 'நீ சூரியனைப் பிடித்த கதையை உனக்கு ஞாபகப்படுத்தப்பட்டபொழுது உன் பழையபலம் உனக்கு வரட்டும்' என்று அனுக்கிரகம் செய்தார்கள். இப்படி அப்ரமேயமான பலத்துடன் கூடிய இந்த ஹனுமான் சூரியனிடம் சர்வ வித்தைகளையும் அப்பியசித்தவர். இனி உமது பிரஸாதத்தால் பிரம்மாவாக வரப்போகிறர்" என்றுர்.

அதன்பின் வாலி சுக்ரீவன் முதலியவர்களின் ஜனனத்தைப் பற்றிக் கேட்க, அகஸ்தியர் சொல்லியதாவது:— பிரம்மாவிடமிருந்து உண்டான ரிக்ஷரஜஸ் என்ற வானரன் ஒருநாள் ஒருதீர்த்

தத்தைத் தொட்டபோது அற்புதமான பெண்ரூபத்தை யடைய, அப்பொழுது அங்கு சஞ்சரித்த இந்திரனும், சூரியனும் அவளைக் கண்டு முதலில் இந்திரன் அவளையடையச்சென்றான். அதற்குள் அவனது வீரியம் அவள் தலையிலுள்ள கேசபாரத்தில் விழ (தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும் வீரியப்பிரதானமே தவிர ஸ்தானப்பிரதானமில்லை), அங்கிருந்து ஒரு புத்திரன் ஜனித்தான். இந்திரன் அவனுக்கு வாலியென்று பெயரிட்டான். அதன்பின் சூரியன் அவளை யடைவதற்குள் அவனது வீரியம் அவள் கழுத்தில் விழ, அங்கிருந்து ஒரு புத்திரன் ஜனித்தான். சூரியன் அவனுக்கு சுக்ரீவன் என்று பெயரிட்டான். சுக்ரீவனுக்கிருந்த பிர்ம்ம தேஜஸையும், தன் பிள்ளை வாலிக்கிருந்த க்ஷத்திரிய தேஜஸையும் கண்ட இந்திரன், சுக்ரீவனால் வாலிக்குத் துன்பம் உண்டாகலாமென்று அஞ்சி, சிறந்ததான ஒரு மாலையைக் கழற்றி வாலிக்குப் போட்டுச் சென்றான். (வாலியைக்காட்டிலும் சுக்ரீவன் பலிஷ்டன். வாலிக்குமேல் அபார பலிஷ்டர்கள் வானரர்களில் எட்டுப் பேர் உண்டு. சித்தாந்த புத்தகத்தைப் பார்க்கவும்). சூரியன் தன் பிள்ளையை ஹனுமானிடம் ஒப்புவித்துச்சென்றான். மறுநாள் அந்தப் பெண்ணுக்குப் பழைய குரங்குரூபம் வந்தது. அது இரண்டு குட்டிகளுடன் பிரம்மாவை யடைய, பிரம்மா விஷயத்தையறிந்து ஒரு தேவதூதனைக் கூப்பிட்டு, "எற்கனவே அநேக வானரர்கள் உண்டாகி ஸப்தத்வீபங்களிலு மிருக்கிறார்கள். அவர்களுக்கு யஜமானனாக இவனைப் பட்டாபிஷேகம் செய்து கிஷ்கிந்தையில் விட்டுவா" என்று கூற, அவனும் அப்படியே ரிக்ஷரஜஸுக்குப் பட்டாபிஷேகம் செய்து சென்றான். பிறகு ரிக்ஷரஜஸ் வாலிக்குப் பட்டாபிஷேகம் செய்தான். இப்படி இவர்கள் ஜனனம் என்று சொல்லி ராமா ஒரு ரஹஸ்யம். அதாவது:— ராவணன் ஸீதையை அபஹரித்த காரணத்தைச் சொல்கிறேன். ஒரு சமயம் ராவணன், பிரம்மதேவனது புத்திரனாய் விளங்கி வந்த ஸநத்குமாரரைக் கண்டு, 'மஹாரிஷியே, ரிஷிகளெல்லாம் தவம் செய்கிறார்களே, யாரை உத்தேசித்துச் செய்கிறார்கள்? எதற்காகச் செய்கிறார்கள்?' என்று கேட்க, 'சகல ரிஷிகளும், பெரியோர்களும் விஷ்ணுவைப் பிரார்த்திக்கின்றனர். மறுபடி பிறக்காமல் பகவானிடத்தில் லயத்தை யடைவதற்காகவே பிரார்த்திக்கின்றனர். அநேக வீரர்கள் மகாபுருஷனால் யுத்தத்தில் அடிபட்டும் உத்தம ஸாயுஜ்யபதவியை யடைந்திருக்கிறார்கள்' என்றார். அதைக்கேட்ட ராவணன் தானும் அந்த பகவானால்

அடிபடவேண்டுமென்று இச்சைப்பட்ட அவன் அபிப்பிராயத்தை யறிந்த ரிஷி, 'அந்த பகவான் தேவகாரியத்தை நடத்துவதற்காக பூலோகத்தில் தசரதனுக்குப் பிள்ளையாகப் பிறக்கப்போகிறார். தன் பிதாவை ஸத்தியவாதியாகச் செய்வதற்காக அவர் தன் பத்னி சீதையோடும், தம்பி லக்ஷ்மணனோடும் தண்டகாரண்யம் வருவார். அவருடன் நீ ஜன்மவிரோதத்தை உண்டுபண்ணிக் கொண்டால் அவரால் அடிபட்டு உத்தமலோகமடையலாம்' என்று கூறினார். அதனால்தான் ராவணன் உம்முடன் விரோதத்தைச் செய்துகொண்டான், இதற்காகவே சீதாபஹரணம் செய்தான். என்றார்.

தவிரவும், ஒருசமயம் ராவணன் நாரதரை நோக்கி, 'சிறந்த வீரர்கள் எங்கிருக்கிறார்கள். சொல்லும். நான் அவர்களுடன் யுத்தம்செய்ய விரும்புகிறேன்' என்று கர்வத்தோடு கேட்க, நாரதர் ச்வேதத்வீபத்திலிருப்பதாகச் சொன்னார். ராவணன் சந்தோஷத்தோடு அங்கு சென்று, அங்கு பெண்களைக் கண்டு, 'நான் சண்டைசெய்ய வந்திருக்கிறேன். இங்கு என்னுடன் சண்டை செய்ய வீரர்கள் யாருமில்லையா?' என்று கேட்க, ஒரு பெண் அவன் சமீபமாய் வந்து அவனை எட்டிப்பிடித்து மற்றவர்களைப் பார்த்து, இதோ பத்துத்தலைப்பூச்சி என்று பரிஹஸித்து மற்ற பெண்களுடன் பந்தாடினாள். அவன் அப்பொழுது மிகுந்த சிரமமடைந்தான். ஒரு பெண் அவனையடித்துத் தூக்கியெறிய, அவன் சமுத்திரத்தில் விழுந்து, பின் வெளியே வந்து சமீபத்திலிருந்த ஸநத்குமாரரைப் பார்த்து, 'இந்தப் பெண்கள் ஏன் இப்படி பலமுள்ளவர்களாக இருக்கிறார்கள்?' என்று கேட்டான். அவர், 'இவர்கள் விஷ்ணுவின் சுவாசக்காற்றினால் உண்டானவர்கள். அதனால்தான் பலமுள்ளவர்களாயிருக்கிறார்கள். இவ்விடத்தில் துவேஷமில்லாதவர்கள் வசிக்கிறார்கள். சாக்ஷாத் பிரம்மாவாலும் அந்தப் பரமாத்மாவை லேசில் அறியமுடியாது. அது பிரம்மம். அந்த நாராயணனை நீ யடையவேண்டுமானால் 28வது வைவஸ்வத மன்வந்தரத்தில் பூலோகத்தில் ஜனிக்கப்போகிற அந்தப் பகவானால் அடிபடவேண்டும். அப்பொழுது நீ இந்த லோகத்தை யடையலாம்' என்றுகூற ராவணன் சந்தோஷத்துடன் லங்கைக்குச் சென்றான். அப்பொழுது வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த நாரதரும் பிரம்மதேவ ஸன்னிதானத்தை [illegible]ந்தார். அவர் வரவையறிந்த பிரம்மா அவர் அறியும்படி

“இந்த ராவணன் முன் ஜன்மத்தில் ஹிரண்யகசிபுவாயிருந்தவன். அவன் நரசிம்மத்தால் கொல்லப்படும்போது, ‘ஏ, பிரபோ, இந்த ஜன்மத்தில் என்னை எப்படிக் கொல்கிறீரோ, அப்படியே அடுத்த ஜன்மத்தில் நான் ராக்ஷசனாகப் பிறக்கும்போதும் நீரே வந்து என்னைக் கொல்லவேண்டும்’ என்று கேட்டுக்கொண்டான். பகவானும் இசைந்தார். அதன்பிரகாரம் இப்பொழுது ராக்ஷசனாகப் பிறந்திருப்பதால் ஸதாகாலமும், ‘அவர் வந்து என்னைக் கொல்வதாகச் சொன்னாரே. இன்னும் காணோமே’ என்று அதேஞாபகத்துடன் இருந்துவருகிறான். இந்தப் பிறப்பில் இவன் பகவானால் அடிபட்டபிறகு மற்றொரு ஜன்மமெடுத்துப் பின் உத்தமலோகத்தை யடையப்போகிறான்” என்று சொன்னார். ஆதலால் ஏ, ராம, உம்மிடத்தில் மரணத்தை இச்சித்து அதற்காகவே ராவணன் ஸீதையை எடுத்தான் என்றுசொல்லி நீரே அந்தமஹாவிஷ்ணு. ராவணனைக் கொல்வதற்காக அவதரித்த மஹாபுருஷன். ஸீதை மஹா லக்ஷ்மி. அப்படியிருக்க நீர் ஏன் இன்னும் உம்மை நாராயணனென்று தெரிந்துகொள்ளவில்லை? நீர் உம்மை யறிந்துகொள்ளும்’ என்று பலவிதமாய்ச் சொல்ல எல்லோரும் ஆச்சரியமடைந்தனர். ராகவன் ‘இதென்ன ஆச்சரியமாயிருக்கிறது!’ என்று எண்ணிக்கொண்டிருந்தார். இவ்விதம் சகல கதைகளும் சொல்லியபிறகு ரிஷிகள் ராமரிடம் சொல்லிக்கொண்டு அவ்விடத்தை விட்டுச்சென்றனர்.

பிறகு, ராமச்சந்திரன் தன்னைப் பார்க்க வந்திருந்த ஜனக சக்கரவர்த்தி, கேகயாதிபதியான யுதாஜித்து முதலிய சகல அரசர்களுக்கும் மரியாதை செய்து அனுப்பிவிட்டுச் சுக்ரீவனுக்கு ஒரு மாலையும், அங்கதனுக்குச் சில ஆபரணங்களும், ஹனுமானுக்கு மற்றொரு சிறந்த மாலையும் கொடுத்து, மற்ற வானரர்களுக்கும், விபீஷணனுக்கும் தகுந்தபடி மரியாதைகள் செய்து அனுப்பினார். சிறந்த தர்மத்துடன் ராஜ்யபரிபாலனம் செய்யும்படி விபீஷணனுக்குச் சொன்னார். ஹனுமான் கேட்டுக்கொண்டபடி ராமநாமம் நடக்குமிடங்களில் கதையைக் கேட்டுக்கொண்டிருக்கும்படி ஹனுமானுக்கு அனுக்கிரஹம் செய்தார். அதன்பின் அவர் சந்தோஷமாய், நீதிமுறைப்படி ராஜ்யபரிபாலனம் செய்துகொண்டிருக்கையில், புஷ்பகவிமானம் அங்குவந்து, அவரிடம், ‘நான் தங்களிடமிருப்பதற்காகக் குபேரனால் அனுப்பப்பட்டிருக்கிறேன்’ என்று கூற, அவர், ‘நீ குபேரனிடமே இரு. நான் நினைக்கும்போது

வந்தால் போதும்'' என்றார். அது சென்றுவிட்டது. பிறகு ராகவன் சீதையுடன் தன் பட்டணத்தில் சகல விருக்ஷஜாதி வர்க்கங்களுடனும், நித்தியபுஷ்ப, பலாதிகளுடனும் விளங்கும் அசோகவனத்திற்குச் சென்று சந்தோஷமாயிருந்துவந்தார். இவ்விதம் ராமர் சீதையுடன் சர்வ வைபவங்களையு மனுபவித்துக் கொண்டு பதினாயிர வருஷங்கள் நீதிதவராமல் அரசுபுரிந்துவந்த பின் சீதை கர்ப்பவதியானாள். அவள் எட்டுமாத கர்ப்பமாயிருக்கும்போது ஒருநாள் ராமன் அவளைநோக்கி, 'சீதே, நீ இப்பொழுது கர்ப்பவதியாயிருக்கிறாய். உனக்கு எதில் பிரேமையோ அதைச்சொன்னால் நான் உன்னிஷ்டத்தைப் பூர்த்திசெய்விக்கிறேன்' என்று கூற சீதை தான் காடுசென்று அங்குள்ள பெரியோர்களுக்குக் கொஞ்சகாலம் கைங்கரியம் செய்துவர விரும்புவதாகச் சொன்னாள். ராமர் அவளை மறுநாள் அனுப்புவதாகச் சொன்னார். ('ராமர் இரண்டு வருஷங்கள் தான் சீதையுடனிருந்தார். பதினாயிர வருஷகாலம் சீதையைப் பிரிந்திருந்தார்' என்ற வியாக்கியானம் உசிதமல்ல. சித்தாந்த புத்தகத்தைப் பார்க்க).

பிறகு ராமர் சபைக்கு வந்து அப்பொழுது அங்கு வந்த நகரி சோதனைக்காரர்களைப் பார்த்து 'ஊரில் ஏதாவது விசேஷமுண்டா' என்று கேட்க 'ஒன்றும் விசேஷமில்லை' என்றார்கள். பின்னும் ராகவன், 'என்னைப்பற்றியாவது, சீதையைப்பற்றியாவது, லக்ஷ்மணனைப்பற்றியாவது ஏதாவது பேச்சுஉண்டா? பெரிய இடத்துச் ஸமாச்சாரமென்று சொல்வதற்குத் தயங்கி நீங்கள் சொல்லாமலிருந்தாலும் இருக்கலாம். நான் இப்பொழுது கேட்கிறேன். எதுவானாலும் சொல்லுங்கள்' என்று கேட்க, ''தாங்கள் குறிப்பிட்டுக் கேட்பதால் சொல்லுகிறோம். வீதிகளிலும், தெருவின் மூலைகளிலும் 'ராவணன் கொண்டுபோன சீதையை ராமன் திரும்பியடைந்தார்' என்ற வதந்தி இருக்கிறது'' என்றார்கள் (வண்ணான் வார்த்தையென்பது வால்மீகமல்ல). அதன்பின் ராகவன் மந்திரிகளைக் கூப்பிட்டுக் கேட்க, அவர்களும் அந்தவதந்தி வெகு நாட்களாக உண்டு' என்றனர். அதைக்கேட்ட ராகவன் தம்பிகள் மூவரையும் வரவழைத்து, 'உத்தமர்களே, எதுவரையில் ஒருவனுக்கு உலகத்தில் அபவாதம் விளங்குகிறதோ அதுவரையில் அவன் உத்தமலோகத்தை அடையமாட்டான். சீதைக்கு அபவாதம் வந்துவிட்டதால் நான் அவளைத் தியாகம் செய்கிறேன் என்றுகூறி லக்ஷ்மணனை நோக்கி, ''லக்ஷ்மணா, ஏற்கனவே அக்னி

பகவானால் 'இவள் உத்தமி" என்று சொல்லிக் கொடுக்கப்பட்டிருந்தும், சீதையிடம் உலகம் அபவாதத்தைச் சொல்லிவிட்டது. அபவாதமுள்ளமட்டும் அபவாதமுள்ளவன் நரகமடையவேண்டும். ஆனால் இந்தவிஷயம் எனக்கு இப்பொழுதுதான் தெரியுமாதலால் நான் அவளை இப்பொழுதே தியாகம் செய்கிறேன். நீ இவளைக் கொண்டுபோய் கங்கையின் அக்கரையில் விட்டுவா. அவள் நேற்றே தான் காடுபோக விரும்புவதாக என்னிடம் தெரிவித்தாள். கங்கையின் அக்கரையில் அவளை விட்டபிறகு உலக அபவாதத்திற்காக நான் அவளைத் தியாகம்செய்துவிட்டதாகச்சொல்'' என்றாக்ஞாபிக்க லக்ஷ்மணன் ரதத்துடன் சீதையிருப்பிடத்தை யடைந்து, 'வனம் செல்ல அண்ணா ரதமனுப்பியிருக்கிறார்' என்றான். அவளும் உடனே சந்தோஷமாய் ரதத்திலேற, சுமந்திரன் சாரத்தியம் செய்தான். கங்கைக் கரையை யடைந்ததும் ரதத்தை விட்டிறங்கி, லக்ஷ்மணன் சீதையுடன் படகேறி அக்கரை சென்று அங்கு சீதையை விட்டுவிட்டுத் துக்கப்பட, அதுகண்ட சீதை துக்கப்படவேண்டிய காரணமென்னவென்று கேட்டாள். அப்பொழுது லக்ஷ்மணன், 'அம்மா உமக்கு உலக அபவாதம் வந்துவிட்டது. அபவாதம் உமது நிமித்தமாக வந்ததால் அண்ணா உம்மைத் தியாகம் செய்ததாகச் சொன்னார். அவ்விஷயத்தை இந்த இடத்தில்தான் உம்மிடம் தெரிவிக்கும்படி ஆக்ஞாபித்தார்' என்று கூறிவருந்தினான். அதுகேட்டு சீதை மிகுந்த துக்கத்துடன் பலவாறு கதறினாள். லக்ஷ்மணன் அவளைத்தேற்றி, 'அம்மா, உத்தமிகளுக்குப் பதியே தெய்வமாதலால், நீர் ராமனையே உபாஸித்துக்கொண்டிரும். இதோ சமீபத்தில் நமது பிதாவுக்கு மித்திரரான வால்மீகி மஹரிஷியின் ஆசிரமம் இருக்கிறது. அங்கு செல்லும்' எனக்கூறி கங்கைக் கரையில்வந்து ரதமேறி ஊரை நாடி வரும்வழியில் சுமந்திரனை நோக்கி, 'என்து அண்ணாவான ராமர்சர்வயோக்கியதை உடையவரே தெய்வத்தைஉபாஸிக்கிறார். சகல வைபவமுள்ளவர். ஆனால் இவருக்கு பத்தினிபாக்யம் மட்டும் இல்லாமல் இருக்கும்படி ஏற்பட்டிருக்கிறதைக் கவனித்தால் இவ்வளவும் தெய்வ கதியே தவிற வேறல்லவென்று நிச்சயமாய்த்தெரிகிறது. தெய்வம் கண்ணுக்குத் தெரியாது. அதை எவனாலும் அசைக்க முடியாது. அறிவுள்ள ஜடனான மனுஷ்யன் அறிவில்லாத தெய்வத்தை யசைக்க முடியாதென்பதை நானிப்பொழுது அறிந்தேன். தெய்வம் அற்புதத்தன்மையுடன் கூடினதெனக் கண்டேன். மந்திரியே, அண்ணா தன் பத்தினியைப் பிரிந்து

துக்கப்படுவதைப் பார்த்துக்கொண்டிருக்க, என்னால் முடியாது. ஆதலால் நான் என்னுயிரை விட்டுவிடுகிறேன்' என்றுகூறி துக்கித்தான். அதைக்கேட்ட சுமந்திரன், 'லக்ஷ்மணா, நீங்கள் பிறந்த தினத்திலேயே உன் பிதா என்னுடன் வசிஷ்டர் ஆசிரமத்தை யடைந்து அங்கு வசிஷ்டருடனிருந்த துர்வாஸரிடம் ராகவவிருத்தாந்தத்தைத் தெரிந்துகொண்டு புறப்பட்டார். அப்பொழுதே ராமர் சீதையைப் பிரியப்போகிறாரென்று தெரியும். மேலும் காலத்தை யனுசரித்து உன்னையும் ராமர் விடப்போகிறாரென்றும் தெரியும். ஆதலால் நீ ஸீதாநிமித்தத்தில் வருந்துவதில் பயனில்லை. நானிப்பொழுது சொல்லியது இரகசியமானது. நீ யாருக்கும்சொல்லாதே' என்று கூறக்கேட்ட லக்ஷ்மணன் தன்னைச் சமாதானம் செய்துகொண்டு, அயோத்தியை யடைந்து, உத்தமனான ராகவன் துக்கிப்பது கண்டு அவரைத் தேற்றினான். பிறகு ராகவன் லக்ஷ்மணனை நோக்கி, 'லக்ஷ்மணா, நான்கு நாட்களாக ராஜ்யகாரியங்களை என்னால் கவனிக்கமுடியவில்லை. எந்த அரசன் அடிக்கடி ராஜ்யகாரியங்களை கவனிக்கவில்லையோ அவன் நரகத்தை யடைகிறான். உத்தமர்களான நிருகமஹாராஜனும், நிமிசக்கரவர்த்தியும் இக்காரணத்தால் சாபத்தை யடைந்தனர்' என்றார். அப்பொழுது லக்ஷ்மணன், 'அண்ணா, பொறுமை பிரதானமாயிருக்க உங்களால் இப்பொழுது சொல்லப்பட்டவர்கள் பொறுமையை யிழந்ததால் தான் துன்புற்றனர். யயாதி மஹாராஜனோ பொறுமையுடனிருந்து கீர்த்தியை யடைந்ததாகக் கதையுண்டு' என்று கூறினான். அதன்பின் ராகவன், 'அதிருக்கட்டும் லக்ஷ்மணா, வெளியே சென்று யாராவது நம்மைப் பார்க்கக் காத்துக்கொண்டிருக்கிறார்களா வென்று பார்த்துவா' என்றுகூற லக்ஷ்மணன் சென்று பார்த்தபொழுது மண்டையுடைந்து அடிக்கடி சப்தம் செய்துகொண்டிருக்கும் ஒரு நாயைக்கண்டு 'என்ன விசேஷம்?' என்று வினவ, அது 'நான் ராகவனைக் காணவந்தேன்' என்று கூறிற்று. லக்ஷ்மணன் உள்ளேசென்று ராகவனிடம் சொல்லிவிட்டுவந்து நாயைப்பார்த்து, ஏதாவது விஷயமிருந்தால் ராமனிடம் சென்று சொல்லும்' என்றுரைக்க அந்த ச்வானம், 'தேவாலயம், அரசகிருஹம், பிர்ம்மநிஷ்டனது கிருஹம், அக்னிஹோத்திர ஸ்தானம் இப்படிப்பட்ட சில விடங்களில் ச்வானம் பிரவேசிக்கலாகாது. அரசர்கள் அஷ்டதிக்குபாலகர்கள் அம்சமாதலால் அவரது உத்திரவில்லாமல் நான் அவரது கிருஹத்தில் பிரவேசிக்கமாட்டேன்' என்றது. அவ்விஷயத்தை லக்ஷ்மணன்

ராமரிடம் தெரிவிக்க, ராகவன், 'இது அற்புதமான வஸ்து' என்றறிந்து அதை உள்ளே கூட்டிவரச்சொன்னார். ச்வானம் வந்து ராகவனைப் பார்த்து, "நீர் பரமாத்மா. தர்மத்திற்கெல்லாம் இருப்பிடமானவர். என்னை ஒரு பிக்ஷுகன் அடித்துவிட்டான். தாங்கள் அவனைத் தண்டிக்க வேண்டுகிறேன்" என்று கூற, ராகவன் அவனையழைத்து விசாரித்தார். அவன், 'நான் கோபத்தால் அடித்துவிட்டேன். நான் செய்தது தவறுதான். நான் குற்றவாளியே' என்று வருத்தத்துடன் கூறினான். 'இவனுக்கு என்ன தண்டனை கொடுக்கலாம்?' என ராகவன் கேட்க, பெரியோர்கள், 'குற்றத்தை ஒப்புக்கொண்டு பச்சாதாபப்படுபவனுக்கு தண்டனை ஒன்றுமில்லையே' என்றுரைத்தனர். உடனே நாய், 'அரசனே, கோபிஷ்டனான இவனுக்குக் கோவில் மணிய உத்தியோகத்தைக் கொடுத்தால் அதுவே தகுந்த தண்டனையாகும்' என்று கூற, 'அது எப்படி?' என்று கேட்டார். நாய், 'நான் அந்த உத்தியோகத்திலிருந்து அந்த சம்பத்தையெல்லாம் அனுபவித்துத்தான் இப்பொழுது இந்த ஜன்மாவை யடைந்தேன். அந்த உத்தியோகத்தை யடைந்தாலே அந்தக் கோவில் சம்பத்தை அது அனுபவிக்கச் செய்யும். எவனொருவன் தெய்வசம்பத்து, பிர்ம்மநிஷ்டனுடைய ஸம்பத்து, ஸ்திரீஸம்பத்து, குழந்தையின் ஸம்பத்து இவைகளை அபஹரிக்கிறானோ அவன் தன்னிஷ்டர்களுடன் அழிவான். தேவஸம்பத்தையும், பிர்ம்மநிஷ்டன் ஸம்பத்தையும் மனதால் ஸ்மரித்தாலும் அவன் நரகத்தை யடைவான்,' என்று சொல்லிவிட்டு காசியையடைந்து அந்த க்ஷணத்திலேயே கங்கைக்கரையில் சரீரத்தை விட்டுப் புண்ணிய லோகத்தை யடைந்தது.

அதன்பின்னர் சிலநாளைக்கெல்லாம் ஒரு கழுகும் கோட்டானும் சண்டையிட்டுக்கொண்டு ராமரிடம் வந்து முறையிட, அவர் என்னவென்று விசாரித்தார். அப்பொழுது கோட்டான், 'இது பலாத்காரமாய் என் கூட்டைப் பிடுங்கிக்கொண்டு விடமாட்டேன் என்கிறது' என்றுசொல்ல, கழுகும் 'இது என் கூட்டைப் பிடுங்கிக்கொண்டு சண்டையிடுகிறது' என்று கூறிற்று. ராகவன், 'நீங்கள் எப்பொழுது கூடுகட்டினீர்கள் என்று கேட்க, கழுகு, 'மனுஷ்யர்கள் உண்டானபோது நான் கூடுகட்டினேன்' என்றும் கோட்டான், 'மரங்கள் உண்டானபோது நான் கூடுகட்டினேன்' என்றுஞ் சொல்லின. அதைக்கேட்ட ராகவன், "இந்தக் கழுகு

தன் கூடு என்றுசொல்வது பிசகாயிருக்கிறது. ஏனென்றால் சிருஷ்டிகாலத்தில் பிர்ம்மாவானவர் பூமி, வாயு, பர்வதம், விருக்ஷங்கள் இவைகளை சிருஷ்டித்துவிட்டுப் பிறகுதான் மனுஷ்யர்களைச் சிருஷ்டித்ததாகச் சிருஷ்டியின் கிரமம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகலால் மனுஷ்யர்கள் உண்டானபோது கூடுகட்டினேன்' என்ற கழுகின் வாக்கியம் பிசகாய்த் தெரிகிறது. மனுஷ்யர்கள் உண்டாவதற்கு முன்னமேயே மரங்கள் உண்டானதால் அப்பொழுது கூடுகட்டினதாகச் சொல்லும் உலூகத்தின் வாக்கியமே உண்மை. ஆதலால் நான் கழுகைத் தண்டிக்கப்போகிறேன். இது குற்றவாளி'' என்று கூறினர். அப்பொழுது ஆகாயத்தில் ஒரு அசரீரி 'ஏ, ராஜனே, முன்ஜன்மாவில் இவன் பிரம்மதத்தனென்ற அரசன். கௌதமர் இவனை நாடிவந்து சிறிதுகாலம் தங்கியிருந்தார். ஒருநாள் ஆகாரத்தில் மாமிசம் கலந்திருந்ததால் இவனைக் கழுகாகும்படி சபித்து, ராமனால் தொடப்பட்டபோது சாபவிமோசனமாகுமென்றுரைத்தார். ஆதலால் நீர் இவனைத் தொட்டால்போதும்' எனக்கூறியது கேட்ட ராகவன் அதைத் தடவிவிட, அது சாபவிமோசனமடைந்து, ராஜரூபத்தைப்பெற்று தேவலோகம் சென்றது. அதற்கு மறுநாள் சுமந்திரன் ராமரிடம்வந்து 'யமுனாதீர வாஸிகளான ரிஷிகள் வந்திருக்கின்றனர்' என்றுசொல்ல, ராகவன் அவர்களைப்பூஜித்துக் கொண்டாடி, "ராஜ்யம்முதலிய சகலத்தையும் நான் பிராம்மணர்கள் நிமித்தமாகவே தரித்துக்கொண்டிருக்கிறேன், நானுங்களுக்கு என்ன செய்யவேண்டும்?" என்று கேட்டார். ரிஷிகள், "ராமச்சந்திர, லோலா என்றவனுடைய மூத்தபிள்ளையான மது என்ற அசுரன் பரமசிவத்தை யுபாசிக்க, அவர் சந்தோஷித்து அவனுக்கு சிறந்ததான ஒரு சூலத்தைக் கொடுத்து, 'இதைப் பிராமணர்களிடத்திலும், தேவர்களிடத்திலும் பிரயோகிக்காதே. மற்ற யாரிடத்தில் பிரயோகித்தாலும் இது அவர்களைக் கொல்லும்' என்றார். அவனதைப்பெற்றுக்கொண்டு வெகுகாலம் ராஜ்யபரிபாலனம் செய்தான். அவனது பிள்ளையான லவணாசுரன் பரம அதர்மிஷ்டன். அவன் தேவர்களையும், பெரியோர்களையும் துன்புறுத்திவருகிறான். பிள்ளையிடத்தில் இருக்கும் அதர்மத்தைக் கண்டு, சூலம் பிள்ளை தலைமுறையிலும் இருக்கும்படி வரம்பெற்றிருப்பதால், அந்தச் சூலத்தை அவனிடம் கொடுத்து அதன் விருத்தாந்தத்தையும் கூறி மது தவம்செய்யச் சென்றுவிட்டான். அதர்மிஷ்டனான அந்த லவணாசுரனைத் தாங்கள் வதம் செய்யவேண்டும்'' என்று கூற ராகவன்,

'நீங்கள் கவலைப்படவேண்டாம். நாம் அவனைக் கொல்லுவோம்' என்றுரைத்து அவர்களை யனுப்பிவிட்டுத் தம்பிகளை நோக்கி 'யார் லவணாசுரனை வதிக்கச் செல்கிறீர்கள்?' என்றுகேட்க, சத்ருக்னன் தான் செல்வதாகச் சொன்னான். ராமர் அதை அங்கிகரித்து, அவனை அயோத்தியில் தன் சிம்மாதனத்தில் உட்காருவித்து, வடமதுரையை (லவணாசுர பட்டணத்தை) அவனுக்குப் பட்டாபிஷேகம்செய்து, அற்புதமான நாராயணாஸ்திரத்தைக் கொடுத்து, 'லவணன் கையில் சூலம் மட்டும் இல்லாதபோது அவனைக்கொல்ல வேண்டும். மற்றெந்த ஆயுதமு மிருக்கலாம்' என்று கூறி யனுப்பினார்.

இப்படியிருக்க, கங்கைக்கரையில் விடப்பட்ட சீதை துக்கப் பட்டுக்கொண்டிருக்க, வால்மீகி ரிஷி அவளைக்கண்டு தன் ஆசிரமத்துக்கு அழைத்துச்சென்று, அவளை ரிஷிபத்தினிகளிடம் ஒப்புவித்து 'காப்பாற்றவேண்டும்' என்றுகூற, அவர்கள் அவளைச் சௌக்யமாய்க் காத்துவந்தனர். இப்படி இரண்டுமாதமானபோது ராமனால் லவணாசுர வதத்திற்காக அனுப்பப்பட்ட சத்ருக்னன் அயோத்தியிலிருந்து வடமதுரையை நாடிவருகையில் இரவில் வால்மீகி முனிவரது ஆசிரமத்தில் தங்கினான். அப்பொழுது அங்கு காணப்பட்ட ஒரு யாகபூமியைக்கண்டு அது என்னவென்று கேட்க, அவர் கல்மாஷபாத மஹாராஜா யாகம்செய்த கதையைச் சொன்னார். அன்று இரவு காலத்தில் சீதை இரட்டைக்குழந்தைகளைப் பெற்றாள். அவ்விஷயத்தை இரண்டு ஸ்திரீகள் வந்து வால்மீகியிடம் சொல்ல, வால்மீகி அவ்விடத்திற்குச் சென்று, தர்ப்பத்தின் நுனிபாகத்தால் மூத்த குழந்தைக்கு ரக்ஷை கட்டி, நுனிபாகத்திற்கு குசமென்ற பெயராதலால், அவனுக்குக் குசனென்று பெயரிட்டு, தர்ப்பத்தின் அடிபாகத்தால் இளையவனுக்கு ரக்ஷைகட்டி, அந்த அடிபாகத்திற்கு லவமென்று பெயராதலால் அவனுக்கு லவனென்று பெயரிட்டார். சத்ருக்னனும் சீதையை அம்மாவென்றழைத்து சிறந்த பல தானங்களைச் செய்து, அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு ச்யவன ரிஷியிடம் சென்று லவணாசுரனிடமிருக்கும் சூலம் மாந்தாதாவை யழித்திருக்கும் விஷயத்தையும் கேட்டுக்கொண்டு, காலையில் லவணன் வேட்டைக்குச்சென்ற பிறகு கோட்டைவாயிலை மறித்துக்கொண்டிருந்து மாலையில் அவன் திரும்பிவந்ததும் அவனுடன் யுத்தம்செய்தான். லவணன் ஒரு மரத்தால் சத்ருக்னனை யடிக்க, அவன் மூர்ச்சித்து விழுந்தான்.

ஆனால் காலகதியால் அச்சமயத்தில் சூலத்தைக் கொண்டுவர வேண்டுமென்ற எண்ணம் லவணனுக்குத் தோன்றவில்லை. கீழே விழுந்த சத்ருக்னன் சற்றுநேரத்திற்குப் பிறகு எழுந்து நாராய ணாஸ்திரத்தால் லவணனைச் சம்ஹரித்துவிட்டுத் தேவர்களின் அனுக்கிரகத்தைப் பெற்று வடமதுரையில் ராஜ்யபரிபாலனம் செய்துகொண்டிருந்தான்.

இதுநிற்க, குசலவர்கள் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வந்தனர். தக்கவயதில் வால்மீகி அவர்க ளுக்கு உபநயனம் செய்வித்துச் சகல வித்தைகளையும் கற்றுக் கொடுத்தார். சில நாட்களுக்குப் பிறகு, வால்மீகி முனிவர், தான் பதினாயிரம் வருஷங்களுக்கு முன் எழுதிய க்ரந்தத்தை எடுத் துக்கொண்டு, 'இதை யார்மூலம் வெளிப்படுத்தலாம்' என்று யோசித்துக்கொண்டிருந்தார். அச்சமயம் குழந்தைகள் அங்கு வந்து சேவிக்க, பார்கவ ஸம்ஹிதையான ராமகதையான அந்த வேதத்தை அதனுடைய பிரகடனத்தின் பொருட்டு அவர் அக் குழந்தைகளுக்கு உபதேசித்தார். குழந்தைகள் சமீபத்திலிருந்த ஆசிரமங்களில் நான்கு வருஷகாலம் அதைக் கானம்செய்து, பிர கடனம் செய்துகொண்டிருந்தார்கள். இந்தக் கிரந்தத்திற்கு ஸ்வ ரங்கள் உண்டு. இதைக் குழந்தைகள் தாளத்துடனும், லயத்து டனும், தம்பூர் ஸ்ருதியில் கானம்செய்தனர். அது வேதபுருஷன் கதையாதலால் ரிஷிகளெல்லாம் அதைக்கேட்டுப் பரமானந்த மடைந்தார்கள். இப்படியிருக்கப் பன்னிரண்டு வருஷங்களுக்குப் பின் ஒருநாள், சத்ருக்னன் ராமனைத் தரிசிப்பதற்காக வடமது ரையிலிருந்து புறப்பட்டுவந்து இராத்திரி வால்மீகி ஆசிரமத்தில் தங்கிப் பக்கத்து ஆசிரமத்தில் நடக்கும் ராமகதையைத் தன்னி ருப்பிடத்திலிருந்தே கேட்டுக்கொண்டிருக்கும்போது, அதைப் பற்றி விசாரிக்கச்சொன்ன தன்னைச் சேர்ந்தவர்களிடம், 'பெரி யோர்கள் ஆசிரமங்களில் நடக்கும் விஷயங்களை நாம் விசாரிக்க வேண்டாம்' என்று சொல்லிவிட்டு, மறுநாள் அயோத்தியை யடைந்து, ராமனைத் தரிசித்துப் பரமசந்தோஷத்துடனிருந்தான். ராமனும் தம்பியை ஆலிங்கனம் செய்துகொண்டு சந்தோஷமடைந் தார். அதன் பின்னர், ஒருநாள் ஒரு பிராமணன் தனது இறந்த குழந்தையை ராமஸன்னிதியில் கொண்டுவந்து, 'இராஜ்யத்தில் அதர்மம் ஏற்பட்டதால்தான் இந்த அகாலமரண முண்டாயிற்று. உமது ராஜ்யத்தில் நடக்கும் அதர்மத்தை நீக்கவேண்டும். இக்

குழந்தையை நீர்தான் பிழைப்பிக்கவேண்டும்' என்று கூறக்கேட்டதும் ராகவன் பெரியோர்களுடன் யோசித்தார். அவர்கள் சற்று நிதானமாக ஆலோசிக்கையில் நாரதர் அங்குவந்து, 'ராகவ, முதல் யுகத்தில் பிராமணர்களும், இரண்டாவது யுகத்தில் க்ஷத்திரியர்களும்' மூன்ருவது யுகத்தில் வைசியர்களும், நான்காவது யுகத்தில் சூத்திரர்களும் தவம் செய்யவேண்டும். இந்த நியாயத்தை மீறி இரண்டாவது யுகத்தில் ஒரு சூத்திரன் தவம் செய்வதால்தான் இந்த அகாலமரண மேற்பட்டது' என்றுகூறிச் சென்ருர். இதையறிந்த ராகவன் புஷ்பகத்திலேறிக்கொண்டு பலவிடங்களில் சஞ்சரித்துக்கொண்டு தெற்குதிக்கிலுள்ள சைவலபர்வதத்தின் உத்தரபாகத்தில் ஒரு குளக்கரையில் ஒருவன் தலைகீழாய்த் தவம் செய்துகொண்டிருப்பதைக் கண்டு, 'நீர் யார், என்ன ஜாதி, ஏன் தவம் செய்கிருய்?' என்றுகேட்க, அவன், 'நான் ஜாதியில் சூத்திரன். சரீரத்துடன் சுவர்க்கம் செல்வதற்காகத் தவம் செய்கிறேன். என்பெயர் சம்புகன்' என்ருன். அதுகேட்டு ராகவன், 'நியாயத்தை, சட்டத்தை மீறியதால் குற்றவாளியான உன்னை நான் தண்டிக்கிறேன்' என்றுரைத்துத் தன் கத்தியால் அவனைச் சிரச்சேதம் செய்ததும், தேவர்கள் வந்து, 'உமக்கு வேண்டிய வரத்தைக் கேளும்' என்று கேட்க, ராமர், 'இறந்துபோன பிள்ளை பிழைக்கவேண்டும்' என்று கேட்டார். தேவர்கள் இவன் கொல்லப்பட்டபோதே அக்குழந்தை பிழைத்துவிட்டது என்று சொல்லி தேவர்கள் ராகவனைப் பார்த்து, 'உத்தம, தண்டகாரண்யத்திலுள்ள அகஸ்தியர் பனிரண்டுவருஷங்கள் நியமமாய்த் தவத்திலிருந்து தீக்ஷை முடித்துக்கொண்டிருக்கிருர். அவரைப் பார்த்தபின் அயோத்திக்குப் போகலாம்' என்றனர். அப்படியே ராகவன் முனிவர் ஆசிரமத்தை யடைய, அகஸ்தியர் ராகவனைக் கொண்டாடி அவரைப் பலவிதமாய்ப் பூஜித்து, 'ராகவா, நீரே பரமபுருஷன், நாராயணன் நீரே' என்று பலவிதமாய்ப் புகழ்ந்து, 'மஹிமையுள்ள இந்த மாலையைப்பெற்றுக்கொள்ளும்' என்றுகூறி ஒருமாலையைக்கொடுக்க, ராகவன், க்ஷத்திரிய தர்மத்தைக் கடைபிடிக்கும் நான் எப்படி அதை வாங்குவேன்' என்று தெரிவித்தார், அப்பொழுது அகஸ்தியர், "ராகவ, ஆதியில் மனுஷ்யர்கள் 'அரசன் வேண்டும்' என்று பிரம்மாவைப் பிரார்த்தித்தபோது, அவர் அஷ்ட திக்குபாலகர்களிடமிருந்து ஒவ்வொரு அம்சத்தை வாங்கி க்ஷுபமென்ற ஒரு அரசனை உண்டுபண்ணிஞர். ஆகையால் அரசர்கள் அஷ்டதிக்குபாலர்களின் அம்சம். அதிலுள்ள

இந்திராப்சத்தால் வாங்கும் தன்மை க்ஷத்திரியர்களுக்குண்டு. ஆதலால் நீர் இதைப்பெற்றுக்கொள்ளலாம். இதுஎனக்கு விதர்ப்ப ராஜனான ஸுதேவனுடைய இரண்டு பிள்ளைகளில் மூத்தவனான சுவேதனால் அளிக்கப்பட்டது. அவன் அநேக வருஷகாலம் ராஜ்யபரிபாலனம் செய்து, தம்பிக்கு ராஜ்யத்தைக் கொடுத்துத் தவம் செய்துகொண்டிருந்தான். தவம் செய்துகொண்டிருக்கையில் ஒரு பிக்ஷுகன் வந்து பிக்ஷைகேட்கக் கொடாமலிருந்துவிட்டான். பிறகு கொஞ்ச காலத்தில் இவன் காலகதி யடைந்து தேவலோகமடைந்தான். அங்கு அவனுக்கு ஸர்வ வைபோகமிருந்தும், ஆகாரமும் தீர்த்தமுமில்லாமல் போக அவன் பிரம்மாவிடம் கேட்க, 'நீ பிக்ஷை கேட்டவனுக்குக் கொடுக்காததால், இந்தக்கஷ்டம் வந்தது. இன்று முதல் பிரதிதினமும் உன் பிரேத சரீரம் நீ தவம்செய்த இடத்திலுள்ள குளத்தில் மிதக்கும். நீ தினந்தோறும் சென்று உன் சரீரத்தைச் சாப்பிட்டு, அக்குளத்தின் தீர்த்தத்தைப் பருகிவரலாம்' என்று பிரம்மா கூறினார். அதைக்கேட்ட சுவேதன் 'எனக்கு விமோசனம் வேண்டும்' என்று பிரார்த்திக்க, 'வெகுகாலத்திற்குப் பிறகு நீ ஒரு மஹரிஷியைத் தரிசிப்பாய். நீ அவ்வரைப் பூஜித்து அவருக்கு ஒருதானம்செய்து, அவரால் இக்கஷ்டத்திலிருந்து விடுபடுவாய்' என்று பிரம்மா சொன்னார். இப்படியிருக்க, நான் ஒருநாள் அந்த ஆசிரமத்தில் தங்கி காலையில் குளத்திற்குச் சென்றபோது அவனைக்கண்டேன். அவன் தன் பிரேதசரீரத்தைச் சாப்பிடுவதைக் கண்டு, அதன் விஷயத்தைக் கேட்டறிந்தேன். அவனால் நான் பூஜிக்கப்பட்டேன். அப்பொழுது அவன் எனக்கு இந்த மாலையைக் கொடுத்தான். நான் அவனை உத்தமலோகத்தை யடைந்து ஸகல வைபவத்தையும் பெறும்படிச்செய்து கஷ்டத்திலிருந்து நீக்கினேன். அவனால் கொடுக்கப்பட்ட இந்த மாலையை நீர் பெற்றுக்கொள்ளும்'' என்றுகூறினார். அப்பொழுது ராகவன் ரிஷியைப்பார்த்து, 'சுவேதன் தண்டகாரண்யத்தில் ஒரு குளக்கரையில் தவம்செய்தான் என்று கூறினீரே, அது ஜனசஞ்சாரமில்லாத வனம் என்றீர்களே, அந்த வனம் உண்டானது எப்படி?' என்று கேட்க, ரிஷி, ''ராமச்சந்திர, இக்ஷ்வாகுவென்ற மஹாராஜனின் கடைசிப் பிள்ளைக்குத் தண்டகன் என்று பெயர். அவன் விந்திய பர்வதத்திற்கும், சைவல பர்வதத்திற்கும் மத்தியில் மதுமந்தம் என்ற பட்டணத்தை ஏற்படுத்திக்கொண்டு, சுக்கிராச்சாரியாரைக் குருவாகக்கொண்டு அதையாண்டுவந்தான். இப்படியிருக்க, சித்திரை

மாதத்தில் ஒருநாள் பார்க்கவர் ஆசிரமத்தைநாடிவர, சுக்கிராச்சாரியரின் மூத்தமகளான அற்புத அழகுள்ள அரஜா என்பவளைக் கண்ட தண்டகன் தன்னையடையுமாறு அவளைக்கேட்டான். அவள் அவனைப்பார்த்து, 'நான் உனது குருவின் புத்திரி. ஆதலால் நீர் என்னை யடைய விரும்புவது தகுதியல்ல. மேலும் நான் ஸ்வதந்திரையல்ல. ஆதலால் உமக்கு வேண்டுமானல் உமது குருவைக் கேட்டுக்கொள்ளும். பிதாவுக்கு கட்டுப்பட்டு இருக்கும் நாம் தர்மத்தை மீறமாட்டேன்' என்று கூற, தண்டகன் அவள் சொல்லை மீறி, அவளைப் பலாத்காரமாயனுபவித்துச் சென்றான். அவள் மிகவும் கதறினாள். இவ்விஷயத்தை யறிந்த சுக்கிராச்சாரியார், 'நீயும் உன் பட்டணமும் ஏழுநாட்களில் மண்மாரியால் அழியக்கடவது. இந்த இடத்தைச்சுற்றி நூறுயோசனைக்குச் சகல இடமும் பயங்கரமான வனமாகட்டும்' என்று சபித்தார். அதன்பின் அவர் தன் பெண்ணைநோக்கி, 'நீ இந்த இடத்தில் இருந்துகொண்டிரு. இங்கு ஒருயோசனை நீளமும் ஒருயோசனை அகலமுமுள்ள ஒரு குளம் விளங்கும். அதுமட்டும் என் சாபத்தால் அழியாது. இங்குள்ள உத்தமர்களும் அழியமாட்டார்கள். இவ்விடத்தில் பலாதி விருக்ஷங்கள் நித்தியமாக உள்ளன. நீ உனது விமோசன காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு இங்கேயே இரு' என்று கூறி அவளைத் திரஸ்கரித்தார். அதனால்தான் இதற்குத் தண்டகாரண்யம் என்ற பெயர் ஏற்பட்டது" என்று ரிஷிகதை சொன்ன பிறகு இருவரும் அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டனர். பிரபாத காலத்தில் எழுந்து, ராகவன் ரிஷியை அநுமதி கேட்க, மகரிஷி ராமனை அதிப்பிரேமையுடன் பார்த்து, 'உன்னை யார் ஒரு முகூர்த்தகாலம் தரிசிக்கிறார்களோ, அவர்கள் தேவர்களால் பூஜிக்கப்பட்டுத் தேவலோகமடைவார்கள், எவர்கள் உன்னை விபரீதமாய்ப் பார்க்கிறார்களோ அவர்கள் நரகத்தையடைவார்கள்" என்று கூறி அவருக்கு அநுமதியளித்தார். ராமர் அயோத்திக்குச் சென்றார். 'பிராம்மணனும் குழந்தையை யடைந்து சந்தோஷித்தான்.

அதன்பிறகு, ஸ்ரீராகவன் தம்பிகளைக் கூப்பிட்டு 'நான் ராஜஸூய யாகம் செய்யலாமென எண்ணுகிறேன்' என்று சொல்ல, அதுகேட்ட பரதன், 'அண்ணா, சகல அரசர்களையு மழிக்கும் இந்த ராஜஸூய யாகம் வேண்டாம். சர்வ சராசரங்களும் உம்மிடம் ஈடுபட்டிருக்கையில் எதற்காக இந்த யாகம்? வேண்டுமானல்

அச்வமேதயாகம் செய்யும். அதில் யாருக்கும் கஷ்டமில்லை. அதுதான் எனக்கு உசிதமாகத் தோன்றுகிறது' என்றுரைத்தான். அதைக் கேட்ட ராமர், 'உத்தமம், தர்மத்தைக் குழந்தைகள் சொன்னாலும் கேட்கவேண்டும். (வியாக்கியானங்கள் பெரியோர்களுடையவைகளாயிருந்தாலும் சமயத்திற்குப் பொருத்தமில்லாதவற்றைத் தக்க காரணங்களுடன் தள்ளிவிட்டு, பொருந்திய விஷயங்களைச் சொல்லவேண்டுமென்பதைச் சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்) நீ சொல்லியபடி நான் அஸ்வமேத யாகமே செய்வேன்' என்றார். அப்பொழுது லக்ஷ்மணன், 'இந்திரன் விருத்திராசுரனைக் கொன்றதால் அவனுக்குப் பிர்ம்மஹத்தி வந்தது. அதைப் போக்குவதற்காக விஷ்ணுவை உத்தேசித்து அச்வமேத யாகம் செய்து தோஷத்தை நிவர்த்திசெய்துகொண்டு தேவலோகமடைந்தான். அந்த பிர்ம்மஹத்தி ஸ்திரீயிடத்திலும், ஜலத்திலும், பிரம்மநிஷ்டர்களைக் கொல்லுபவனிடத்திலும் இருக்கட்டுமென்று இந்திரன் குறிப்பிட்டான். இவ்விதம் பிர்ம்மஹத்தியையும் போக்கடிக்கக்கூடிய சிறந்தயாகம் அச்வமேதயாகமே' என்றான். இராமர் இதைக்கேட்டு, 'இது உண்மையே, நானொரு கதைசொல்லுகிறேன் கேள்' கர்த்தமப் பிரஜாபதியின் புத்திரனான இளன் ஒருநாள் வேட்டையாடிப் பலமிருகங்களைக் கொன்றுவரும்போது, ஓரிடத்தில் அவனும், சகல சேனைகளும் ஸ்திரீகளாகிவிட்டனர். அங்கு சகலமும் பெண்ரூபமாயிருந்ததால், இது பகவானது காரியம் என்றுணர்ந்து, இவன் பரமசிவத்தைப் பிரார்த்திக்க, அப்பொழுது உமாதேவி பகவான் அபிப்பிராயத்தை யறிந்து அவனுக்கு ஒரு மாதகாலம் பெண்ரூபமும், மற்றொருமாதம் ஆண்ரூபமுமாயிருக்குமென்றும் புருஷனாயிருக்கும்போது முன்பு பெண்ரூபமாயிருந்த ஞாபகமும், பெண்ரூபமாயிருக்கையில் முன்பு ஆணாயிருந்த ஞாபகமும், கிடையாதென்றும் கூறி யனுப்பிவிட, இவ்விதம் சிலநாள் ஆனபிறகு ஒருநாள் இளன் ஸ்திரீ ரூபத்திலிருந்தபோது சந்திரபுத்திரனான புதன் கண்டு அவள் ரூபத்திலீடுபட்டு ஆவர்த்தனீ வித்தையால் இளன் பெண்ணாவதும், புருஷனாவதும் தெரிந்து, அவளை மணந்து பரமயோகத்தை யடைந்துகொண்டு வந்து, அவளிடத்தில் புரூரவஸ் என்ற பிள்ளையைப் பெற்றான். பிறகு புதன் இளனிடத்தில் பிரேமையடைந்து அவளுக்கு அனுகூலம் செய்ய விரும்பி, ச்யவனர், காச்பர், தூர்வாஸர், ஸம்வர்த்தர் முதலியவர்களைப் பார்த்து, 'இவளுக்குப் பூர்வத்தில் இளனென்று பெயர், இவள் ஒரு மாதம் பெண்ணாயும், மறுமாதம்

ஆணுயுமிருக்கிறுள். இவள் சாபமடைந்தவளென்று உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். நீங்களெல்லாம் அச்வமேதயாகம் செய்து, இவளுக்குள்ள பெண்ரூபத்தை மாற்றப் பிரார்த்திக்கிறேன்' என்று கூற அவர்கள் அவ்வாறே யாகம் செய்தனர். அந்த யாகத்தில் பரமேச்வரன் பரமப்பிரீதி யடைந்து 'இளனுக்குண்டாகும் ஸ்திரீரூபம் இனி வராது' என்று தெரிவித்து, அவனுக்கு எப்பொழுதும் புருஷரூபம் இருக்க அனுக்கிரஹம் செய்தார். அதன்பின் இளனுக்குப் பிறந்தவனை புரூரவஸ் பிரதிஷ்டானபுரம் என்ற பட்டணத்தை ஆண்டுவந்தான். அவ்வளவு சிறந்ததான ஸாக்ஷாத் பரமேச்வர ஸம்பந்தமான அச்வமேத யாகத்தை நான் செய்யப்போகிறேன் என்று சொல்லி (சித்தாந்த புத்தகத்தில் இதைப் பார்த்துக்கொள்ளவும்) வசிஷ்டாதி யோகிகளைக் கூப்பிடுங்கள்'' என்றுரைத்தார், ரிஷிகள் வந்தபிறகு ராமர் அவர்களை நோக்கி, 'நான் யாகம்செய்யப் போகிறேன். நீங்களெல்லாம் அதை நடப்பித்துக்கொடுக்கவேண்டும்'' என்று கூறி அவர்களைச் சேவிக்க, அந்தப் பெரியோர்களும் ஆசீர்வதித்தனர். ராகவன் உடனே பரமேச்வரனை நமஸ்கரித்து எல்லோரையும் நமஸ்கரிக்கச் சொல்ல, சகலரும் நமஸ்கரித்தார்கள், பிறகு ராகவன் லக்ஷ்மணனைப் பார்த்து, 'சுக்ரீவன், விபீஷணன் முதலிய சகலரையும் அவர்களுடைய வீரர்களுடன் சீக்கிரத்தில் வரவழைக்கலாம். சகல அரசர்களையும், பெரியோர்களையும், பிர்ம்ம ரிஷிகளையும், எல்லாரையும் சீக்கிரத்தில் வரவழைக்கலாம்' என்றுகூற யாவரும் தூதர்களால் அழைக்கப்பட்டு வந்து சேர்ந்தனர். பிறகு ராகவன் கோமதி நதிக்கரையில் நைமிசம் என்னும் வனத்தில் யாகாரம்பம் செய்தார். தங்கத்தால் செய்யப்பட்ட விக்ரஹமான பத்தினியுடன் ராமன் தீக்ஷிதராக இருந்து யாகத்தை தொடங்கினர். (தெலுங்கு பாஷையில் எழுதப்பட்ட சில வியாக்கியானங்களில் 'ராமன் பலதாரமுடையவர்' என்று கூறப்பட்டிருக்கிறது. அது உண்மையல்ல. ராமன் ஏகதார விரதமுடையவனே என்பதைச் சித்தாந்த புத்தகத்தில் பார்க்க). யாகக் குதிரை உலக சஞ்சாரத்திற்காக விடப்பட்டபொழுது லக்ஷ்மணன் காவலாகச் சென்றுன். குதிரை உலகத்தில் சஞ்சாரம் செய்துவந்தபிறகு யாகாரம்பமாகி, யாகம் நடந்துகொண்டிருந்தபோது சர்வ ரிஷிகளும், பெரியோர்களும் பரமானந்தத்துடன் விளங்கினர். 'இதுபரியந்தம் இப்படிப்பட்ட யக்யத்தைப் பார்த்ததில்லை. இந்திரன், குபேரன், யமன், வருணன் முதலியவர்களாலும் இப்படிப்பட்ட யாகம் செய்யப்பட

வில்லை' என்று கூறி எல்லோரும் களிப்புற்றனர். இவ்விதம் யாகம் ஒருவருஷ காலம் நடந்தது. இந்த யாகம் நடந்துகொண்டிருக்கும்போது அதைப்பார்க்க வால்மீகி சிஷ்யருடன்வந்து தனக்கு ஏற்பட்ட ஆசிரமத்தில் இறங்கினர். அவர் வந்ததும் ராமர் அவரைப் பூஜித்தார்.

அவ்விதம் இவர்கள் யாகசாலையில் விளங்க, ராகவன் ஸாவகாசமான வேளையில் கதைகேட்க விரும்பி, வால்மீகி முனிவருடன் வந்த குழந்தைகளைக் கானம்செய்யச்சொல்ல, அவர்கள் நாள்தோறும் இருபது ஸர்க்கம் வீதம் கானம்செய்தார்கள். (நாரதர் சொன்ன முதல் ஸர்க்கம் முதல் எல்லாஸர்க்கங்களும் வால்மீகி செய்ததே. இதைச் சித்தாந்த புத்தகத்தில் பார்க்க) அவர்களுக்கு ராகவன் ஏராளமான சம்பத்தை யளிக்க, அவர்கள் 'ரிஷி சிஷ்யர்களான எங்களுக்கு இது எதற்காக' என்றுகூறிச் சென்றுவிட்டனர். இக்குழந்தைகள் ஆதிமுதல் ராகவனைப் பிதா என்றறியாமலே கானம் செய்துகொண்டு வந்தனர். ராமனும் அறியாமலே போய்விட்டார். இக்கிரந்தம் பட்டாபிஷேகம் வரையில் ஒருபாகமும், வால்மீகி சீதையை ராமனிடம் கொண்டுவந்து விடுகிறவரையில் இரண்டாவது பாகமும், அதற்கு மேல்கதை மற்றொருபாகமுமாயுள்ளது. இந்த கிரந்தத்தைக் குசலவர்கள் கானம் செய்து கொண்டிருக்கையில், உத்தரகாண்ட பூர்வபாக முடிவில் குசலவர்கள் சீதையின் பிள்ளைகள் என்று தெரிந்துகொண்ட ராகவன் உடனே தூதர்களை வால்மீகியின் இருப்பிடத்திற்கு அனுப்பி, "சீதை உத்தமியாயிருப்பாளேயாகில், நாளைக்குச் சகலரும் இருக்கும் சபையில், தான் உத்தமியென்று சபதம் செய்து தனது பதிவிரதா தர்மத்தை எல்லோரும் அறியும்படி வெளிப்படுத்துவாளேயாகில் நாம் அவளை ஸ்வீகரிப்போம்" என்று கூறியனுப்ப வால்மீகியும் சீதையும் அதை அங்கீகரித்து மறுநாள் சபையில் சகல பெரியோர்களும், சர்வ ரிஷிகளும் இருக்க, தேவர்கள் ஆகாயத்திலிருந்துகொண்டு கவனித்துக்கொண்டிருக்கையில் வால்மீகி சீதையை யழைத்துக்கொண்டுவந்து, ராகவனைப் பார்த்து, "ராமச்சந்திர, நான் பிரசேதஸ்ஸின் பத்தாவது புத்திரன். நான் பொய் சொல்லமாட்டேன், நான் ஆயிரக்கணக்கான வருஷங்கள் தவம் செய்தவன், (வால்மீகி 'மராமரா' என்று சொல்லிக்கொண்டிருந்த வேடனல்ல, இதைச் சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்) நான் பஞ்சபூதங்களுடன் ஆறாவதான மனதுடன் 'சீதை உத்தமி'

என்று சொல்கிறேன். இவளை யங்கீகரிக்கலாம் என்று கூறினார்.
அப்பொழுது ராகவன், "ஏ, மஹர்ஷே, தங்கள் வார்த்தையை
நான் அங்கீகரிக்கிறேன். ஏற்கனவே தேவர்கள் ஸன்னிதானத்
தில் 'இவள் உத்தமி' என்று அக்னிபகவானால் அளிக்கப்பட்டிருந்
தாலும், உலக அபவாதம் வந்துவிட்டதால்தான் நானிவளைத் தியா
கம்செய்தேன். இக்குழந்தைகள் இவள் குழந்தைகளென்று நான
றிகிறேன். இவள், தான் உத்தமியென்று ஜகத்மத்தியில் காட்ட
வேண்டும்" என்றுரைத்தார். அச்சமயம், ஸர்வ தேவர்களும்
பிரத்தியக்ஷமாயிருக்க, சீதை, 'நான் ராகவனைத் தவிற மற்றயா
ரையும் மனதாலும் ஸ்மரிக்காமலிருப்பது உண்மையானால், மனோ
வாக்குக் காயங்களால் நான் ராமரையே அர்ச்சித்துக்கொண்டிருப்
பது உண்மையானால், இந்தப் பூமி எனக்கு இடம் கொடுக்கட்டும்'
என்று கூறியதும் பூமிதேவியானவள் நாகங்களால் தரிக்கப்பட்ட
சிம்ஹாஸனத்துடன் வெளிவந்து, சீதையைத் தூக்கி மடியில்வைத்
துக்கொண்டு மறைந்துவிட்டாள். உடனே தேவர்கள் புஷ்பவர்
ஷம் வர்ஷிக்க, ஜகத் முழுமையும் அத்யாச்சரியத்தை யடைந்து
மோஹித்தது. அப்பொழுது ராமன் சற்று விசனமடைந்து
பூமிதேவியைப் பார்த்து, 'என்னையும்கூட அழைத்துக்கொள்.
இல்லாவிடில் சீதையைவிடு' என்று கூறியும் சீதை வராததால்
கோபித்து, 'இப்பொழுதே நீ சீதையை விடாவிட்டால் நான்
உன்னை யழிப்பேன்' என்று கர்ஜித்தார். அப்பொழுது பிர்ம்மா
பிரத்தியக்ஷமாகி, 'ராகவ, வருந்தாதே. நீங்கள் உமது பூர்வ
வைஷ்ணவபாவத்தை ஸ்மரித்துக்கொள்ளும். முன்பு குழந்தை
களால் கானம் செய்யப்பட்ட பொழுது கேட்டாலும், நீர் மனுஷ்ய
னாக இருக்கவேண்டியதாதலால் உம்மை ஸ்மரிக்க முடியாமலிருக்க
லாம். நீர் உமது வைஷ்ணவபாவத்தை இப்பொழுது ஸ்மரித்
துக்கொள்ளும். சேஷமிருக்கும்படியான உத்தமமான ராமாயண
பாகத்தையும் கேளும். தாங்கள் உத்தம லோகத்தில் மறுபடியும்
தேவியை யடைவீர்' எனக்கூறி மறைந்தார். உடனே பூமிதே
வியும், 'ராகவ, வருந்தவேண்டாம். தாங்கள் இக்குழந்தைகளைப்
பார்த்துக்கொள்ளுங்கள். விஷ்ணுவின் ஹிருதயத்தில் லக்ஷ்மி
எப்பொழுதும் விளங்குகிறாள். ஸ்வர்க்கத்திலுள்ள பெரியோர்க
ளுக்கு அந்ததேவி சிரசில் விளங்குகிறாள். பிரம்மா கூறியது
போல் மீதியிருக்கும் உத்தரபாகமான கதையைக் கேளுங்கள்.
தாங்கள் இப்பொழுது சீதையை யடையமுடியாது' என்று கூறக்
கேட்ட ராகவன் வால்மீகி ரிஷியை நோக்கி, 'குழந்தைகளை

நாளைக்குக் கானம்செய்யச் சொல்லுங்கள்' என்றார். அப்படியே அவர்களும் மறுநாள் (உத்தர காண்டத்தில் இதுபரியந்தம் நடந்ததும் நடந்துகொண்டிருக்கிறதுமான கதை. இனி நடக்கப்போகும் கதை) உத்தரபாகமான நடைபெறப்போகிற கதையை முழுவதையும் கானம் செய்தனர். பிறகு ராகவன் சீதையை ஹிருதயத்தில் தரித்துக்கொண்டு அயோத்தியை யடைந்து விளங்கிவந்தார். அவர் சீதையைத் தவிற வேறுயாரையுமே வரிக்கவே இல்லை. ஏகதார விரதமுள்ளவராதலால் ஒவ்வொரு யாகத்திற்கும் தங்கமயமான ஸீதாவிக்ரஹத்தை வைத்துக்கொண்டு நூறு அச்வமேதயாகங்களை ஆயிரம் வருஷங்களில் செய்தார். இப்படி ஆயிரம் வருஷங்களில் யாகாதிகளைச் செய்துகொண்டு காலத்தைக் கடத்திக்கொண்டிருந்தார். உலகத்தில் சரியான காலங்களில் மழைபெய்து; யாவரும் க்ஷேமமாயிருந்தனர். ராம ராஜ்யத்தில் எவ்விதமான அதர்மமுமில்லை. இப்படியிருக்க புத்திர பௌத்திரர்களோடிருந்த கௌஸல்யா, சுமித்திரை, கைகேயி முதலிய மூவர்களும் புண்யலோகம் அடைந்து உத்தமலோகத்தை யடைந்திருக்கும் தசரதரை யடைந்தார்கள். ராகவன் சகல கர்மாக்களையும் செய்துமுடித்து விளங்கினார். இவ்விதமிருக்கையில் கேகய பட்டணத்தைப் பரிபாலித்துவந்த யுதாஜித்து என்பவன் கந்தர்வர்களால் பீடிக்கப்பட்டு அவர்களை யழிப்பதற்கு ராமனிடமிருந்து சேனைகள் வேண்டுமென்றும், யுத்தம்செய்ய சகாயம் வேண்டுமென்றும் தன் குருவின்மூலம் சொல்லியனுப்ப, ராகவன் உடனே தம்பி பரதனை யழைத்து, 'நீ உனது இரண்டு குழந்தைகளுடன் சென்று அந்த கந்தர்வ நகரத்தை ஜயித்து, அந்த ராஜ்யத்தைக் குழந்தைகளுக்குக் கொடுத்துவா' என்று கூறினார். பரதன் அதை யங்கீகரித்து (அந்த மூன்றுகோடி கந்தர்வர்கள் வதத்திற்காகவே பரத ஜனனமாதலால்) சகல சேனைகளுடன் சென்று, எட்டுநாட்கள் அஹோராத்ரம் யுத்தம்செய்து, ஸம்வர்த்தமென்ற அஸ்திரத்தால் சகலரையும் ஒழித்துவிட்டுத் தனது இரண்டு பிள்ளைகளில் தக்ஷன் என்பவனுக்குத் தக்ஷசிலை என்ற பட்டணத்தையும், புஷ்கலன் என்பவனுக்குப் புஷ்கலாவதமென்ற பட்டணத்தையும்கொடுத்து, ஐந்துவருஷம் அங்கிருந்துவிட்டு அயோத்திக்கு வந்துசேர்ந்தான்.

பிறகு ராகவன் லக்ஷ்மணனை நோக்கி, 'உனது குழந்தைகளுக்கு இரண்டு தேசங்களைப் பட்டாபிஷேகம் செய்யலாம்' எனக்

கூற, உடனே பரதன் அங்கதனுக்குக் காருபதமென்ற தேசத்தையும், சந்திரகேதுவுக்குச் சந்திரகாந்தமென்ற தேசத்தையும் கொடுக்கலாம்' என்று சொன்னான். 'அப்படியே செய்யுங்கள்' என்று லக்ஷ்மணன், பரதன் இருவரிடமும் ராகவன் சொல்ல, அவ்விருவரும் புறப்பட்டுச் சென்று அந்தந்த தேசங்களில் அந்தந்தக்குழந்தைகளுக்குப் பட்டாபிஷேகம் செய்து இரண்டு வருஷங்களில் அவ்விருவரும் திரும்பிவந்தனர். இவ்விதம் ராகவன் ஆட்சிபுரிந்திருக்கையில் பதினோராயிரம் வருஷங்கள் ஆகிவிட, காலபுருஷன் பிரம்மாவின் ஆக்ஞையால், ராகவ அபிப்பிராயத்திற்கு விரோதமில்லாமலிருப்பதற்காக, ரிஷிவேஷத்துடன் ராமரிடம் வந்து, 'நான் உம்மிடம் இரகஸ்யம் பேசவேண்டும். அதுவரையில் யாரும் உள்ளே வரக்கூடாது. அது மிகவும் இரகஸ்யமாதலால் யாருக்கும் தெரியக்கூடாது. ஆதலால் காவல் வேண்டும். யாராவது உள்ளே வந்தால், கடுமையான தண்டனை விதிக்கவேண்டும்' என்றுரைத்தான். 'அப்படியே செய்கிறேன்' என ராகவன் கூறி, லக்ஷ்மணனை நோக்கி, 'நீயே காவலாயிரு. உள்ளே யார் வந்தாலும் அவனது தலை வாங்கப்படும்' என்று கூறி, உள்ளேசென்று அவரிடம் பேசிக்கொண்டிருந்தார். காலபுருஷன் ராமரைப் பார்த்து, 'உத்தம, ராவணவத பரியந்தம் நீர் உம்மையறியாமலிருக்கவேண்டும். நேற்றுடன் அந்த நியமத்துடன் பதினோயிரவருஷமும் முடிந்ததால், நீர் இனி உம்மை யறிந்துகொள்ளலாம். உமக்குப் பிரம்மா ஞாபகப்படுத்தச் சொன்னார். நீர் உம்மைத் தெரிந்துகொண்டு புண்ணியலோகம் வரலாம்' என்றுரைக்க ராகவன் அறிந்துகொண்டு 'நான் என்னை யறிந்துகொண்டேன். நான் புண்ணியலோகம் வருகிறேன். நீர் செல்லும்' என்று சொன்னார். இதற்குள் துர்வாஸர் அரண்மனை வாயிலில் வந்து, 'லக்ஷ்மணா, நானிப்பொழுதே ராகவனைப் பார்க்கவேண்டும். நீர் சீக்கிரம் சென்று இதை ராமரிடம் தெரிவிக்கவேண்டும். இல்லாவிடில் இப்பொழுதே எல்லோரையும் சபித்துவிடுவேன். வமிசத்தை யழித்துவிடுவேன்' என்றுகூற லக்ஷ்மணன் யோசித்து, 'பலர் அழிவதைவிட நானொருவன் அழிவது சிறந்தது' எனத் தீர்மானித்து உள்ளே பிரவேசித்தான். அவன் உள்ளே வந்ததும் காலபுருஷனும் ராமரிடம் அனுமதி பெற்றுக்கொண்டு சென்றுவிட்டான். பிறகு ராகவன் 'என்ன விஷயம்' என்று லக்ஷ்மணனைக் கேட்க, அவன் துர்வாஸர் வரவைத் தெரிவித்தான். அதுகேட்ட ராமர், ஆயிரம் வருஷங்கள் தவம் செய்து அப்பொழுது

அங்கு வந்திருந்த துர்வாஸரைப் பூஜித்து ஆகாரம் செய்வித்த னுப்பினர். மறுநாள் ஸ்ரீ ராகவன் சபையிலிருக்கும்போது லக்ஷ்மணன் அங்கு வரக்கண்ட ராமர் தலைகுனிந்தார். அதைக் கண்ட லக்ஷ்மணன் 'ஸத்தியத்தை விட்டவர்கள் நரகத்தையடைய வேண்டும். தாங்கள் சத்தியத்தை விட்டுவிடக்கூடாது. ஆத லால் குற்றவாளியான என்னைச் சிக்ஷித்து ஸத்யவாதியாகலாம்' என்று கூற ராகவன் நடந்த விஷயத்தை ரிஷிகளிடம் சொல்ல, அவர்கள் 'நீர் இவன்தலையை வேறிடவாங்க நாங்கள் ஸம்மதிக்க மாட்டோம். நீர் இவனை உமதுகையால் கொல்லவேண்டாம். தியாகம் செய்வதும், தலை வாங்குவதும் ஒன்றாதலால் இவனைத் தியாகம் செய்யலாம்' எனக்கூறினர். உடனே ராகவன் லக்ஷ்ம ணனை நோக்கி, 'நீ இனி என் எதிரில் நிற்காதே' என்றுரைத்து அவனைத் தியாகம்செய்தார். லக்ஷ்மணன் அவ்விடத்தை விட்டு ஸரயூ நதிக்கரைக்குச் சென்று, சரீரத்தை விடாமல் (விஷ்ணுவின் கால்பாகத்துடன் அவதரித்ததால்) அதேசரீரத்துடன்வாஸுதேவ ரூபத்தை யடைந்தார். லக்ஷ்மணன் வெளியேறியதும், ராகவன் வஸிஷ்டாதிகளைப்பார்த்து 'தம்பிசென்ற விடத்தை நான் இப்பொ ழுதே அடைவேன்' என்றுகூறி உடனே புண்ணியலோகத்திற்கு புறப்பட யத்தனித்து சத்ருக்ன, சுக்ரீவ, விபீஷணாதிகளுக்கும் சொல்லியனுப்பினர். பிறகு ராகவன் குசலவர்களை தன் மடியில் உட்காரவைத்துக்கொண்டு, குசனுக்குக் கோசலத்தையும், லவ னுக்கு உத்கல தேசத்தையும் பட்டாபிஷேகம் செய்து அவர்களை அந்தந்த தேசங்களுக்கனுப்பினர். குசனது பட்டணத்திற்குக் குசாவதியென்றும், லவனது பட்டணத்திற்கு ஸ்ராவஸ்தியென் றும் பெயர்.

அதன் பிறகு ராமர் புண்ணியலோகத்திற்குப் புறப்பட, அயோத்தி ஜனங்களும் அவருடன் வருவதாய்ப் புறப்பட்டனர். இதையறிந்த சத்ருக்னன் தனது இரண்டுபிள்ளைகளில் மூத்தவ னுக்கு வடமதுரையையும், இளையவனுக்கு வைதிசமென்ற தேசத்தையும் கொடுத்து, ராகவனை யடைந்தான். சுக்ரீவன் அங் கதனுக்கு ராஜ்யத்தைக் கொடுத்துவிட்டுச் சகல வானரர்களுடன் ராகவனையடைந்தான். ராகவன் சுக்ரீவனைப் பார்த்து, 'நீரில்லா மல் நான் புண்ணியலோக மடையமாட்டேன். கூடவாரும்' என்று கூறி, விபீஷணனை நோக்கி, 'நீர் என்னைப் பிரியாமலிருப்பதற்கு உமக்கு என்து குலதெய்வத்தைக் கொடுக்கிறேன். நீர் என்னுடன்

வருவதாகச் சொல்லவேண்டாம்' என்று கூறி, குலதெய்வத்தைக் கொடுத்து, (இதை விபீஷணன் ஸ்ரீரங்கத்தில் வைக்கவில்லை. சித்தாந்த புத்தகத்தைப் பார்க்க) ஹநுமானை நோக்கி, எங்கு எல்லாம் ராமகதை நடக்கிறதோ அங்கெல்லாம் பலரூபங்களுடன் நீர் சென்று கதைகேட்டுக்கொண்டிரும். நமது கிரந்தமுள்ளமட்டும் நீர் இரும்' என்றுகூற, ஹநுமான், 'ஜகத்தில் இக்கிரந்தமுள்ளவரையில் கதை கேட்டுக்கொண்டிருப்பேன்' எனத் தெரிவித்தார். பிறகு ராகவன் மைந்தன், த்விவிதன், ஜாம்பவான் முதலியவர்களைப் பார்த்து, 'நீங்கள் எங்கள் புத்திரபௌத்திராதிகளை ரக்ஷித்துக்கொண்டிருங்கள், கலிவரும்வரையில் பூலோகத்திலிருங்கள்' என்றுக்ஞாபித்துவிட்டுச் சகலருடன் புறப்பட்டார். பிறகு வசிஷ்டர் மஹாபிரஸ்தான விதியைச் செய்தார். அக்னிஹோத்திரங்கள் முன்னால் சென்றன. பிர்ம்மநிஷ்டர்களான பெரியோர்கள் எல்லாரும் புறப்பட்டனர். ராமரும் புறப்பட்டார். ராமர் இருஹத்திலிருந்து புறப்பட்டதும் வலதுபுறத்தில் ஸீதை ஸ்ரீதேவியாக வந்துநின்றாள். மற்றொரு புறத்தில் பூமிதேவி நின்றாள். அஸ்திராதிகள் சகலமும் புருஷவிக்கிரகமாய்ப் புறப்பட்டன. வேதங்கள், காயத்ரீ, ஓங்காரங்கள், வஷட்காரங்களெல்லாம் பிராமண வேஷத்துடன் ராமனை யனுஸரித்தன. சகல ஜீவராசிவர்க்கங்களும் புறப்பட்டன. யாவரும் ஸரயூநதியையடைந்ததும், பிரம்மா சகல தேவர்களுடன் ஆகாயத்திலிருந்துகொண்டு ராகவனை நோக்கி, 'நீர்புண்ணியலோகம் வாரும். விஷ்ணு ரூபமாணுலும் ஆகலாம். அல்லது பிர்ம்மமாக ஜ்யோதியாய் மறைந்தாலும் மறையலாம்' என்றார். அதைக்கேட்ட ராகவன், 'அப்படியே' என்று சொல்ல, அதற்குள் முந்தி புண்ணியலோகமடைந்த லக்ஷ்மணனுடனும், பரத சத்ருக்னர்களுடனும், வைஷ்ண தேஜஸில், தாய் வயிற்றிற்பிறந்த அந்தந்த சரீரத்துடன் (ஒருவரும் சரீரத்தைக் கீழே விடாமலே) பிரவேசித்தார். உடனே விஷ்ணுமயரூபியான அந்தபகவானைச்சகலதேவதைகளும் பூஜித்து, தங்கள் மனோரதம் பூர்த்தியானதாய்ச் சந்தோஷித்தார்கள். அப்பொழுது பகவான் பிரம்மாவை நோக்கி, 'என்னுடன் வந்த சகல ஜன, ஜாதி, மிருக, பக்ஷி முதலிய என் பக்தர்களான சகலத்திற்கும் உத்தம லோகத்தைக் கொடும்' என்றுகூறி பிறகு அப்படியே ஜோதியாக பிர்ம்மமாகி மறைந்துவிட்டார். பிறகு பிர்ம்மாவும் அதையங்கீகரித்து, அவர்களுக்கு ஸாந்தானிக லோகமென்ற ஒரு லோகத்தைக் கொடுத்தார். பிறகு சகல வானரர்களும் எந்தெந்த தேவதைகளி

டத்தில் ஜனித்தார்களோ அந்தந்த தேவதைகளிடம் கலந்தார்கள். சகல திர்யக்யோநி வர்க்கங்களும் ஸரயூநதியில் ஸ்நானஞ்செய்து அந்த தேகத்தைவிட்டு உத்தம ரூபத்துடன் உத்தம லோகத்தை யடைந்தார்கள். அப்பொழுது கொஞ்சகாலம் அயோத்தியா பட்டணம் ஜனமில்லாமலிருந்தது. பிறகு ரிஷபனென்ற ராஜனுடன் சர்வ வைபவங்களுடன் விளங்கிற்று.

"இந்த சரித்திரமானது பிரம்மாவால் பூஜிக்கப்பட்டது. இது ராமாயணம் என்ற பெயருடன் கூடினது. சகல தேவர்களும் தினந்தோறும் தேவலோகத்தில் இக்கிரந்தத்தைக் கேட்கிறார்கள். இது பாபத்தைப் போக்கடிக்கக் கூடியது. புத்திமான்கள் இதை சிரார்த்த காலத்தில் கேட்கிறார்கள். சிரார்த்த காலத்தில் இதை தானம் செய்தால் பிதிர்தேவதைகள் திருப்தி யடைகின்றனர். இது புத்திரனில்லாதவனுக்குப் புத்திரனையும், தனமில்லாதவனுக்குத் தனத்தையும் அளிக்கிறது. வாசிப்பவனின் பொருட்டுத்திருப்தியை யுண்டுபண்ணினால் சர்வதேவர்களும்திருப்தியடைகிறார்கள். இக்கிரந்தத்தை வாசித்தால், அதன் மஹிமையால் இகத்தில் புத்திரபௌத்ராதிகளுடன் விளங்குவார்கள். இக்கிரந்தம் ஆயுளைக் கொடுக்கக்கூடியது. இதைக் கேட்பதால் அநேக அஸ்வமேதம், வாஜபேயம் செய்த பலன் கிடைக்கிறது. (இது அனுபவ கிரந்தமாதலால் யாரும் அனுபவித்தால்தான் ஒத்துக் கொள்வார்கள். அனுபவிக்காதவருக்கு அனுபவஞானம் தெரியாததால் அனுபவிக்க வேண்டுமென்று கவி காட்டுகிறார்) யார் இதைக் கேட்கிறார்களோ அவர்கள் விஷ்ணுவிடம் லயத்தை யடைவார்கள். நியமத்துடன் கேட்பவர்களுக்கு இது சத்தியம். கீர்த்தியை இச்சிப்பவன் தினமும் ராகவனை ஸ்மரித்தால் சிறந்த கீர்த்தியைப் பெறுவான். இதைத் தினந்தோறும் பிர்ம்மநிஷ்டனிடமிருந்து கேட்கவேண்டும். இந்த ராகவனுடைய சரித்திரமானது தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் இவைகளை அளிக்கிறது. இந்த ராமாயணம் முழுமையையும் காயத்ரீ ஸ்வரூபம். (இதைச் சித்தாந்த புத்தகத்தில் பார்க்கவும்). பக்தியுடன் ராமாயணத்தை வாசிப்பவன் பிர்ம்மாவின் ஸ்தானத்தை யடைகிறான். பிர்ம்மாவால் பூஜிக்கப்படுகிறான். இக்கிரந்தமானது சர்வ ஜகத்திற்கும் மங்களத்தை யளிக்கிறது" என்று இவ்விதம் குழந்தைகள் கானம் செய்தார்கள்.

"கல்யாணாநாம் நிதானம் கலிமலமதனம் ஜீவனம் ஸஜ்ஜநானும்
பாதேயம் யந்முமுக்ஷோ: ஸபதிபரபதப்ராப்தயே பிரஸ்திதஸ்ய
விச்ராமஸ்தானமேகம் கவிவரவசஸாம் பாவநம்பாவநாநாம்
பீஜம் தர்மத்ருமாணும் பிரபவதுபவதாம் பூதயேராமநாம"

"யோதண்டகாரண்ய நிசாசரேந்திரர்ந்
கோதண்டலீலா விஷயீசகார
வேதண்டசுண்டாயத பாகுதண்ட:
கோதண்டபாணி: குலதைவதம் ந:"

"மங்களம் கோஸலேந்திராய
மஹநீய குணப்தயே
சக்ரவர்த்தி தநூஜாய
ஸார்வபௌமாய மங்களம்"



சுபம்! சுபம்!! சுபம்!!!

ஸ்ரீராமஜெயம்.

ஸ்ரீ ஸீதாலக்ஷ்மண பரத சத்ருக்ன ஹநுமத்ஸமேத ஸ்ரீ ராமசந்திராய பரப்பிரம்மணே நம:

# ஓர் அறிவிப்பு.

சிறுகுடி பிர்ம்மஸ்ரீ பண்டித ராமாயணம் சாம்பசிவ சாஸ்திரிகள் அவர்கள் புத்ரராயும் இக்கலியில் இக்கிரந்தத்தின் உண்மையான அர்த்தத்தை ஸ்தாபிக்க வந்திருக்கும் ஓர் அவதார புருஷரும் (18) வரு காலமாக திக்விஜயம் செய்து ஸ்ரீ ராமகிருபையால் தாம் சொன்ன விஷயங்களில் எதிர்த்த வித்வான்களை ஸதஸில் ஜயித்து அனுக்ரஹித்தால் மூலரீதியான அர்த்தத்தை வெளிப்படுத்தி அதனால் திரிமதஸ்தர்களிலும் ஸந்தோஷித்த மஹா வித்வான்களால் புலபாஷைகளிலும் நற்சாக்ஷி பத்திரங்கள் பெற்று வருஷக்கணக்காக பல பட்டாபிஷேகங்களும் ஸ்ரீமத் ராமாயண நவாஹமாக 130 பட்டாபிஷேகங்களும் செய்து தன் கீர்த்தியை எங்கும் அப்ரதித்வந்த்வராய் இருந்துகொண்டு ஸ்தாபித்து வருபவருமான பண்டித, ஸ்ரீ ராமகதாமிர்த வர்ஷக, ஸ்ரீ ராமாயண விமர்சகாசார்ய, ஸ்ரீ வால்மீகி முநிஹ்ருதய தத்வஸார பிரகாசக, ஸ்ரீ ராமாயண சிரோமணி, ஸ்ரீமத் வால்மீகி ராமாயண பிரவசன சக்ரவர்த்தி பிரம்மஸ்ரீ ராமாயணம் ன்தாராம சாஸ்திரிகள் அவர்கள் ஸ்ரீமத் ராமாயண ஸம்பந்தமான (25) வ்யாக்யான பரியந்தம் அவையவை வெளிப்பட்டுள்ள பரியந்தம் வரிவிடாமல் குருவாயும் வயோதிகராயும் பிதாவாயும் பண்டிதராயும் புராணிகராயும், நடுக்காவேரி பட்டஸ்ரீ பாலஸரஸ்வதி பண்டித ஸுதர்சன பிர்ம்மஸ்ரீ நாராயண சாஸதிரிகள், பரமதகண்டன, பாஞ்சஜந்ய பிர்ம்மவித்யாபத்திராதிபர் பிர்ம்மஸ்ரீ ஸீனுவாஸ சாஸ்திரிகள், கோவிலூர் மடம் பிர்ம்மஸ்ரீ சங்கர சாஸ்திரிகள் இவர்களுக்குச் சிஷ்யராயும் கவித்வ சக்திவாய்ந்தவராயும் ஸர்வதேவதைகளையு முத்தேசித்து தனித்தனியாய் "ஸ்தோத்ர ககம்பம்" என்கிற ஸர்வதேவதா ஸ்துதி என்னும் கிரந்த கர்த்தாவாயும் விளங்கிவருபவருமான

பண்டித பிர்ம்மஸ்ரீ ராமாயணம் சாம்பசிவ சாஸ்திரிகள் அவர்களிடம் வாசித்து ஸ்ரீ ராமாயண ஸம்பந்தமட்டில் ஸர்வ புராணங்களையும் பார்த்துவிட்டு வியாக்யானங்கள் பெரியோர்களுடையதாயிருந்தாலும் சில இடங்களில் பொருந்தாமல் இருப்பதால் பெரியோர்களுடையதாயிருந்தாலும் பொருந்தாததைக் காரணங்களுடன் தள்ளிவிட்டுப் பொருந்தினதைக் குழந்தை சொன்னாலும் அங்கீகரிக்க வேண்டும் என்று ராகவனும் ஹனுமானும் குறிப்பிட்டிருப்பதால் பொருந்தியிருப்பதை அங்கீகரித்தல் வேண்டும் என்றும் குறிப்பிடுகிறார்கள். ஸ்ரீமத் ராமாயணத்திற்கு ராமாயணமே பிரதானமே தவிர வேறு எதுவும் பிரமாணமல்ல. ஆதலாலும் எந்த சாஸ்திரத்திற்கும் எந்த வேதத்திற்கும் ராமாயணம் கட்டுப்படாததலாலும் இது ஸ்வதந்திர கிரந்தமென்றிருப்பதாலும் பலவிடங்களில் வியாக்யானங்களிலும் உலக அனுஷ்டானமும் வால்மீகி ஹ்ருதயத்திற்கு விரோதமாய்ப் போயிருப்பதால் அவ்விரோதங்களைப் போக்கி உண்மையான கவிஹ்ருதயத்தை வெளிப்படுத்துவதற்காகவே ஸ்ரீராகவன் இவர்களைப் பாயஸத்தினாலேயே உண்டுபண்ணி கவிஹ்ருதயத்தை அறிவதற்கு அனுக்ரஹம் செய்திருப்பதாலும் விரோதமாய்ப் போயிருக்கும் பாகங்களை ஸ்ரீ "ஸீதாராமீயம்" என்கிற இக்கிரந்தத்திலும் "ஸ்ரீமத் வால்மீகி முனிஹ்ருதய தத்வஸார பிரகாசிகை என்கிற ஸ்ரீமத் ராமாயண ஸித்தாந்தம் என்கிற கிரந்தத்திலும் ஒவ்வொன்றிலும் எதிர்க்கக்ஷியின் அபிப்பிராயத்தைக் காட்டிக் காரணங்களுடன் எதிர்க்கக்ஷியை ஸர்வத்திற்கும் முதலான நாரத வால்மீகியின் ஸ்வயமான மூலவாக்கியத்தால் எந்த கட்டத்திற்கு யார்வாக்கியத்திற்கு முதல் கௌரவம் என்று இப்படி கிரமத்தால் பூர்வபக்ஷம் செய்து கவிஹ்ருதயத்தை அனுக்ரஹத்தால் ஒவ்வொரு கட்டத்திலும் அறிந்து ஸ்தாபித்து இருப்பதால் மஹாவித்வான்கள் யாராயிருந்தபோதிலும் மூலக்கிரந்தத்தை இக்கிரந்தத்துடனும் அச்சிலிருந்து இன்னும் மூன்று மாதத்திற்குள் வெளிவருகிற ஸித்தாந்த புஸ்தகத்துடனும் பொறுமையுடன் த்வேஷமில்லாமல் வாசித்துவிட்டு நன்றாயாலோசித்து எந்த இடமாவது பொருத்தமில்லையென்று மூலப்படி பக்தர்களுக்குப் படுமானால் வியங்கிய, த்வனி, யுக்தி, விசேஷார்த்த வியாக்யானங்கள் இல்லாமல் மூலச்லோகத்தை எடுத்துக் காட்டினால் வால்மீகி நாரதரிடம் தெரிந்துகொண்டதுபோல் என்றைக்கும் பெற்றுக்கொண்டு அந்த இடத்தை மாற்றிக்கொள்ளத் தயாராக இருக்கிறார்கள்.

பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகள் அவர்கள் இக்கிரந்தத்தில் ராகவ குணங்களில், ஸத்தியத்தில், தர்மத்தில் கொஞ்சம்கூட குன்றவு இல்லை என்பதைத் ஸ்தாபிப்பதற்காகவே பிறந்து வந்திருப்பதால் ஸ்ரீமத் ராமாயணத்தில் சொல்லிருக்கும்படி சாஸ்திரிகள் அனுபவித்துக்கொண்டும் இருப்பதால் பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகள் அவர்கள் ராகவனிடத்தில் ராகவன் தாடகா வதத்தில் ஸ்திரீ வதம் செய்தவர் என்றும் கரவதத்தில் காலைப் பின்திப் போட்டார் என்றும் வாலிவதத்தில் ராமன் வாலியை மறைந்தடித்தார் என்றும் மற்றும் சில இடங்களில் தசரதன் சுல்கம்வைத்து கைகேயியைக் கலியாணம் செய்துகொண்டார் என்றும் ஸீதை, ஸுக்ரீவன், ராமன் இவர்கள் பொய் சொன்னார்கள் என்றும் இப்படிப் பலவிதமான தோஷங்களை ராகவாதிகளிடம் இப்பொழுது லோகத்தார் ஆரோபணம் செய்திப்பதாலும் ராகவ குணங்களுக்கும் தோஷங்களை ஏராளமாய்ச் சொல்லிக்கொண்டு வருவதாலும் அதுகளை ஸஹிக்காமல் பகவான் அதுகளுடைய நிவாரணத்திற்காகவே ஸ்ரீ சாஸ்திரிகள் அவர்களை அவதரிக்கும்படிசெய்து ஸத்யத்தைஸ்தாபிக்கும் நிமித்தத்தில் எவ்வித கஷ்டங்கள் வந்தாலும் அதுகளிலிருந்து காப்பதாய் அனுக்ரஹம் செய்திருப்பதால் இவர்கள் எவர்களாலும் ராமன் எப்படி எவராலும்ஜயிக்கமுடியாதவராயிருந்தாரோ அப்படி ஜயிக்கமுடியாதவர் என்றே ஸ்தாபனம். தவிர ராகவன் யுத்தத்தில் இன்று ராகவனாவது மிச்சம் அல்லது ராவணனாவது மிச்சம் என்றபடியும் இந்த ஸர்வ ஸேனையையும் அழிக்கும்படியான இந்த அஸ்திரம் எனக்குத் தெரியும் பரமசிவத்திற்குத் தெரியும் என்றபடியும் நான் ஸமுத்ரத்தைத் தாண்டுவேன் அல்லது பிராணனை விடுவேன் என்றபடியும் என்து ஸ்ரீராமத்வத்தை இன்று இந்த ஜகத் பார்க்கட்டும் என்று சொன்னபடியும் பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகளும் தானாவது மிச்சம் அல்லது ஸ்ரீ ராமாயணத்திற்கும் ராகவனுக்கும் அபவாதம் சொல்லுகிறவர்களாவது மிச்சம் என்றும் இந்த ஸமன்வயயுக்தி தனக்குத் தெரியும் அல்லது ஸ்ரீ ராகவனுக்குத் தெரியும் என்றும் ஸ்ரீமத் வால்மீகி ராமாயண பிரவசனத்தில் உலகத்தில் பலரும் வ்யாக்யாதாக்களும் பல தோஷங்களை இக்கிரந்தத்தில் சொல்லுவதால் அதுகளைப் போக்கி இவர்கள் சொல்லுவதுதான் உண்மை, இவருக்குமேல் யாருமே கிடையாது என்றும் ஸ்ரீமத் வால்மீகி ராமாயண பிரவசன சக்ரவர்த்தி என்றும் விளங்குவோம் அல்லது பிராணனை விடுவோம் என்றும் ஸ்ரீராகவன் என்து ஸ்ரீராமத்வத்தை இந்த ஜகத் பார்க்கட்டுமென்றபடி

ஸத்ய தர்மாதிகள் ஸ்தாபனத்திற்காகப் பிறந்து, ஸ்ரீ ராமாயணத்திற்கும் ராகவாதிகளுக்கும் சொல்லும் அபவாதங்களாகிற ராவணத்வத்தைப் போக்கிற தனது ஸ்ரீஸீதா ராமத்வத்தை இந்த ஜகத் இப்பொழுது பார்க்கட்டும் என்றும் சொல்லி ராமன் ஸ்தாபித்ததுபோல் இவர்களும் ஸ்தாபித்துக்கொண்டு வருவதாலும் ராமன் இருந்தபரியந்தம் மற்றவரால் ஜயிக்கமுடியாமல் இருந்து எப்படி புண்யலோக மடைந்தாரோ அப்படியே பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகளும் அவர்களுக்கு ராமானுக்ரஹம் இருப்பதால் எவர்களாலும் ஜயிக்க முடியாமல் இருந்துவிட்டு புண்யலோகம் போகப்போவதாலும் பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகள் செய்திருக்கும் ஸித்தாந்தங்களை எவர்களாலும் பிசகென்று சொல்லி ஜயிக்க முடியாதென்றும் ஸித்தாந்தம். பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகள் அவர்கள் உபன்யாஸங்களில் ஈடுபட்ட மஹாவித்வான்களாலும் புலபக்த சிகாமணிகளாலும் கொடுக்கப்பட்ட பல பட்டங்களை அர்த்தங்களையே லக்ஷ்யம் செய்யாமலிருக்கும் இவர், அவர்கள் மனோபீஷ்டங்களுக்காக அப்பட்டங்களையும் அர்த்தங்களையும் பெற்றுக்கொண்டு மொத்தமாக 135 பட்டாபிஷேகங்களை நாலுதிக்குக்களிலும் சென்று செய்து வடதேசங்களிலும் ஸஞ்சரித்துவிட்டு கவிஹ்ருதயமான தன் ஸித்தாந்தங்களை எங்கும் ஸ்தாபனம் செய்து த்வேஷத்தால் எதிர்த்தவர்கள் ஸகலரையும் ஜயித்துவிட்டு ஸ்ரீமத் வால்மீகி ராமாயண பிரவசன சக்ரவர்த்தி என்று ராமனது மஹாசபையில் ஸ்ரீ ராம பட்டாபிஷேகதினத்தில் பட்டாபிஷேகமும் செய்யப்பட்டு அதற்கடையாளமாக வீரகண்டாமணியுடன் கூடின மேதாடாவையும் பரிசாகப் பெற்று விளங்குவதால் ராமானுக்ரஹமுள்ள சாஸ்திரிகள் அவர்களை இனி எவர்களாலும் ஜயிக்க முடியாது என்றும் இவர் சகலரையும் ஜயித்துவிட்டதாகவும் ஸ்தாபனம். இவர்கள் இப்பொழுது அடைந்திருக்கும் பட்டமானது இந்திரனுக்கு இந்திரத்வம் என்ற மஹிமைக்கும், ருத்ரனுக்கு ருத்ரத்வம் என்ற மஹிமைக்கும் விஷ்ணுவுக்கு விஷ்ணுத்வம் என்ற மஹிமைக்கும் துல்யமானது. இதுகளை எப்படி ஜயிக்க முடியாததோ அப்படியே ஸ்ரீஸீதா ராமத்வமும் நெருங்கமுடியாதது என்பது ஸத்யம். இக்கிரந்தத்தில் உண்மையான அர்த்தத்தை ஸ்தாபிப்பதற்காக இவருக்கு பகவான் சக்தியுடன் கூடின ஸீதாராமன் என்ற பெயரையும்கொடுத்து உலகத்தை ஜயிப்பதற்காக ஸ்ரீ ராம என்ற தாரக மந்த்ரத்தையும் நேரிட உபதேசித்து ஸர்வ ஆபத்துக்களின் நின்றும் கார்ப்பதாயும் அனுக்ரஹம் செய்து அனுப்பியிருப்பதாலும், உள்ளதை ராக இருக்கிறார்கள்.

உள்ளபடி சொல்லவேண்டுமாதலால் அப்படியே சொல்லுவதான இதுகளில் ஒன்றும் கர்வ, ஆத்மஸ்துத்தியங்களே கிடையாதாதலாலும் அனுக்ரஹத்தால் இவர்களால் இப்பொழுது வெளிவந்திருக்கும் இக்கிரந்தத்தையும் வரப்போகும் ஸித்தாந்த புஸ்தகத்தையும் பக்தகோடிகள் ஸ்ரீ ராமபக்தியில் ஈடுபட்டவர்களாய்க்கொண்டு அதையும் வாங்கிப்பார்த்து மிகவும் பகவத் குணங்களில் ஈடுபட்டு அனுக்ரஹத்தால் சதுர்வித புருஷார்த்தத்தையும் அடைந்து விளங்குமாறு பகவானைப் பிரார்த்திக்கிறோம். பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகள் அவர்கள் சொல்லும் அர்த்தங்களே அதுவே ஸத்யம் என்று பகவான் தான் அங்கீகரித்ததாக ஒவ்வொரு பட்டாபிஷேகத்திலும் மழைமூலம் காட்டிவருவதும் பிரத்யக்ஷமே. இவ்வளவும் இக்கிரந்தத்தில் உள்ளதே. உள்ளதைச் சொல்லுபவரிடத்தில் பக்தியை விட்டுவிட்டு கோபம்கொண்டு எதிர்க்கவேண்டுமென்ற எண்ணமுள்ளவர்கள் அனுவச்யமாக தூஷணைகளைச் செய்யாமல் பொதுவான ஸபைசேர்த்து, ராமாயண மூலத்தில் உழைப்பு, ஆராய்ச்சி ஞானம், விவஹாரஞானம், ஸமன்வயஞானம், இப்படியுள்ள நால்வரை மத்யஸ்தராக வைத்துக்கொண்டு பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகள் அவர்களை யோக்யதை யிருந்தால் மூலப்படி ஜயித்துக்கொள்ளலாம் என்று நாம் மிகவும் வணக்கமாய் தெரிவிக்கிறோம்.

பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகள் ராகவன் தனக்கு உலகத்தில் பிரகடனம் செய்யும்படி கொடுத்தாயும் வேதசாஸ்திராதிகளைப் படித்தால் மட்டில் அறியமுடியாததாயும் அனுக்ரஹத்தால் மட்டில் அறியத்தகுந்ததாயும் உள்ள ஸ்ரீமத் ராமாயணத்தில் வால்மீகியின் ஹ்ருதயமான உண்மையான அர்த்தத்தை ஸ்ரீராமானுக்ரஹத்தால் அறிந்து ஸ்தாபனம்செய்ய வந்திருப்பதால் ராகவனை கூனி, வாலி ராவணாதிகள் நிந்தித்ததுபோல் அதை ராமன் லக்ஷயம் செய்யாமல் தன் லக்ஷயத்தில் இருந்ததுபோல பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகளும் வந்த காரியத்தில் கண்ணுயிருந்து துஷ்டர்கள் நிந்தனைகளை லக்ஷயம் செய்யாமல் பகவத் கிருபையுடன், பகவான் ராவணாதிகளை ஸம்ஹரித்துவிட்டு பட்டாபி ராமனாக விளங்கினதுபோல், ராவணத்வமாகிற தோஷங்களை ஸம்ஹரித்து வால்மீகி ஹ்ருதயமான ஸித்தாந்தங்களை எங்கும் ஸ்தாபித்துக்கொண்டு தான் பூமண்டலத்தில் உள்ளபரியந்தம் ஸ்ரீமத் வால்மீகி ராமாயண பிரவசன சக்ரவர்த்தி என்ற பெயருடன், விளங்கிக்கொண்டும் விளங்கவும்

போகிறார்கள் என்றும் ஸ்தாபிக்கிறோம்.

வால்மீகி கிரந்தம் செய்துவிட்டு, தான் செய்தேன் என்று சொல்லாமல் அவர் கேட்டார், அவர் செய்தார் என்று சொன்னபடி அக்கிரந்தத்தை அனுஷ்டிக்கும் பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகள் அவர்களும் செய்தார், சொல்கிறார், விளங்குகிறார் என்று நாமும் குறிப்பிடுகிறோம்.

இப்படிக்கு,

பண்டித, ஸ்ரீ ராமகதாமிர்த வர்ஷக, ஸ்ரீ ராமாயண விமர்சகாசார்ய, ஸ்ரீ வால்மீகி முநிஹ்ருதய தத்வஸார பிரகாசக, ஸ்ரீ ராமாயண சிரோமணி, ஸ்ரீமத் வால்மீகி ராமாயண பிரவசன சக்ரவர்த்தி சிறுகுடி பிர்ம்மஸ்ரீ

**ராமாயணம் ஸீதாராம சாஸ்திரிகள்.**

---